ஸ்ரீராமஜயம்

கவிச்சக்கரவர்த்தி

கம்பநாட்டாழ்வாரரு

இரண்டாவது

# அயோத்தியாகாண்டம்.

சென்னைக்கல்விச்சங்கத்துத்

தமிழ்ப்புலவர்

திரு-வேங்கடாசலமுதலியார்

முன்பதித்ததற்கிணங்க

புங்கத்தூர்

கந்தசாமிமுதலியாரால்

ஆற்காடு

முத்தியாலு

வாணிநிகேதனவச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

சென்னை

உருத்திரோற்காரிஞு கார்த்திகைமீ

# விளம்பரம்.

இதினாலே சகலருக்கும் தெரியப்படுத்துகிறது என்ன என்றால்.

இந்த ஸ்ரீமத்கம்பராமாயணம் அயோத்தியாகாண்டத்தில்-௬௰௯ பக்கம்தொடங்கி, பின்தொடர்ந்துவருகிற அந்தந்தத்திருவிருத்தத்திலும், அடிதோறும் உள்ள சொற்கள் எல்லாத்தையுமே, எழுத்துச் சந்தி பண்ணாமலும் விகாரப்படுத்தாமலும், அடிதொடைநோக்கியும், வேண்டும் இடம் அறிந்தும், சிலதுகளை மாத்திரம்,எழுத்துச் சந்திபண்ணியும் விகாரப்படுத்தியும், மற்றதுகளை எல்லாம் சந்திபிரித்தும் அச்சிற்பதிப்பித்து இருக்கிறோம் அப்படி ஏதுக்காக செய்யப்பட்டது என்றால், இதற்குமுன்னமே லோகோபகாரம் ஆக, எம்மால்அச்சிற்பதிப்பிக்கப்பட்டிருக்கின்ற சில சுவடிகளை பார்வைஇட்டவர்களில், இந்தபிராந்தியத்து பிரபுக்களும் வித்துவான்களும் புலவர்களும் கவிராயன்மார்களும் உபாத்தியாயர்களும் ஆயிருக்கிற சில பெயர்கள், அந்த சுவடிகளில் பயன் இல்லாத சந்தியையும் விகாரத்தையும்விலக்கி, பயன்உள்ள சந்தியையும் விகாரத்தையும்வைத்துக்கொண்டு, அதுகள்அச்சிற்பதிப்பிக்கப்பட்டிருக்கையினாலே, இத்தமிழ்ஆனதுலோகத்துக்கு உபகாரம் ஆகவேணும்என்றுநமதுமுன்னோர்கள் நினைத்தபடிக்குநாங்கள் பிரயோசனம்கண்டோம்; ஆகையால் அப்படியே இதிலும் செய்யப்படவேணும் என்று எம்மைக் கேட்டுக் கொண்டார்கள்: இதுவும் அல்லாமல் தமிழ் இலக்கணம் படித்தும், பலசொற்களுக்கும் உறுப்புகளுக்கும்சொன்ன பொது விதிகளையும், சிலசொற்களுக்கும் உறுப்புகளுக்கும் சொன்ன சிறப்பு விதிகளையும் கொண்டு, இன்ன இடத்திலே சந்தியாவது விகாரமாவது வேண்டும், இன்ன இடத்திலே அது வேண்டாம், என்று ஓர்ந்து உணர்ந்து, பயன் உள்ளசந்தியையும் விகாரத்தையுமே அனுசரித்து, நமது முன்னோர்கள் கருதியபடிக்கு லோகோபகாரத்தை நிலை நிறுத்தாமல், பயன் இல்லாத சந்தியையும் விகாரத்தையுமே எங்கெங்கும் அனுசரிக்கப்புறப்பட்டு, அந்தலோகோபகாரத்தை நிலைகெடுக்கிற இளங்கல்விமான்கள் பலபெயர்கள் இருக்கிறார்கள், அவர்கள் சந்திப்பேய் அறையாமலும் விகார வெறிபிடியாமலும், அவர்களுக்குதெளிவு உண்டாகி, கலக்கம் தீரும்படியாய்,இந்த சந்தியையும் விகாரத்தையும் குறித்து, சந்திவிளக்கம் என்று ஒரு நூல்செய்யவேணும் என்றும் கூடக்கேட்டுக்கொண்டார்கள்.

அவர்களாலே கேட்டுக்கொள்ளப் பட்ட இந்தஇரண்டும், லோகோபகாரமா இருக்கையால், யாமும் அதுகளுக்கு உடன் பட்டோம். அதற்காக, கற்றவர்களுக்கே செம்பாதி பொருள் விளங்காது என்று

லோக வதந்தி ஆயிருக்கிற, இந்த ஸ்ரீமத்கம்பராமாயணத்திலே, மேற்படிசந்தியையும் விகாரத்தையும் தகுந்தபடி பிறிவினைசெய்தால்,அது முழுதும் பொருள் விளங்கும் என்று எண்ணி, முதலிலே அயோத்தியாகாண்டத்தில் அறுபதாம்பக்கம் தொடங்கி, தேர்ந்த ஒரு கல்லகல்விமான் ஆனவர், ஒருவரிடத்தில் தாம்கற்றபோதும்,தாமேகற்கிறபோதும், தாம் ஒருவனுக்கு கற்பிக்கும்போதும், தமக்கும் கேட்போர்க்கும் பொருள்விளங்கி, இவர் கற்றவர்தாம் என்று கேட்டோர்தம்மை மதிக்கும்படியாய், எப்படி சந்தியையும் விகாரதனதயும்விலக்கி, பதங்களை பிரித்து படிப்பாரோ, அப்படியேபிரித்து அச்சிற் பதிப்பிக்கப்பட்டிருக்கிறது. இதினாலே ஆரணிய காண்டம் பாதி வரைக்கும்போயும், இதுவரைக்கும் யாதொரு திருவிருத்தமும் எமக்கு அர்த்தம் ஆகாததுஇல்லே; இப்படி செய்யாததற்கு முன்னே, எமக்கு இதில் இருந்த மயக்கமும் இப்படிசெய்தபின்பு அல்லவோ தீர்ந்து; உங்களுக்கும் இப்படியே அனுபவம் ஆகலாம் ஊன்றிப்பார்த்தால் இந்தவிளம்பரத்தினாலேகூட அந்த அனுபவம் காணல்ஆம், எப்படிஎன்றால், இதிலே இருக்கிற சொற்களை, வேண்டும் இடங்களிலே சந்தி விகாரங்களை வைத்துக்கொண்டு, வேண்டா இடங்களிலே அதுகளை விலக்கி, எழுதியபடியால், இதைவாசிக்கிறதற்கும், வாசித்தபின்பொருள் அறிகிறதற்கும், அதிசுலபம் ஆயிருக்கிறதால், இதைக்கண்டு அறியுங்களேன்

இனி சந்தியாவது விகாரமாவது, பயன்நோக்கி இன்ன இடத்திலே வேண்டும், பயன் அல்லாமையால் இன்னஇடத்திலேவேண்டாம் என்று ஓர்ந்து உணராமல்,சந்தியையும் விகாரத்தையும் எங்கெங்கும் கொண்டு, நமது முன்னோர்கள் கருதிய லோகோபகாரத்தை கெடுக்கும்சந்திவிகார அபிமானிகள் ஆகிய இளங்கல்விமான்களுக்கு,இச்சந்திவிகாரங்களின் விவரங்களையும், இதுகளால்வரும்பயன்களையும், இலக்கணங்களாலேயும் இலக்கியங்களாலேயும் இதுகள் பயன்உள்ள சந்தியும் விகாரமும் இதுகள்பயன் இல்லாத சந்தியும் விகாரமும் என்று எடுத்துக்காட்டுதற்காக, மேலே சொல்லிய புத்திமான்கள் கேட்டுக்கொண்டபடி, சந்திவிளக்கம் என்று ஒரு நூலும் செய்யப்படும். அதிலே இந்த சந்தியையும் விகாரத்தையும்பிறிவினைசெய்தற்கு வயனங்களும், அதினாலேவரும் பயன்களும், அப்படிபிறிவினை செய்யாவிட்டால் வரும் நஷ்டங்களும், பிறிவினைசெய்து காட்டச் சொல்லிகேட்டுக்கொண்டவர்கள் பெயர்களும், விளங்கும்.



ஹரி ஓம்.







நன்றாக குருவாழ்க குருவேதுணை.

கம்பநாட்டாழ்வார்திருவடிகளேசரணம்.

# ஸ்ரீமத்கம்பராமாயணம்.

## உ-வது. அயோத்தியாகாண்டம்.

### முதலாவது - மந்திரப்படலம்.

காப்பு.

வானின்றிழிந்துவரம்பிகந்தமாபூதத்தின்வைப்பெங்கும்
ஊனுமுயிருமுணர்வும்போலுள்ளும்புறத்துமுளனென்ப
கூனுஞ்சிறியகோத்தாயுங்கொடுமையிழைப்பக்கோற்றுறந்து
கானுங்கடலுங்கடந்திமையோரிடுக்கண்காத்தகழல்வேந்தை. (௧)

(வேறு.) மண்ணுறுமுரசினமழையினார்ப்புற
பண்ணுறுபடர்சினப்பருமயானையான்
கண்ணுறுகவரியின்கற்றைசுற்றுற
எண்ணுறுசூழ்ச்சியினிருக்கைபெய்தினான். (௨)

புக்கபின்னிருபரும்பொருவில்சுற்றமும்
பக்கமும்பெயர்கெனப்பரிவினீக்கினான்
ஒக்கநின்றுலகளித்தியோகினெய்திய
சக்கரத்தவனெனத்தமியனாயினான். (௩)

சந்திரற்குவமைசெய்தாளவெண்குடை
அந்தரத்தளவுநின்றளிக்குமாணையான்
இந்திரற்கிமையவர்குருவையேய்ந்தநன்
மந்திரக்கிழவனைவருகென்றேவினான். (௪)

பூவருபொலஞ்சுழற்பொருவின்மன்னவன்
காவலினனையின்கடவுளாமெனத்
தேவருமுனிவருமுணருந்தேவர்கள்
மூவரிலொருவராமுனிவன்றெய்தினன். (ரு)

குலமுதற்றொன்மையுங்கலையின்குப்பையும்
பலமுதற்கேள்வியும்பயனுமெய்தினோர்
நலமுதனலிவிலும்நடுவுநோக்குவார்
சலமுதலறுத்தருந்தருமந்தாங்கினோர் (சு)

(வேறு.) உற்றதுகொண்டுமேல்வந்துறுபொருளுணருங்கோளார்
மற்றதுவினையின்வந்ததாயினுமாற்றலாற்றும்
பெற்றியர்பிறப்பின்மேன்மைப்பெரியவாரியநாலும்
கற்றவர்மானநோக்கிற்கவரிமாவனையநீரார். (எ)

காலமுமிடனுமேற்றகருவியுந்தெரியக்கற்ற
நூலுறநோக்கித்தெய்வநுனித்தறங்குனித்தமேலோர்
சீலமும்புகழ்க்குவேண்டுஞ்செய்கையுந்தெரிந்துகொண்டு
பால்வருமுறுதியாவுந்தலைவற்குப்பயக்குநீரார். (அ)

தம்முயிர்க்குறுதியெண்ணார்தலைமகன்வெகுண்டபோதும்
வெம்மையைத்தாங்கிநீதிவிடாதுநின்றுரைக்கும்வீரர்
செம்மையிற்றிறம்பல்செல்லாத்தேற்றத்தார்தெரியுங்காலம்
மும்மையுமுணரவல்லாரொருமையேமொழியுநீரார். (கூ)

(வேறு.) நல்லவுந்தீயவுநாடிநாயகற்
கெல்லையின்மருத்துவனியல்பினென்னுவார்
ஒல்லைவந்துறுவனவுற்றபெற்றியின்
தொல்லைநல்வினையெனவுதவுஞ்சூழ்ச்சியார். (க0)

அறுபதினாயிரரொன்றுமாண்டடைக்
குறுநிலவோன்றிவற்குணர்வென்றன்னலாம்
பெறலருஞ்சூழ்ச்சியர்திருவின்பெட்பினர்
மறிதிரைக்கடலெனவந்துசுற்றினார். (கக)

முறைமையினெய்தினர்முந்தியந்தமில்
அறிவனைவணங்கித்தம்மரசைக்கைதொழு
திறையிடைவரன்முறையேயியேற்றசொற்
றுறையுறுபெருமையானருளுஞ்சூடினர். (கஉ)

அன்னவரருளமைந்திருந்தவாண்டையில்
மன்னனுமவர்முகம்மாறிநோக்கினன்
உன்னியதரும்பெறலுறுதியொன்றுள
தென்னுணர்வினையகீரினிதுகேட்கென. (௧௩)

வெய்யவன்குலமுதல்வேந்தர்மேலவர்
செய்கையினொருமுறைதிறம்பலின்றியே
வையம்யானாண்டவாண்டெங்கள்மாட்சியால்
ஐயமிலறுபதினாயிரம்மரோ. (௧௪)

கன்னியர்க்கமைவருங்கற்பின்மாநிலம்
தன்னையித்தகைதரத்தருமங்கைதா
மன்னுயிர்க்குறுவதேசெய்துவைகினேன்
என்னுயிர்க்குறுவதுஞ்செய்யவெண்ணினேன். (௧௫)

விரும்பியமுப்பெனும்விடுகண்டயான்
இரும்பியலனந்தனுமிசைந்தயானையும்
பெரும்பெயர்க்கிரிகளும்பெயரத்தாங்கிய
அரும்பொறையினிச்சிறிதாற்றவாற்றலேன். (௧௬)

நங்குலக்குரவர்களவையினீங்கினார்
தங்குலப்புதல்வரோதரணிதாங்கப்போய்
வெங்குலப்புலன்கெடவீடுநண்ணினார்
எங்குலப்புறுவதொன்றெண்ணிநோக்குகேன். (௧௭)

வெள்ளநீருலகினில்விண்ணினாகரில்
தள்ளரும்பகையெலாந்தவிர்த்துநின்றயான்
கள்ளரிற்கரந்துறைகாமமாதியா
உள்ளுறைபகைஞருக்கொதுங்கிவாழ்வெனோ. (௧௮)

பஞ்சிமென்றளிரடிப்பாவைகோல்கொள
வெஞ்சினத்தவுணர்தேர்பத்தும்வென்றுளோற்
கெஞ்சலில்மனமெனுமிழுதையேறிய
அஞ்சுதேர்வெல்லுமீதருமையாவதோ. (௧௯)

ஓட்டியபகைஞர்வந்துருத்தபோரிடைப்
பட்டவரல்லரோற்பரமஞானம்போய்த்
தெட்டவரல்லரோற்செல்வமீண்டென
விட்டவரல்லரோல்யாவர்வீடுளார். (௨௰)

இறப்பெனுமெய்ம்மையையிம்மையாவர்க்கும்
மறப்பெனுமதனின்மேற்கேடுமற்றுண்டோ
துறப்பெனுந்தெப்பமேதுணைசெயாவிடில்
பிறப்பெனும்பெருங்கடல்பிழைக்கலாகுமோ. (உக)

அருந்திறப்பமைவருந்துறவுமவ்வழி
தெரிந்துறவெனவிருந்தெளிவுமாய்வரும்
பெருந்திறலுளவெனிற்பிறவியென்னுமில்
இருஞ்சிறைகடத்தலினினியதியாவதே. (உஉ)

இனியதுபோலுமிவ்வரசையென்னுமோ
துனிவருநலனெனத்தொடர்ந்துதோற்கலா
நனிவரும்பெரும்பகைநவையினீங்கியத்
தனியரசாட்சியிற்றாழுமுள்ளமே. (உங)

உம்மையானுடைமையினுலகம்யாவையும்
செம்மையினோம்பிநல்லறமுஞ்செய்தனென்
இம்மையினுதவிநல்லிசைநடாயநீர்
அம்மையுமுதவுதற்கமையவேண்டுமால். (உச)

இழைத்தவினையுங்கடக்கவென்றுதல்
தழைத்தபேரருளுடைத்தவத்தினாறுமேல்
குழைத்ததோரமுதுடைக்கோரநீக்கிவே
றழைத்துவிடக்கினையருந்தலாகுமோ. (உரு)

கச்சையங்கடகரிக்கழுத்தின்கண்ணுற
பிச்சமுங்கவிகையும்பெய்யுமின்னிழல்
நிச்சயமன்றெனினெடிதுநாளுண்ட
எச்சிலைநுகருவதின்பமாகுமோ. (உசா)

மைந்தனையின்மையில்வரம்பில்காலமும்
நொந்தனனிராமனென்றுனைவநிக்குவான்
வந்தனனினியவன்வருந்தயான்பிழைக்
குய்ந்தனன்போவதோருறுதியெண்ணினேன். (உஎ)

இறந்திலன்செருக்களத்திராமன்றாதைதான்
அறந்தலைநிரம்பமூப்படைந்தபின்னரும்
துறந்திலனென்பதோர்சொல்லுண்டானபின்
பிறந்திலனென்பதிற்பிறிதுண்டாகுமோ. (உஅ)

பெருமகனென்வயிற்பிறக்கச்சிதையாம்
திருமகள்மணவினைதெரியக்கண்டயான்
அருமகள்நிறைகுணத்தவனிமாதெனும்
ஒருமகள்மணமுங்கண்டுவப்பதாயினேன். (௨௯)

நிவப்புறுநிலனெனுநிரம்புநங்கையும்
சிவப்புறுமலர்மிசைச்சிறந்தசெல்வியும்
உவப்புறுகணவனையுயிரினெய்திய
தவப்பயன்றாழ்ப்பதுதருமமன்றரோ. (௩௰)

ஆதலாலிராமனுக்கரசைநல்கியிப்
பேதைமைதாய்வரும்பிறப்பைநீக்குவான்
மாதவந்தொடங்கியவனத்தைநண்ணுவேற்
கியாதுநுங்கருத்தெனவினையகூறினான். (௩௧)

(வேறு.) திரண்டதோளினனிப்படிச்செப்பலுஞ்சிந்தை
புரண்டுமீதிடப்பொங்கியவுவகையராங்கே
வெருண்டுமன்னவன்பிரிவெனும்விம்முறுநிலையால்
இரண்டுகன்றினுக்கிரங்குமோராவெனவிருந்தார். (௩௨)

அன்னராயினுமரசனுக்கதுவலதுறுதி
பின்னரில்லெனக்கருதியும்பெருநிலவரைப்பில்
மன்னுமன்னுயிர்க்கிராமனின்மன்னவரில்லை
என்னவுன்னியும்விதியதுவலியினுமிசைந்தார். (௩௩)

இருந்தமந்திரக்கிழவரதெண்ணமுந்தன்பால்
பரிந்தசிந்தையம்மன்னவன்கருதியபயனும்
பொருந்துமன்னுயிர்க்குறுதியும்பொதுவுறநோக்கி
தெரிந்துநான்மறைத்திசைமுகன்றிருமகன்செப்பும். (௩௪)

நிருபநின்குலமன்னவர்நேமிபண்டுருட்டி
பெருமையெய்தினர்யாவரோயிராமனைப்பெற்றார்
கருமமேயிதுகற்றுணர்ந்தோய்க்கினிக்கடவ
தருமமும்மிதுதக்கதேநினைத்தனைதகவோய். (௩௫)

புண்ணியந்தொடர்வேள்விகள்யாவையும்புரிந்த
அண்ணலேயினியருந்தவமியற்றவுமடுக்கும்
வண்ணமேகலைநிலமகள்மற்றுனைப்பிரிந்து
கண்ணிழந்திலளெனச்செயும்நீதந்தகழலோன். (௩௬)

புறத்தாரமொருபொருளினிப்புகல்வின்றதெவனோ
அறத்தின்மூர்த்திவந்தவதரித்தானென்பதல்லால்
பிறத்துயாவையுங்காத்தலைவின்றுறத்துடைக்கும்
திறத்துமூவருந்திருத்தியதிருத்துமத்திறலோன். (௧௭)

பொன்னுயிர்த்தபூமடந்தையும்புவியெனுந்திருவும்
இன்னுயிர்த்துணையிவனெனநினைக்கின்றவிராமன்
தன்னுயிர்க்கென்கைபுல்லிதுதற்பயந்தெடுத்த
உன்னுயிர்க்கெனநல்லன்மன்னுயிர்க்கெலாமுரவோய். (௧௮)

வாரமென்னினிப்பகர்வதுவைகலுமனையான்
பேரினல்வருமிடையுறுபெயர்கின்றபயத்தால்
வீரநின்குலமைந்தனைவேதியர்முதலோர்
யாரும்யாஞ்செய்தநல்லறப்பயனெனவிருப்பார். (௧௯)

மண்ணினும்நல்லன்மலர்மகள்கலைமகள்கலையூர்
பெண்ணினும்நல்லன்பெரும்புகழ்ச்சனகியோநல்லன்
கண்ணினும்நல்லன்கற்றவர்கற்றிலாதவரும்
முண்ணுநீரினுமுயிரினுமவனையேயுவப்பார். (௨௰)

மனிதர்வானவர்மற்றுளாரறங்கள்காத்தளிப்பார்
இனியிம்மன்னுயிர்க்கிராமனிற்சிறந்தவரில்லை
அனையதாதலினரசிற்குறுபொருளறிவில்
புனிதமாதவமல்லதொன்றில்லெனப்புகன்றான். (௨௧)

மற்றவன்சொன்னவாசகங்கேட்டலுமகனை
பெற்றவன்றினும்பிஞ்ஞகன்பிடித்தவப்பெருவில்
இற்றவன்றினுமெறிமழுவாளவனிழுக்கம்
உற்றவன்றினும்பெரியதோருவகையனானான். (௨௨)

அனையதாகியவுவகையன்கண்கணீரரும்ப
முனிவன்மாமலர்ப்பாதங்கண்முறைமையினிறைஞ்சி
இனியசொல்லினையெம்பெருமானருள்விழியின்
தனியனானிலந்தாங்கியதவற்கிதுதகாதோ. (௨௩)

எந்தையேவந்திதஞ்சொலவெங்குலத்தரசர்
அந்தமில்லரும்பெரும்புகழவனியினிறுவி
முந்தவேள்வியுமுடித்துத்தம்மிருவினைமுடித்தார்
வந்தவவ்வருளெனக்குமென்றுரைசெய்துமகிழ்ந்தான். (௨௪)

பழுதில்மாதவன்பின்னென்றும்பணித்திலனிருந்தான்
முழுதுமெண்ணுறுமந்திரக்கிழவர்தம்முகத்தால்
எழுதிட்டியசிந்திதமிறைமகற்கேறத்
தொழுதகையினன்சுமந்திரன்முன்னின்றுசொல்லும். (௪௫)

உறத்தகும்மாசிராமற்கென்றுவக்கின்றமனத்தை
துறத்திநீயெனுஞ்சொற்சுடும்நின்குலத்தொல்லோர்
மறத்தல்செய்கிலாத்தருமத்தைமறப்பதும்வழக்கன்
றறத்தினாவுங்கினிக்கொடிதெனலாவதொன்றியாதே. (௪௬)

புரைசைமாக்கரிநிருபர்க்கும்புரத்துறைவோர்க்கும்
உரைசெய்மந்திரக்கிழவர்க்குமுனிவர்க்குமுள்ளம்
முரைசமார்ப்பநின்முதன்மணிப்புதல்வனைமுறையால்
அரைசனாக்கிப்பின்னப்புறத்தடுத்ததுபுரிவாய். (௪௭)

என்றவாசகஞ்சுமந்திரனியம்பலுமிறைவன்
நன்றுசொல்லினைநம்பியைநளிர்முடிசூட்டி
நின்றுநின்றதுசெய்வதுவிரைவினினியே
சென்றுகொண்டணைதிருமகள்கொழுநனையென்றான். (௪௮)

அலங்கல்மன்னனையடிதொழுதவன்மனமனையான்
விலங்கல்மாளிகைவீதியில்விரைவொடுசென்றான்
நலங்கள்யாவையும்பெற்றனன்றானெனத்தளிர்ப்பான்
பொலன்கொடேரொடுமிராகவன்றிருமனைபுக்கான். (௪௯)

பெண்ணினின்னமுதன்னவள்தன்னொடும்பிரியா
வண்ணவெஞ்சிலைக்குரிசிலுமருங்கினிதிருப்ப
அண்ணலாண்டிருந்தானழகருநறவெனத்தன்
கண்ணுமுள்ளமும்வண்டெனக்களிப்புறக்கண்டான். (௫௰)

கண்டுகைதொழுதையவிக்கடலிடைக்கிழவோன்
உண்டொர்காரியம்வருகெனவுரைத்தனனெனலும்
புண்டரீகக்கட்புரவலன்பொருக்கெனவெழுந்தோர்
கொண்டல்போலவன்கொடிநெடுந்தேர்மிசைக்கொண்டான். (௫௧)

முறையின்மொய்முகிலெனமுரசார்த்திடமடவார்
இறைகழன்றசங்கார்த்திடவிமையவரெங்கள்
குறைமுடிந்ததென்றார்த்திடக்குஞ்சியைச்சூழ்ந்த
நறையலங்கல்வண்டார்த்திடத்தேர்மிசைநடந்தான். (௫௨)

பணைநினைந்தனபாட்டொலிநினைந்தனவனங்கள்
கணைநினைந்தனநாறுசெறங்கினநிறைப்பேர்
அணைநினைந்தனவழிவெறும்பெரும்புனலனையார்
பிணைநினைந்தெனப்பரந்தனர்நாணமும்பிரிந்தார். (௫௩)

நீளெழுத்தொடர்வாயினும்குழையொடுநெகிழ்ந்த
ஆளகத்தினுடாமியத்தலத்தினுமலர்ந்த
வாளரத்தவேல்வண்டொடுகெண்டைகள்மயங்கச்
சாளரத்தினும்பூத்தனதாமரைமலர்கள். (௫௪)

மண்டலந்தருமதிகெழுமழைமுகிலனைய
அண்டர்நாயகன்வரைபுரையகலத்துளலங்கல்
தொண்டைவாய்ச்சியர்நிறையொடும்நாணொடுந்தொடர்ந்த
கெண்டையுமுளரிகளைபயில்வண்டொடுங்கிடந்த. (௫௫)

சரிந்தபூவளமழையொடுகலையுறத்தாழ்வ
பரிந்தபூவளபனிக்கடைமுத்தினம்படைப்ப
எரிந்தபூவளவிள்முலையிழையிடைநுழைய
விரிந்தபூவளமீனுடைவானின்றும்வீழ்வ. (௫௬)

வள்ளுறைகழித்தொளிர்வனவாணிமிர்மதியம்
தள்ளுறச்சுமந்தெழுதருந்தமனியக்கொம்பில்
புள்ளிநுண்பனிபொடிப்பனபொன்னிடைப்பொதிந்த
எள்ளுடைப்பொரிவிரவினவுளசிலவிளநீர். (௫௭)

ஆயதவ்வழிநிகழ்தரவாடவரெல்லாம்
தாயைமுன்னியகன்றெனநின்றுயிர்தளிர்ப்ப
தூயதம்பியுந்தானுமச்சுமந்திரன்றேர்மேல்
போயகங்குளிர்புரவலனிருந்துழிபுக்கான். (௫௮)

மாதவன்றனைவரன்முறைவணங்கிவாளுழவன்
பாதபங்கயம்பணிந்தனன்பணிதலுமனையான்
காதல்பொங்கிடக்கண்பனியுகுத்திடக்கனிவாய்ச்
சீதைகொண்கனைத்திருவுறைமார்பகஞ்சேர்த்தான். (௫௯)

நலங்கொள்மைந்தனைத்தழுவினனென்பதென்னளிநீர்
நிலங்கடாங்குறுநிலையினைநிலையிடநினைந்தான்
விலங்கலன்னதின்றோளையுமெய்த்திருவிருக்கும்
அலங்கல்மார்பையுந்தனதுதோள்மார்புகொண்டளந்தான். (௬௰)

ஆண்டுதன்மருங்கிரீஇயுவந்தன்புறநோக்கி
பூண்டபோர்மழுவுடையவனெடும்புகழ்குறுக
நீண்டதோளையகிற்பயந்தெடுத்தயானின்னை
வேண்டியெய்திடவிளைவதொன்றுளதெனவிளம்பும். (௬௧)

ஐயசாலவுமலசினனருஞ்பெருமூப்பும்
வெய்யதாயதுவியவிடப்பெரும்பரம்விசித்த
தொய்யன்மாநிலச்சுமையுறுசிறைதுறந்தினியான்
உய்யலாவதொர்நெறிபுகவுதவிடவேண்டும். (௬௨)

உருமைமைந்தனைப்பெறுகின்றதுறுதுயர்நீங்கி
இருமையும்பெறற்கென்பதுபெரியவரியற்கை
தருமமன்னநிற்றந்தயான்தளர்வதுதகவோ
கருமமென்வயிற்செய்யிலென்கட்டுரைகோடி. (௬௩)

மைந்தநங்குலமரபினின்மணிமுடிவேந்தர்
தந்தமக்களேகடைமுறைநெடுநிலந்தாங்க
ஐந்தொடாகியமுப்பகைமருங்கறவகற்றி
உய்ந்துபோயினருழிநின்றெண்ணினுமுலவார். (௬௪)

முன்னையூழ்வினைப்பயத்தினுமுற்றியவேள்வி
பின்னையெய்தியநலத்தினுமரிதினிற்பெற்றேன்
இன்னம்யானிந்தவரசியலிடும்பையனென்றால்
நின்னையீன்றுளபயத்தினினிரம்புவதியாதோ. (௬௫)

ஒருத்தலைப்பரத்தொருத்தலைப்பங்குவினூர்தி
எருத்தினீங்குநின்றியல்வரக்குழைந்திடருழக்கும்
வருத்தம்நீங்கியவ்வரம்பறுதிருவினைமருவும்
அருத்தியுண்டெனக்கையவிதருளிடவேண்டும். (௬௬)

ஆளும்நன்னெறிக்கமைவருமமைவினனுகி
நாளும்நங்குலநாயகன்நறைவிரிகமலத்
தாளின்நல்கியகங்கையைத்தந்துதந்தையனை
மீள்வினின்னுலகேற்றினனெருமகன்மேனாள். (௬௭)

மன்னரானவரல்லர்மேல்வானவர்க்கரசாம்
பொன்னின்வார்கழற்புரந்தரன்போலியரல்லர்
பின்னுமாதவந்தொடங்கினோன்பிழைத்தவர்பிறரார்
சொன்மருமகற்பெற்றவரருந்துயர்துறந்தார். (௬௮)

அனையதாதலினருந்துயர்ப்பெரும்பரமாசன்
வினையினென்வயின்வைத்தனனெனக்கொளவேண்டாம்
புனையுமாமுடிபுனைந்திந்தநல்லறம்புரக்க
நினையல்வேண்டும்யானின்வயிற்பெறுவதிதென்றான். (சுக)

தாதையப்பரிசுரைசெயத்தாமரைக்கண்ணன்
காதலுற்றிலனிகழ்ந்திலன்கடனிதென்றுணர்ந்தும்
யாதுகொற்றவனேவியததுசெயலன்றோ
நீதியெற்கெனநினைந்தமப்பணிதலைநின்றான். (எ0)

குருசில்சிந்தையைமனக்கொண்டகொற்றவெண்குடையான்
தருதியிவ்வரமெனச்சொலியுயிருறத்தழுவி
சுருதியன்னதன்மந்திரச்சுற்றமுஞ்சுற்ற
பொருவில்மேருவும்பொருவருங்கோயில்போய்ப்புக்கான். (எக)

நிவந்தவந்தணர்நெடுந்தகைமன்னவர்நகரத்
துவந்தமைந்தர்கள்மடந்தையருழையர்பின்றொடர
சுமந்திரன்றடந்தேர்மிசைச்சுந்தரத்திரடோள்
அமைந்தமைந்தனுந்தன்னெடுங்கோயில்சென்றடைந்தான். (எ௨)

வென்றிவேந்தனைவருகவென்றுவணம்வீற்றிருந்து
பொன்றிணிந்ததோட்டரும்பெறலிலச்சினைபோக்கி
நன்றுசித்திரனளிர்முடிகவித்தற்குநல்லீர்
சென்றுவேண்டுவவான்முறையமைக்கெனச்செப்ப. (எ௩)

உரியமாதவனெள்ளிதென்றமைந்தனன்விரைந்தோர்
பொருவில்தேர்மிசையந்தணர்குழாத்தொடும்போக
இருபர்கேண்மின்களிராமற்குநெறிமுறைமையினல்
திருவும்பூமியுஞ்சிந்தையிற்சிறந்தனவென்றான். (எச)

இறைவன்சொல்லெனுமின்னறவருந்தினர்யாரும்
முறையினின்றிலர்முகந்துறுகளியிடைமூழ்கி
நிறையுநெஞ்சிடையுவகைபோய்மயிர்வழிநிமிர
உறையும்விண்ணகமுடலொடுமெய்தினரொத்தார். (எரு)

ஒத்தசிந்தையருவகையரொருவர்க்கங்கொருவர்
தத்தமக்குற்றவாசெனத்தழைக்கின்றமனத்தர்
முத்தவெண்குடைமன்னனைமுறைமுறைதொழுதார்
அத்தநன்றெனவன்பினொடறிவிப்பதானர். (எசு)

(வேறு.) மூவெழுமுறைமையெங்குலங்கண்முற்றற
பூவெழுமழுவினாற்பொருதுபோக்கிய
சேவகன்சேவகஞ்செகுத்தசேவகற்
காவலிவ்வுலகமீதறனென்றாரரோ. (௭௭)

வேறெலாமன்னரும்விரும்பியின்னது
கூறினாரதுமனங்கொண்டகொற்றவன்
ஊறினவுவகையையொளிக்குஞ்சிந்தையான்
மாறுமோரளவைசால்வாய்மைகூறினான். (௭௮)

மகவையினன்பினான்மயங்கியானிது
புகலநீர்புகன்றவிப்பொம்மல்வாசகம்
உகவையின்மொழிந்ததோவுள்ளம்நோக்கியோ
தகவெனநினைந்ததோதன்மையென்னென்றான். (௭௯)

இவ்வகையுரைசெயவிருந்தவேந்தவை
செவ்வியநின்றிருமகற்குத்தேர்ந்துளோர்
அவ்வவர்க்கவ்வவராற்றவாற்றுறும்
எவ்வமிலன்பினையினிதுகேளென. (௮௰)

தானமுந்தருமமுந்தகவுந்தன்மைசேர்
ஞானமும்நல்லவர்ப்பேணுநன்மையும்
மானவவையநின்மகற்குவைகலும்
ஈனமில்செல்வம்வந்தியைகவென்னவே. (௮௧)

ஊருணிநிறையவுமுதவுமாடுயர்
பார்கெழுபழுமரம்பழுத்தற்றாகவும்
கார்மழைபொழியவுங்கழனிபாய்நதி
வார்புனல்பெருகவுமறுக்கின்றார்கள்யார் (௮௨)

பனையவாநெடுங்கரப்பருமயானையாய்
நினையவாந்தன்மையைநினைந்தமன்னுயிர்க்
கெனையவாறன்பினனிராமனீண்டவற்
கனையவாறன்பினவவையுமென்றனர். (௮௩)

மொழிந்ததுகேட்டலுமொய்த்துநெஞ்சினைப்
பொழிந்தபேருவகையான்பொங்குகாதலான்
கழிந்ததோரிடரினான்களிக்குஞ்சிந்தையான்
வழிந்தகண்ணீரினான்மன்னன்கூறுவான். (௮௪)

செம்மையிற்றருமத்திற்செயலிற்றிங்கின்பால்
வெம்மையினொழுக்கத்தின்மெய்மைமேவினிர்
என்மகனென்பதென்னெறியினிங்கிவன்
றம்மகன்கையடைசோக்குமூங்கென்றான். (அரு)

அரசனைவிடுத்தபின்றணிமன்னவன்
புரைதபுநாளொடுபொழுதுபோக்குவான்
உரைதெரிகணிதனையொருங்குகொண்டொரு
வரைபொருமண்டபமருங்குபோயினன். (அசு)

(வேறு.) ஆண்டவன்னிலையாகவறிந்தவர்
பூண்டகாதலர்பூட்டவிழ்கொங்கையர்
நீண்டகூந்தலர்நீள்கலைதாங்கலர்
ஈண்டவோடினரிட்டிடையிற்றிலர். (அஎ)

ஆடுகின்றனர்பண்ணடையின்றியே
பாடுகின்றனர்பார்த்தவர்க்கேகரம்
சூடுகின்றனர்சொல்லுவதோர்கிலர்
மாடுசென்றனர்மங்கையர்நால்வரே. (அஅ)

கண்டமாதரைக்காதலினோக்கினள்
கொண்டல்வண்ணனைநல்கியகோசலை
உண்டுபேருவகைப்பொருளன்னநு
தொண்டைவாயினிர்சொல்லுமினின்டென்றாள். (அகூ)

மன்னெடுங்கழல்வந்துவணங்கிட
பன்னெடும்பகல்பாரளிப்பாயென
நின்னெடும்புதல்வன்றனைநேமியான்
றொன்னெடும்முடிசூட்டுகின்றானென்றார். (கூ0)

சிறக்குஞ்செல்வமகற்கெனச்சிந்தையில்
பிறக்கும்பேருவகைக்கடல்பெட்பற
வறக்குமாவடவைக்கனலானதால்
துறக்குமன்னவனென்னுந்துணுக்கமே. (கூக)

அன்னளாயுமரும்பெறலாரமும்
நன்னிதிக்குவையும்நனிநல்கித்தன்
துன்னுகாதற்சுமித்திரையோடும்போய்
மின்னுநேமியன்மேவிடமேவினள். (கூஉ)

மேவிமென்மலராள்நிலமாதெனும்
தேவிமாரொடுந்தேவர்கள்யாவர்க்கும்
ஆவியும்மறிவும்முதலாயவன்
வாவிமாமலர்ப்பாதம்வணங்கினாள். (௧௩)

என்வயிற்றருமைந்தற்கினியருள்
உன்வயிற்றதென்றானுலகியாவையும்
மன்வயிற்றினடக்கியமாயனைத்
தன்வயிற்றினடக்குந்தவத்தினாள். (௧௪)

என்றிறைஞ்சியவ்விந்திரைகேள்வனுக்
கொன்றுநான்மறையோதியபூசனை
நன்றிழைத்தவணல்லதவர்க்கெலாம்
கன்றுடைப்பசுவின்கடனல்கினாள். (௧௫)

பொன்னுமாமணியும்புனைசாந்தமும்
கன்னிமாரொடுகாசினியீட்டமும்
இன்னயாவையுமீய்ந்தனளந்தணர்க்
கன்னதானமுமாடையுநல்கினாள். (௧௬)

நல்கிநாயகனுண்மலர்ப்பாதத்தை
புல்லிப்போற்றிவணங்கிப்புரையிலா
மல்லன்மாளிகைக்கோயில்வலங்கொளா
தொல்லைநோன்புகள்யாவுந்தொடங்கினாள். (௧௭)

க-வது. மந்திரப்படல முற்றும்.

கம்பநாட்டாழ்வார்திருவடிகளேசரணம்.

---

## உ-வது. மந்தரைசூழ்ச்சிப்படலம்.



கடிகமிழ்தாரினான்கணிதமாக்களை
முடிவுறநோக்கியோர்முதன்மைகூறிப்பின்
வடிமழுவாளவற்கடந்தமைந்தற்கு
முடிபுனைகடிகைநாள்மொழிமினென்றனன். (௧)

பொருந்துநாணாளைநின்புதல்வற்கென்றனர்
திருந்தினாரன்னசொற்கேட்டசெய்கழல்
பெருந்திண்மால்யானையான்பிழைப்பில்செய்தவம்
வருந்தினான்வருகெனவசிட்டனெய்தினான். (௨)

நல்லியல்மங்கலநாளும்நாளையவ்
வில்லியல்தோளவற்கிண்டுவேண்டுவ
ஒல்லையினியற்றிநல்லுறுதிவாய்மையும்
சொல்லுதிபெரிதெனத்தொழுதுசொல்லினான். (௩)

முனிவனுமுவகையுந்தானுமுந்துவான்
மனுகுலநாயகன்வாயல்முன்னினான்
அனையவன்வரவுகேட்டலங்கல்வீரனும்
இனிதெதிர்கொண்டுதன்னிருக்கையெய்தினான். (௪)

(வேறு.) ஒல்கலில்தவத்துத்தமனேதுநூல்
மல்குகேள்வியவள்ளலைநோக்கினான்
புல்குகாதற்புரவலன்போர்வலாய்
நல்கும்நானிலம்நாளையினக்கென்றான். (௫)

என்றுபின்னுமிராமனைநோக்கிநான்
ஒன்றுகூறுவதுண்டுறுதிப்பொருள்
நன்றுகேட்டுக்கடைப்பிடிநன்றெனா
அன்றுதாரவற்சொல்லுதல்மேயினான். (௬)

கரியமாலினுங்கண்ணுதலானினும்
உரியதாமரைமேலுறைவானினும்
விரியும்பூதமோரைந்தினுமெய்யினும்
பெரியரந்தணர்பேணுதியுள்ளத்தால். (௭)

அந்தணாளர்முனியவுமாங்கவர்
சிந்தையாலருள்செய்யவுந்தேவரில்
நொந்துளாரையுநொய்துயர்ந்தாரையும்
மைந்தவெண்ணவரம்புமுண்டாங்கொலோ. (௮)

அனையராதலினையவிவ்வெய்யதி
வினையினீங்கியமேலவர்தாளினைப்
புனையுஞ்சென்னியையாய்ப்புகழ்ந்தேத்துதி
இனியகூறியின்றேயினசெய்தியால். (௯)

ஆவதற்குமழிவதற்குமவர்
ஏவலிற்கும்விதியுமென்றுமினி
யாவதெப்பொருளிம்மையுமம்மையும்
தேவரைப்பரவுந்துணைசீர்த்ததே. (௰)

உருளும்நேமியுமொண்கவரொஃகமும்
மருளில்வாணியும்வல்லவர்மூவர்க்கும்
தெருளும்நல்லறமும்மனச்செம்மையும்
அருளும்நீத்தபின்னாவதுண்டாகுமோ. (௧௧)

சூதுமுந்துறச்சொல்லியமாத்துயர்
நீதிமைந்தநினைக்கிலையாயினும்
ஏதமென்பனயாவையுமெய்துதற்
கோதுமூலமவையெனவோர்தியே. (௧௨)

யாரொடும்பகைகொள்ளிலனென்றபின்
போரொடுங்கும்புகழொடுங்காதுதன்
தாரொடுங்கல்செல்லாததுதந்தபின்
வேரொடுங்கெடல்வேண்டலுண்டாகுமோ. (௧௩)

கோளுமைம்பொறியுங்குறையப்பொருள்
நாளுங்கண்டுநடுக்குறுநோன்மையின்
ஆளுமவ்வரசேயரசன்னது
வாளின்மேல்வருமாதவமைந்தனே. (௧௪)

உமைக்குநாதற்குமோங்குபுள்ளூர்திக்கும்
இமைப்பில்நாட்டமொரெட்டுடையானுக்கும்
சமைத்ததோள்வலிதாங்கினராயினும்
அமைச்சர்சொல்வழியாற்றுதலாற்றலே. (௧௫)

என்புதோலுடையார்க்குமிலார்க்குந்தம்
வன்பகைப்புலன்மாசறமாய்ப்பதென்
முன்புபின்பின்றிமூவுலகத்தினும்
அன்பினல்லதோராக்கமுண்டாகுமே. (௧௬)

வையமன்னுயிராகவம்மன்னுயிர்
உய்யத்தாங்குமுடலன்னமன்னனுக்
கையமின்றியறங்கடவாதருள்
மெய்யினின்றபின்வேள்வியும்வேண்டுமோ. (௧௭)

இனியசொல்லினனீகையனெண்ணினன்
வினையன்றூயன்விழுமியன்வென்றியன்
நினையுநீதிநெறிகடவானெனில்
அனையமன்னற்கழிவுமுண்டாங்கொலோ (௧௮)

சீலமல்லனநீங்கிச்செம்பொற்றுலைத்
தாலமன்னதனிநிலைதாங்கிய
ஞாலமன்னற்குநல்லவர்நோக்கிய
காலமல்லதுகன்றுமுண்டாகுமோ. (௧௯)

ஓர்வினல்வினையூற்றத்திருநா
பேர்வில்தொல்விதிபெற்றுளதென்றரோ
நேர்விலன்புசெலுத்தலிற்செவ்வியோர்
ஆர்வமன்னவற்காயுதமாவதே. (௨௦)

தாமகேதுபுவிக்கெனத்தோன்றிய
வாமமேகலைமங்கையரால்வரும்
காமமில்லையெனிற்கடுங்கேடெனும்
நாமமில்லைநரகமுமில்லையே. (௨௧)

ஏனைநீதியினியனவையகப்
போனகற்குவிளம்பிப்புலன்கொளீஇ
ஆனவன்னெடுமாவிரமெளியான்
தானநண்ணினன்றத்துவநண்ணினான். (௨௨)

நண்ணிநாகனைவள்ளலைநான்மறைப்
புண்ணியப்புனலாட்டிப்புலமையோர்
எண்ணுநல்வினைமுற்றுவித்தேற்றினான்
வெண்ணிறத்ததருப்பைவிரித்தரோ. (௨௩)

(வேறு.) ஏற்றிடவாண்டகையினிதிருந்துழி
நாற்றடமார்பனும்நொய்தினெய்தப்போய்
ஆற்றல்சாலரசனுக்கறிவித்தானவன்
சாற்றுகநகரணிசமைக்கவென்றனன். (௨௪)

ஏவினவள்ளுவனிராமனாணையே
பூமகள்கொழுநனாய்ப்புனையுமௌலியிக்
கோநகரணிகெனக்கொட்டும்பேரியத்
தேவருங்களிகொளத்திரிந்துசாற்றினார். (௨௫)

கவியமைநேர்த்தியக்காலைநாளையே
புவியமைமணிமுடிபுனையுமென்றசொல்
செவியமைநுகர்ச்சியவெனினுந்தேவர்தம்
அவியமுதன்னவங்கருளார்க்கெலாம். (௨௬)

ஆர்த்தனர்களித்தனராடிப்பாடினர்
வேர்த்தனர்தடித்தனர்சிலிர்த்துமெய்ம்மயிர்
போர்த்தனர்மன்னனைப்புகழ்ந்துவாழ்த்தினர்
தூர்த்தனர்நீணிதிசொல்லினர்க்கெலாம். (௨௭)

திணிசுடரிரவியைத்திருத்துமாறுமப்
பணியிடைப்பள்ளியான்பரந்தமார்பிடை
மணியினைவேகடம்வகுக்குமாறும்போல்
அணிநகரணிந்தனரருத்திமாக்களே. (௨௮)

வெள்ளியகரியனசெய்யவேறுள
கொள்ளைவான்கொடிமிடைக்குழாங்கள்தோன்றுவ
கள்ளவிழ்கோதையான்செல்வங்காணிய
புள்ளெலாந்திருநகர்புகுந்தபோன்றவே. (௨௯)

மங்கையர்குறங்கெனவகுத்தவாழைகள்
அங்கவர்கழுத்தெனக்கமுகமார்ந்தன
தங்கொளிமுறுவலிற்றாமநான்றன
கொங்கையைநிகர்த்தனகனககும்பமே. (௩0)

முதிரொளியுயிர்த்தனமுடுகிக்காலையிற்
கதிரவன்வேறொருகவின்கொண்டானென
மதிதொடநிவந்தனமகரதோரணம்
புதியனவலர்ந்தனபுதவராசியே. (௩௧)

துனியுறுசெம்மணித்தூணம்நீறுதோய்
வனிதையோர்கூறினன்வடிவுகாட்டின
புனைதுகிலுறைதொறும்பொதிந்துதோன்றின
பனிபொதிகதிரெனப்பவளத்தூண்களே. (௩௨)

முத்தினில்முழுநிலவெறிப்பமொய்மணிப்
பத்தியினிளவெயில்பரப்பநீலத்தின்
தொத்தினமிருள்வரத்தூண்டச்சோதிட
வித்தகர்விரித்தநாளொத்தவீதியே. (௩௩)

ஆடன்மான்றேர்க்குழாமவ்னிகாணிய
வீடெனுமுலகின்வீழ்விமானம்போன்றன
ஓடைமாக்கடகளிறுதையமால்வரை
தேட்ருங்கதிரொடுந்திரிவபோன்றவே. (௩௪)

வளங்கெழுதிருநகர்வைகும்வைகலும்
பளிங்குடைநெடுஞ்சுவரடுத்தபத்தியில்
இளர்ந்தெரிசுடர்மணியிருளைக்கிறலால்
வளர்ந்திலபிறந்திலசெக்கர்வானமே. (௩௫)

பூமழைபுனல்மழைபுதுமென்சுண்ணத்தின்
தூமழைதரளத்தின்தோமில்வெண்மழை
தாமிழைசெறிதலிற்றகர்ந்தபொன்மழை
மாமழைநிகர்த்தனமாடவீதியே. (௩௬)

காரொடுதொடர்மதக்களிறுசென்றன
வாரொடுதொடர்கழல்மைந்தராமென
நாரொடுநடந்தனபிடிகள்தாழ்கலைத்
தேரொடுநடக்குமத்தெரிவைமாரினே. (௩௭)

ஏய்ந்தெழுசெல்வமுமழகுமின்பமும்
தேய்ந்திலவனையதுதெரிகிலாமையால்
ஆய்ந்தனர்பெருகவும்அமரரிம்பரில்
போந்தவர்போந்திலமென்னும்புந்தியால். (௩௮)

அந்நகரணிவுறுமமலைவானவர்
பொன்னகரியல்பெனப்பொலியுமெல்லையில்
இன்னல்செயிராவணனிழைத்ததீமைபோல்
துன்னருங்கொடுமனக்கூனிதோன்றினள். (௩௯)

தோன்றியகூனியுந்துடிக்குநெஞ்சினள்
ஊன்றியவெகுளியாள்உளைக்குமுள்ளத்தாள்
கான்றெரிநயனத்தாள்கதிக்குஞ்சொல்லினள்
மூன்றுலகினுக்குமோரிடுக்கண்மூட்டுவாள். (௪0)

தொண்டைவாய்க்கேகயன்தோகைகோயின்மேல்
மண்டினள்வெகுளியின்மடித்தவாயினள்
பண்டைநாளிராகவன்பாணிவில்லுமிழ்
உண்டையுண்டதனைத்தன்னுள்ளத்துள்ளுவாள். (௪௧)

நாற்கடற்படுமணிநளினம்பூத்ததோர்
பாற்கடற்படுதிரைப்பவளவல்லியே
போற்கடைக்கண்ணளிபொழியப்பொங்கணை
மேற்கிடந்தாடனைவிரவினெய்தினள். (௪௨)

எய்தியக்கேகயன்மடந்தையேடவிழ்
நொய்தலர்தாமரைநோற்றகோன்பினுல்
செய்தபேருவமைசால்செம்பொற்சிறடி
கைகளிற்றீண்டினுள்காலக்கோளனுள். (௫௩)

தீண்டலுமுணர்ந்தவத்தெய்வக்கற்பினுள்
நீண்டகண்ணனந்தரும்நீங்குயிற்றிலள்
மூண்டெழுபெரும்பழிமுடிக்கும்வெவ்வினை
தூண்டிடக்கட்டுரைசொல்லல்மேயினுள். (௫௪)

அணங்குவாள்விடவராவணுகுமெல்லையும்
குணங்கெடாதொளிவிரிகுளிர்வெண்டிங்கள்போல்
பிணங்குவான்பேரிடர்பிணிக்கநண்ணவும்
உணங்குவாயல்லைநீயுறங்குவாயென்முள். (௫௫)

வெவ்விடமனையவள்விளம்பவேற்கணுள்
தெவ்வடுசிலைக்கையென்சிறுவர்செவ்வியர்
அவ்வவர்துறைதொறுமறந்திறம்பலர்
எவ்விடரெனக்குவந்தடுப்பதிண்டென்முள். (௫௬)

பராவரும்புதல்வரைப்பயக்கயாவரும்
உராவருந்துயரைவிட்டுறுதிகாண்பரால்
விராவரும்புவிக்கெலாம்வேதமேயன
இராமனைப்பயந்தவெற்கிடருண்டோவென்முள். (௫௭)

ஆழ்ந்தபோன்பினுளனையகூறலும்
சூழ்ந்ததீவினைநிகர்கூனிசொல்லுவாள்
வீழ்ந்ததுநின்னலந்திருவும்வீய்ந்தது
வாழ்ந்தனள்கோசலைமதியினுலென்முள். (௫௮)

அன்னவளவ்வுரையுரைப்பவாயிழை
மன்னவர்மன்னனேற்கணவன்மைந்தனேல்
பன்னரும்பெரும்புகழ்ப்பரதன்பார்தனில்
என்னிதன்மேலவட்கெய்தும்வாழ்வென்முள். (௫௯)

ஆடவர்நகையுறவாண்மைமாசுற
தாடகையெனும்பெயர்த்தையலாள்பட
கோடியவரிசிலையிராமன்கோமுடி
சூடுவனுளைவாழ்வீதெனச்சொல்லினுள். (௬0)

மாற்றமஃதுரைசெயமங்கையுள்ளமும்
ஆற்றல்சால்கோசலையறிவுமொத்தவால்
வேற்றுமையுற்றிலள்வீரன்முறைபுக்
கேற்றவளிருதயத்திருக்கவேகொலாம். (ருக)

ஆயபேரன்பெனுமளக்கரார்த்தெழ
தேய்விலாமுகமதிவிளங்கித்தேசுற
தூயவளுவகைபோய்மிகச்சுடர்க்கெலாம்
நாயகமனையதோர்மாலைநல்கினள் (ருஉ)

தெழித்தனளுரப்பினள்சிறுக்கண்டீயுக
விழித்தனள்வைதனள்வெய்துயிர்த்தனள்
அழித்தனளழுதனளம்பொன்மாலையால்
குழித்தனள்நிலத்தையக்கொடியகூனியே. (ருங)

வேதனைக்கூனிபின்வெகுண்டுநோக்கியப்
பேதையைப்பித்திநிற்பிறந்தசேயொடும்
நீதுயர்படுகிலைனெடிதுன்மாற்றவள்
தாதியர்க்காட்செயத்தரிக்கிலேனென்றாள். (ருச)

செவந்தவாய்ச்சீதையுங்கரியசெம்மலும்
நிவந்தவாசனத்தினிதிருப்பநின்மகன்
அவந்தனாய்வெறுநிலத்திருக்கலானபோ
துவந்தவாறென்னிதற்குறுதியாதென்றாள். (ருரு)

மறந்திலள்கோசலையுறுதிமைந்தனும்
சிறந்தநற்றிருவினிற்றிருவமெய்தினன்
இறந்திலனிருந்தனனென்செய்தாற்றுவான்
பிறந்திலன்பரதனீபெற்றதாலென்றாள். (ருசா)

சரதமிப்புவியெலாந்தம்பியோடுமிவ்
வரதனேகாக்குமேல்வரம்பில்காலமும்
பரதனுமிளவலும்பதியினீங்கிப்போய்
விரதமாதவஞ்செயவிடுதனன்றென்றாள். (ருஎ)

பண்ணுறுகடகரிப்பரதன்பார்மகள்
கண்ணுறுகவினராயினிதுகாத்தவம்
மண்ணுறுமுரசுடைமன்னர்மாலையில்
எண்ணுறப்பிறலதினிறத்தனன்றென்றாள். (ருஅ)

பாக்கியம்புரிந்திலாப்பரதன்றன்னைப்பண்
டாக்கியபொலன்கழலரசனாணையால்
தேக்குயர்கல்லதர்கடிதுசேணிடை
போக்கியபொருளெனக்கின்றுபோந்ததால். (ருகூ)



மந்தரைபின்னரும்வகைந்துகூறுவாள்
அந்தரந்தீர்ந்துலகளிக்கும்நீரினால்
தந்தையுங்கொடியன்நற்றாயுந்தீயளால்
எந்தையேபரதனேயென்செய்வாயென்றாள். (சு0)

அரைசரிற்பிறந்துபின்னரைசரில்வளர்ந்
தரைசரிற்புகுந்துபேரரைசியானநீ
கரைசெயற்கருந்துயர்க்கடலில்வீழ்கின்றாய்
உரைசெயக்கேட்கிலையுணர்தியோவென்றாள். (சுக)

கல்வியுமிளமையுங்கணக்கிலாற்றலும்
வில்வினையுரிமையுமழகும்வீரமும்
எல்லையில்குணங்களும்பரதற்கேயது
புல்லிடையுகுத்தமுதேயும்போலென்றாள். (சுஉ)

(வேறு.) வாய்கயப்புறமந்தரைவழங்கியவெஞ்சொல்
காய்கனற்றலைநெய்சொரிந்தெனக்கதங்கனற்ற
கேகயர்க்கிறைதிருமகள்கிளரிளவரிகள்
தோய்கயற்கண்கள்செவப்புறநோக்கினள்சொல்லும். (சுங)

வெயின்முறைக்குலக்கதிரவன்முதலியமேலோர்
உயிர்முதற்பொருடிறம்பினுமுறைதிறம்பாதோர்
மயின்முறைக்குலத்துரிமையைமனுமுதல்மரபை
செயிருறப்புலைச்சிந்தையாலென்சொனாய்தீயோய். (சுச)

எனக்குநல்லையுமல்லைநீயென்மகன்பரதன்
தனக்குநல்லையுமல்லையத்தருமமேநோக்கில்
உனக்குநல்லையுமல்லைவந்தூழ்வினைதூண்ட
மனக்குநல்லனசொல்லினைமதியிலாமனத்தோய். (சுரு)

பிறந்திறந்துபோய்ப்பெறுவதுமிழப்பதும்புகழ்மேல்
நிறந்திறம்பினும்நியாயமேதிறம்பினும்நெறியின்
திறந்திறம்பினுஞ்செய்தவந்திறம்பினுஞ்செயிர்தீர்
மறந்திறம்பினும்வரன்முறைதிறம்புதல்வழக்கோ. (சுசு)

போதியென்னெதிர்நின்றுநின்புன்பொறிநாவை
சேதியாதிதுபொறுத்தனெஞ்புறஞ்சிலரறியின்
நீதியல்லவுநெறிமுறையல்லவுநினைந்தாய்
ஆதியாதவினறிவிலியடங்குதியென்றாள். (௬எ)

அஞ்சிமந்தரையகன்றிலளம்மொழிகேட்டும்
நஞ்சுதீர்க்கிலுந்தீர்கிலாதநுஙவிந்தென்ன
தஞ்சமேயுனக்குறுபொருளுணர்ந்துரைதவிரேன்
வஞ்சிபோலியென்றடிமிசைவீழ்ந்துரைவழங்கும். (௬அ)

மூத்தவற்குரித்தரசெனுமுறைமையினுலகம்
காத்தமன்னனிவிளையனன்றேகடல்வண்ணன்
ஏத்துநீண்முடிபுனைவதற்கிசைந்தனனென்றால்
மீத்தருஞ்செல்வம்பரதனைவிலக்குமாறெவனே. (௬௯)

அறனிரம்பியவருளுடையருந்தவர்க்கேனும்
பெறலருந்திருப்பெற்றபின்சிந்தனைபிறிதாம்
மறனினைந்துமைவலியிலராயினுமனத்தால்
இறலுறும்படியியற்றுவரிடையறுவின்னல். (எ0)

புரியுந்தன்மகனரசெனிற்பூதலமெல்லாம்
விரியுஞ்சிந்தனைக்கோசலைக்குடைமையாமென்றால்
பரியுநின்குலப்புதல்வற்குமுனக்குமிப்பார்மேல்
உரியதென்னவளுதவியவொருபொருளல்லால். (எக)

தூண்டுமின்னலும்வறுமையுந்தொடர்தரத்துயரால்
ஈண்டுவந்துனையிரந்தவர்க்கிருநிதியவளை
வேண்டியீதியோவெள்குதியோவிம்மனையால்
மாண்டுபோதியோமறுத்தியோவெங்கணம்வாழ்தி. (எஉ)

சிந்தைசெய்கையிற்றிகைத்தனையினிச்சிலநாளில்
தந்தமின்மையுமெளிமையுநிற்கொண்டுதவிர்க்க
உந்தையுன்னையுன்கிளைஞர்மற்றுன்குலத்துள்ளோர்
வந்துகாண்பதுன்மாற்றவள்செல்வமோமதியாய். (எ௩)

காதலுன்பெருங்கணவனையஞ்சியக்கனிவாய்ச்
சீதைதந்தையுன்றாதையைத்தெறுகிலனிராமன்
மாதுலனவனுந்தைக்குவாழ்வினியுண்டோ
பேதையுன்றுணையாருளர்பழிபடப்பிறந்தார். (எ௪)

மற்றும்நுந்தைக்குவான்பகைபெரிதுளமறத்தார்
செற்றபோதிவர்சென்றுதவாரெனிற்செருவில்
கொற்றமென்பதொன்றெவ்வழியுண்டதுகூறாய்
சுற்றமுங்கெடச்சுடுதுயர்க்கடல்விழத்துணிந்தாய். (௭௫)

கெடுத்தொழிந்தனையுனக்கரும்புதல்வனைக்கிளர்நீர்
உடுத்தபாரகமுடையவனொருமகற்கெனவே
கொடுத்தபேரரசவன்குலக்கோமைந்தர்தமக்கும்
அடுத்ததம்பிக்குமாம்பிறர்க்காகுமோவென்றாள். (௭௬)

தீயமந்தரையிவ்வுரைசெப்பலுந்தேவி
தூயசிந்தையுந்திரிந்ததுசூழ்ச்சியினிமையோர்
மாயையுமவர்பெற்றநல்வரவுண்மையாலும்
ஆயவந்தணரியற்றியவருந்தவத்தாலும். (௭௭)

அரக்கர்பாவமுமல்லவரியற்றியவறமும்
துரக்கநல்லருள்துறந்தனள்தூய்மொழிமடமான்
இரக்கமின்மையன்றோவின்றிவ்வுலகங்களிராமன்
பரக்குந்தொல்புகழமுதினைப்பருகுகின்றதுவே. (௭௮)

அனையதன்மையளாகியகைகயனன்னம்
வினைநிரம்பியகூனியைவிரும்பினணோக்கி
எனையுவந்தனையினியையென்மகனுக்குமனையான்
புனையுநீண்முடிபெறும்படிபுகலுதியென்றாள். (௭௯)

மாழையுண்கணியுரைசெயக்கேட்டமந்தரையென்
தோழிவல்லளென்றுணைவல்லளென்றடிதொழுதாள்
தாழுமன்னிலையென்னுரைதலைநிற்பினுலகம்
ஏழுமேழுமுன்னொருமகற்காக்குவெனென்றாள். (௮0)

நாடியொன்றுனக்குரைசெய்வென்னளிர்மணிநகையாய்
தோடிவர்ந்ததார்ச்சம்பரன்றொலைவுற்றவேலை
ஆடல்வென்றியானருளியவரமவையிரண்டும்
கோடியென்றனளுள்ளமுங்கோடியகொடியாள். (௮௧)

இருவரத்தினிலொன்றினாலரசுகொண்டிராமன்
பெருவனத்திடையேழிருபருவங்கள்பெயர்ந்து
திரிதரச்செய்தியொன்றினாற்செழுநிலமெல்லாம்
ஒருவழிப்படுமுன்மகற்குபாயமிதென்றாள். (௮௨)

உரைத்தகூனியைபுவந்தனளுயிருறத்தழுவி
நிரைத்தமாமணியாரமும்நிதியமும்நீட்டி
இரைத்தவேலைசூழுலகமேன்னெருமகற்கீந்தாய்
தரைக்குநாயகன்தாயினிநீயெனத்தணியா. (அங)

நன்றுசொல்லினைநம்பியைநளிர்முடிசூட்டல்
துன்றுகானத்திலிராமனைத்துரத்தலிவ்விரண்டும்
அன்றதாமெனிலரசன்முன்னுருயிர்துறந்து
பொன்றிநீங்குதல்புரிவென்யான்போதிநீயென்றாள். (அச)

கூனிபோனபின்குலமலர்க்குப்பைநின்றிழிந்தாள்
சோனைவார்குழற்கற்றையிற்சொருகியமாலை
வானவார்மழைநுழைதருமதிபிறிர்ப்பாள்போல்
தேனவாவுறுவண்டினமலமரச்சிதைத்தாள். (அரு)

விளையுந்தன்புகழ்வல்லியைவேரறுத்தென்ன
கிளைகொள்மேகலைசிந்தினள்கிண்கிணியோடும்
வளைதுறந்தனள்மதியினில்மறுத்துடைப்பாள்போல்
அளகவாணுதலரும்பெறற்றிலகமுமழித்தாள். (அசா)

தாவின்மாமணிக்கலன்மற்றுந்தனித்தனிச்சிதறி
நாவிநன்குழனிலங்கைவரப்பரப்பி
காவியுண்கண்களஞ்சனங்கான்றிடக்கலுழா
பூவுதிர்ந்ததோர்கொம்பெனப்புவிமிசைப்புரண்டாள். (அஎ)

நவ்விவீழ்ந்தெனநாடகமயில்துயின்றென்ன
கவ்வைகூர்தரச்சனகியாங்கடிகமழ்கமலத்
தவ்வைநீங்குமென்றயொத்திவந்தடைந்தவம்மடந்தை
தவ்வையாமெனக்கிடந்தனள்கைகயன்றனையை. (அஅ)

உ-வது. மந்தரைசூழ்ச்சிப்படலம் முற்றும். ஆ திருவிருத்தம்-கஅரு.

கம்பநாட்டாழ்வார்திருவடிகளேசரணம்.

## ௩-வது. கைகேசிசூழ்வினைப்படலம்.



நாழிகைகங்குலினள்ளடைந்தபின்றை
யாழிசையஞ்சியவஞ்சொலேழைகோயில்
வாழியவென்றயில்மன்னர்துன்னவந்தான்
ஆழிநெடுங்கைமடங்கலாளியன்னான். (க)

வாயலின்மன்னர்வணங்கிநிற்பவந்தாங்
கேயினசெய்யுமடந்தைமாரொடேகி
பாயல்துறந்தபடைத்தடங்கண்மென்றேள்
ஆயிழைதன்னையடைந்தவாழிமன்னன். (உ)

அடைந்தவனோக்கியரந்தையென்கொல்வந்து
தொடர்ந்ததெனத்துயர்கொண்டுசோரும்நெஞ்சன்
மடந்தையைமானையெடுக்குமானையேபோல்
தடக்கைகள்கொண்டுதழீஇயெடுக்கலுற்றான். (ங)

நின்றுதொடர்ந்தநெடுங்கைதம்மைநீக்கி
மின்றுவள்கின்றதுபோலமண்ணில்வீழ்ந்தாள்
ஒன்றுமியம்பலள்நீடுயிர்க்கலுற்றாள்
மன்றலருந்தொடைமன்னனுவியன்றான். (ச)

அன்னதுகண்டவலங்கன்மன்னனஞ்சி
என்னைநிகழ்ந்ததிஞ்ஞாலமேழில்வாழ்வார்
உன்னையிகழ்ந்தவர்மாள்வருற்றதெல்லாம்
சொன்னபினென்செயல்காணடிசொல்லிடென்றான். (ரு)

வண்டுளர்தாரவன்வாய்மைகேட்டமங்கை
கொண்டநெடுங்கணினுலிகொங்கைகோப்ப
உண்டுகொலாம்அருள்என்கண்உன்கண்ஒக்கில்
பண்டையவின்றுபரிந்தளித்தியென்றாள். (சு)

கள்ளவிழ்கோதைகருத்துணர்ந்தமன்னன்
வெள்ளநெடுஞ்சுடர்மின்னின்மின்னநக்கான்
உள்ளமுவந்துளசெய்வெனென்றும்லோபேன்
வள்ளலிராமனுன்மைந்தனுணையென்றான். (எ)

ஆன்றவனவ்வுரைகூறவையமில்லாள்
தோன்றியபேரவலந்துடைத்ததுண்டேல்
சான்றிமையோர்குலமாகமன்னநீயன்
றேன்றவரங்களிரண்டுமீதியென்றாள். (அ)

வரங்கொளவித்துணைமன்னுமல்லலெய்தி
இரங்கிடவேண்டுவதீவனேகொளென்பால்
பரங்கெடவிப்பொழுதேபகர்ந்திடென்றான்
உரங்கொள்மனத்தவள்வஞ்சமோர்கிலாதான். (கூ)

ஏயவரங்களிரண்டினொன்றினலென்
சேயரசாள்வதுசீதைகேள்வனென்ருல்
போய்வனமாள்வதெனப்புகன்றுநின்ருள்
தீயவையாவையினுஞ்சிறந்ததீயாள். (க0)

நாகமெனுங்கொடியாள்தனாவினீந்த
சோகவிடந்தொடரத்துணுக்கமெய்தா
ஆகமடங்கலும்வெந்தழிந்தராவின்
வேகமடங்கியவேழமென்னவீழ்ந்தான். (கக)

பூதலமுற்றதனிற்புரண்டமன்னன்
மாதுயரத்தினையாவர்சொல்லவல்லார்
வேதனைமுற்றிடவெந்துவெந்துகொல்லன்
ஊதுலையிற்கனலென்னவெய்துயிர்த்தான். (கஉ)

உலர்ந்ததுநாவுயிரோடலுற்றதுள்ளம்
புலர்ந்ததுகண்கள்பொடித்தபொங்குசோரி
சலந்தலைமிக்கதுதக்கதென்கொலென்றென்
றலந்தலையுற்றவரும்புலன்களைந்தும். (கங)

மேவிநிலத்திலிருக்குமிற்கும்வீழும்
ஓவியமொப்பவுயிர்ப்படங்கியோயும்
பாவியையுற்றெதிர்பற்றியெற்றவெண்ணும்
ஆவிபதைப்பவலக்கணெய்துகின்ருன். (கச)

பெண்ணெனவுற்றபெரும்பழிக்குநாணும்
உண்ணிறைவெப்பொடுயிர்த்துயிர்த்துலாவும்
கண்ணினினோக்குமயர்க்குமிக்ககைவேல்
புண்ணுழைதைக்கவுழைக்குமானைபோல்வான். (கரு)

கம்பநெடுங்களியானையன்னமன்னன்
வெம்பிவிழுந்தெழும்விம்மல்கண்டுவெய்துற்
றும்பர்நடுங்கினரூழிபேர்வதொத்த
தம்பனகண்ணவளுள்ளமன்னதேயால். (கசு)

அஞ்சலளையனதல்லல்கண்டுமுள்ளம்
நஞ்சிலள்நாணிலளென்னநாணமாமால்
வஞ்சனைபண்டுமடந்தைவேடமென்றே
தஞ்சனமாதரையுள்ளலார்கள்தக்கோர். (கஎ)

இந்நிலைநின்றவள்தன்னையெய்தநோக்கி
நெய்ந்நிலைவேலவனிசைத்ததுண்டோ
பொய்ந்நிலையோர்கள்புணர்த்தவஞ்சமுண்டோ
அந்நிலைசொல்லெனதாளையுண்மையென்றான். (௧௮)

இசைத்ததுமில்லையெனக்குவந்துதீயோர்
இசைத்ததுமில்லைமுனிந்தவிவ்வரங்கள்
குசைப்பரியோய்தரினின்றுகொள்வெனன்றேல்
வசைத்திறம்நின்வயின்வைத்துமாள்வெனென்றாள். (௧௯)

இந்தநெடுஞ்சொலவ்வேழைகூறுமுன்னே
வெந்தகொடும்புணில்வேலுழைந்ததொப்ப
சிந்தைதிரிந்துதிகைத்தயர்ந்துவீழ்ந்தான்
மைந்தனலாதுயிர்வேறிலாதமன்னன். (௨0)

ஆகொடியாயெனும்ஆவிகாலும்அந்தோ
ஓகொடிதேயறமென்னும்உண்மையொன்றும்
சாகவெனாவெழும்மெய்தளாடிவீழும்
மாகமும்நாகமும்மண்ணும்வென்றவாளான். (௨௧)

நாரியரில்லையிஞ்ஞாலமேழுமென்ன
கூரியவாள்கொடுகொன்றுநீக்கியானும்
பூரியரொண்ணிடைவீழ்வெனென்றுபொங்கும்
வீரியர்வீரம்விழுங்கிநின்றவேலான். (௨௨)

கையொடுகையைபுடைக்கும்வாய்கடிக்கும்
பொய்யுரைகுற்றமெனப்புழுங்கிவாடும்
நெய்யெரியுற்றெனநெஞ்சழிந்துசோரும்
வையகமுற்றும்நடந்தவாய்மைமன்னன். (௨௩)

ஒறுப்பினுமந்தரமுண்மையொன்றுமோவா
மறுப்பினுமந்தரமென்றுவாய்மைமன்னன்
பொறுப்பினுமிந்நிலைபோகிலாளைவாளால்
இறுப்பினுமாவதிரப்பதென்றெழுந்தான். (௨௪)

(வேறு.)கோன்மேற்கொண்டிங்குற்றமகற்றிக்குடிகொண்டார்
போன்மேலுற்றதுண்டெனினன்றும்பொறையென்று
கான்மேல்வீழ்ந்தான்கந்துகொல்யானைக்களிமன்னர்
மேன்மேல்வந்துமுந்திவணங்கிமிடைதாளான். (௨௫)

கொள்ளாநின்சேயிவ்வரசன்றான்கொண்டாலும்
நள்ளாதிந்நாளிலஞ்ஞாலந்தனிலென்றும்
உள்ளாரெல்லாமோதவுவக்கும்புகழ்கொள்ளாய்
எள்ளாநிற்கும்வன்பழிகொண்டென்பயனென்றான். (உசு)

வானோர்கொள்ளார்மண்ணவருய்யாரினிமற்றென்
ஏனோர்செய்கையாரொடுநீயிவ்வரசாள்வாய்
யானேசொல்லக்கொள்ளவிசைந்தான்முறையாலே
தானேநல்குமுன்மகனுக்குந்தனையென்றான். (உஎ)

கண்ணேவேண்டுமென்னினுமீயக்கடவேனென்
உண்ணேராவிவேண்டினுமின்றேயுனதன்றோ
பெண்ணேவண்மைக்கேகயன்மானேபெறுவாயேல்
மண்ணேகொள்நீமற்றையதொன்றும்மறவென்றான். (உஅ)

வாய்தந்தேனென்றேனினியானேவதுமாற்றேன்
நோய்தந்தென்னைநோவனசெய்துநுவலாதே
தாய்தந்தென்னத்தன்னையிரந்தாற்றழல்வெங்கட்
பேய்தந்நியும்நீயிதுதந்தாற்பிழையாமோ. (உகூ)

இன்னேயின்னேபன்னியிரந்தானிகல்வேந்தன்
தன்னேரில்லாத்தீயவளுள்ளந்தடுமாறாள்
முன்னேதந்தாயிவ்வரம்நல்காய்முனிவாயேல்
என்னேமன்னாயாருளர்வாய்மைக்கினியென்றாள். (௩0)

அச்சொற்கேளாவாவிபுழுங்காவயர்கின்றான்
பொய்ச்சொற்கேளாவாய்மொழிமன்னன்பொறைகூர
நச்சுத்தீயேபெண்ணுருவன்றேவெனநாணா
முச்சுத்தார்போற்பின்னுமிரந்தேமொழிகின்றான். (௩க)

நின்மகனாள்வான்நீயினிதாள்வாய்நிலமெல்லாம்
உன்வயமாமேயாளுதிதந்தேனுரைகுன்றேன்
என்மகனென்கண்என்னுயிர்எல்லாவுயிர்கட்கும்
நன்மகனிந்நாடிறவாமையவென்றான். (௩உ)

மெய்யேயென்றன்வேரறநாறும்வினைநோக்கி
நையாநின்றேனுவுமுலர்ந்தேன்நளினம்போல்
கையாவின்றென்கண்ணெதிர்நின்றுங்கழிவானேல்
உய்யேனங்காயுன்னபயம்மெல்லுயிரென்றான். (௩௩)

இரந்தான்சொல்லும்இன்னுரைகொள்ளாள்முனிவெஞ்சாள்
மரந்தானென்னும்நெஞ்சினள்நாணுள்வசைபாராள்
சரந்தாவில்லாய்தந்தவரத்தைத்தவிர்கென்றல்
உரந்தானல்லால்நல்லறமாமோவுரையென்றாள். (௩௪)

கொடியாளின்னகூறினள்கூறக்குலவேந்தன்
முடிசூடாமற்காத்தலுமொய்கானிடைமெய்யே
நெடியானீங்கநீங்குமென்னாவியினியென்னா
இடியேறுண்டமால்வரைபோல்மண்ணிடைவிழ்ந்தான். (௩௫)

விழ்ந்தான்விழாவெந்துயரத்தின்கடல்வெள்ளத்
தாழ்ந்தானாழாவக்கடலுக்கோர்கரைகாணான்
சூழ்ந்தாள்துன்பஞ்சொற்கொடியாள்சொற்கொடுநெஞ்சம்
போழ்ந்தானுள்ளப்புன்மையைநோக்கிப்புலர்கின்றான். (௩௬)

ஒன்றாநின்றவாருயிரோடும்உயிர்கேள்வர்
பொன்றாமுன்னம்பொன்றினரொன்னும்புகழல்லால்
இன்றோர்காறுமெல்வளையார்தம்மிறையோரை
கொன்றாரில்லைகொல்லுதியோநீகொடியாளே. (௩௭)

ஏவம்பாராயினமுறைநோக்காயறமெண்ணாய்
ஆவென்பாயோவல்லைமனத்தாலருள்கொன்றாய்
நாவம்பாலென்னாருயிருண்டாயினிஞாலம்
பாவம்பாராதின்னுயிர்கொள்ளப்படுகின்றாய் (௩௮)

ஏண்பாலோவாநாண்மடமச்சம்இவையேதம்
பூண்பாலாகக்காண்பவர்நல்லார்புகழ்பேணி
நாண்பாலோராநங்கையர்தம்பால்நணுகாரோ
ஆண்பாலாரோபெண்பாலாரோடவைவம்மா. (௩௯)

மண்ணாள்கின்றாராகிவலத்தால்மதியால்வைத்
தெண்ணாநின்றார்யாரையுமெல்லாவிகலாலும்
விண்ணோர்காறும்வென்றவெனக்கென்மனைவாழும்
பெண்ணால்வந்ததந்தரமென்னப்பெறுவேனோ. (௪0)

என்றென்றுன்னும்பன்னியிரக்கும்இடர்தோயும்
ஒன்றொன்றொவ்வாஇன்னலுழக்கும்உயிருண்டோ.
இன்றின்றென்னும்வண்ணமயங்கும்இடியும்பொன்
குன்றொன்றொன்றேடொன்றியதென்னக்குவிதோளான். (௪௧)

ஆழிப்பொற்றேர்மன்னவனிவ்வாறயர்வெய்தி
யூழிப்போற்றேள்ளூற்றுமடங்கப்புரள்போழ்தில்
ஊழிற்பொய்த்தாலென்னுரையின்றேயுயிர்மாய்வென்
பாழிப்பொற்றூர்மன்னவவென்றாள்பசையற்றாள். (சஉ)

அரிந்தான்முன்னோர்மன்னவனன்றேயருமேனி
வரிந்தார்வில்லாய்வாய்மைவளர்ப்பான்வரம்நல்கி
பரிந்தாலென்னுமென்றனள்பாயுங்கனலேபோல்
எரிந்தேறூதேஇன்னுயிர்உண்ணும்எரியன்னாள். (சங)

வீய்ந்தாளேயிவ்வெய்யவளென்னாமிடல்வேந்தன்
ஈய்ந்தேனீய்ந்தேனிவ்வரமென்சேய்வனமாள
மாய்ந்தேநான்போய்வானுலகாள்வென்வசைவெள்ளம்
நீய்ந்தாய்நீய்ந்தாய்நின்மகனோடும்நெடிதென்றான். (சச)

கூறாமுன்னங்கூறுபடுக்குங்கொலைவாளின்
ஏறாமென்னும்வன்றுயராகத்திடைமூழ்க
தேறாநிச்செய்கைமறந்தான்செயல்முற்றி
ஊறாநின்றசிந்தையினாளுந்துயில்வுற்றாள். (சரு)

(வேறு.) சேணுலாவியநாளெலாமுயிரொன்றுபோல்வனசெய்துபின்
ஏணுலாவியதோளினானிடரெய்தவோன்றுமிரங்கிலா
வாணிலாநகைமாதராள்செயல்கண்டுமைந்தர்முனிந்தவும்
நாணினாளெனவேகினாள்நளிர்கங்குலாகியநங்கையே. (சசா)

எண்டருங்கடைசென்றயாமம்இயம்புகின்றனவேழையால்
வண்டுதங்கியதொங்கல்மார்பன்மயங்கிவிம்மியவாறெலாம்
கண்டுநெஞ்சுகலங்கியஞ்சிறையானகாமர்துணைக்கரம்
கொண்டுதம்வயிறெற்றியெற்றிவிளிப்பபோன்றனகோழியே. (சஎ)

தோய்கயத்துமரத்துமென்சிறைதுள்ளிமீதெழுபுள்ளெலாம்
கேய்கையொத்தமருங்குன்மாதர்சிலம்பினின்றுசிலம்புவ
கேகயத்தரசன்பயந்தவிடத்தையின்னதொர்கேடுசூழ்
மாகயத்தியையுட்கொதித்துமனத்துவைவனபோன்றவே. (சஅ)

சேமமென்பனபற்றியன்புதிருந்தவின்றுயில்செய்தபின்
வாமமேகலமங்கையோடுவனத்துள்யாருமறக்கிலா
நாமநம்பிநடக்குமென்றுநடுக்குகின்றமனத்தவாய்
யாமுமிம்மணிறத்துமென்பனபோலெழுந்தனயானையே. (சகூ)

சிரித்தபங்கயமொத்தசெங்கணிராமனைத்திருமாலை அக்
கரிக்கரம்பொருகைத்தலத்துயர்காப்புநாணணிதற்குமுன்
வரித்ததண்கதிர்முத்ததாகியிம்மண்ணைநத்தும்மிழற்றமேல்
விரித்தபந்தர்பிரித்ததாமெனமீனொளித்தனவானமே. (௫0)

நாமவிற்கையிராமனைத்தொழுநாளடைந்தநமக்கெலாம்
காமவிற்குடைகங்குன்மாலைகழிந்ததென்பதுகற்பியா
தாமொலித்தனபேரியவ்வொலிசாரன்மாரிதழங்கலா
மாமயிற்குலமென்னமுன்னமலர்ந்தெழுந்தனர்மாதரே. (௫௧)

இனமலர்க்குலம்வாய்விரித்திளவாசமாருதம்வீசமுன்
புனைதுகிற்கலைசோரநெஞ்சுபுழுங்கினர்சிலபூவைமார்
மனமனுக்கம்விடத்தனித்தனிவள்ளலைப்புணர்கள்ளவன்
கனவினுக்கிடையூறடுக்கமயங்கினர்சிலகன்னிமார். (௫௨)

சாயடங்கநலங்கலந்துதயங்குதன்குலநன்மையும்
போயடங்கநெடுங்கொடும்பழிகொண்டரும்புகழ்சிந்துமத்
தீயடங்கியசிந்தையாள்செயல்கண்டுசீரியநங்கைமார்
வாயடங்கினவென்னவந்துகுவிந்தவண்குமுதங்களே. (௫௩)

மொய்யராகநிரம்பவாசைமுருங்குதீயின்முழங்கமேல்
வையராவியள்மாரன்வாளியும்வானிலாநெடுவாடையும்
மெய்யராவிடவாவிசோரவெதும்புமாதர்தமென்செவி
பையராநுழைகின்றபோன்றனபண்கனிந்தெழுபாடலே. (௫௪)

ஆழியான்முடிசூடுநாளிடையானபாவியிதோரிரா
ஊழியாயினவாறெனாவுயர்போதின்மேலுறைபேதையும்
ஏழுலோகமுமெண்டவஞ்செய்தகண்ணுமெங்கள்மனங்களும்
வாழும்நாளிதெனாவெழுந்தனர்மஞ்சுதோய்புயமஞ்சரே. (௫௫)

ஐயுறுஞ்சுடர்மேனியானெழில்காணமூளுமவாவினால்
கொய்யுறுங்குலமாமலர்க்குவைநின்றெழுந்தனர்கூர்மைகூர்
செய்யுறுஞ்சுடர்வேனெடுங்கண்முகிழ்த்துநெஞ்சில்நினைப்பொடும்
பொய்யுறக்குமடந்தைமார்குழல்வண்டுபொம்மெனவிம்மவே. (௫௬)

ஆட்கந்தருபூண்முயங்கிடவஞ்சியஞ்சியனந்தரால்
ஏடகம்பொதிதார்பொருந்திடயாமபேரியிசைத்தலால்
சேடகம்புனைகோதைமங்கையர்சிந்தையின்செறிதிண்மையால்
ஊடல்கண்டவர்கூடல்கண்டிலர்நையுமைந்தர்களுய்யவே. (௫௭)

தழையொலித்தனவண்டொலித்தனதாரொலித்தனபேரியாம்
மழையொலித்தனதேரொலித்தனமுத்தொலித்தெழுமல்குலார்
இழையொலித்தனபுள்ளொலித்தனயாழொலித்தனவெங்கணும்
மழையொலித்தனபோல்கலித்தமனத்தின்மூந்துறுவாசியே. (௫௮)

வையமேழுமொரேழுமாருயிரோடுகூடவழங்குமவ்
மெய்யன்வீரருள்வீரன்மாமகன்மேல்விளைந்ததொர்காதலால்
கையகையகலம்புலன்களவிந்தடங்கிடுங்குவான்
தெய்வமேனிபடைத்தசேயொளிபோல்மழுங்கினதீபமே. (௫௯)

வங்கியம்பலதேன்விளம்பினவாணிமூந்தினபாணியின்
பங்கியம்பரமெங்கும்விம்மினபம்பைபம்மினபல்வகை
பொங்கியம்பலவுஞ்சுறங்கினநூபுரங்கள்புலம்பவெண்
சங்கியம்பினகொம்பலம்பினசாமகீதநிரம்பவே. (௬௦)

தூபமுற்றியகாரிருட்பகைதுள்ளியோடவுள்ளெழும்
தீபமுற்றவுநீர்த்தகன்றெனசேயதாருயிர்தேய்தலால்
பாபமுற்றியபேதைசெய்தபகைத்திறத்தினில்வெய்யவன்
கோபமுற்றிமிகச்செவந்தனனெத்தனன்குணக்குன்றிலே. (௬௧)

மூவராய்முதலாகிமூலமதாகிஞாலமுமாகிஅத்
தேவதேவர்பிடித்தபோர்விலொடித்தசேவகர்சேணிலம்
காவன்மாமுடிசூடுபேரெழில்காணலாமெனுமாசைகூர்
பாவைமார்முகமென்னமுன்னமலர்ந்தபங்கயராசியே. (௬௨)

இன்னவேலையினேழுவேலையுமொத்தபோலவிரைத்தெழுந்
தன்னமாநகர்மைந்தன்மாமுடிசூடும்வைகலிதாமென
துன்னுகாதல்துரப்பவந்தவைசொல்லலாம்வகையெம்மனோர்க்
குன்னலாவனஅல்லவென்னினுமுற்றபெற்றியுணர்த்துவாம். (௬௩)

(வேறு.) குஞ்சரமனையார்சிந்தைகொளினையார்
பஞ்சினையணிவார்பால்வளைதெரிவார்
அஞ்சனமெனவாளம்புகளிடையே
நஞ்சினையிடுவார்நாண்மலர்புனைவார். (௬௪)

(வேறு.) பொங்கியவுவகைவெள்ளம்பொழிதரக்கமலம்பூத்த
சங்கையின்முகத்தார்நம்பிதம்பியரனையரானார்
செங்கயல்நறவமாந்திக்களிப்பெனச்செவக்குங்கண்ணார்
குங்குமச்சுவடுநீங்காக்குவவுத்தோட்குமரரெல்லாம். (௬௫)

மாதர்கள்கற்பின்மிக்கார்கோசலைமனத்தையொத்தார்
வேதியர்வசிட்டனொத்தார்வேறுளமகளிரெல்லாம்
சீதையையொத்தார்அன்னாள்திருவினையொத்தாள்அவ்வூர்
சாதுகைமாந்தரெல்லாந்தயரதன்றன்னையொத்தார். (௬௬)

இமிழ்திரைப்பரவைஞாலமெங்கணும்வழுமைகூர
உமிழ்வதொத்துதவுகாதலுந்திடவந்ததன்றே
குமிழ்முலைச்சீதைகொண்கன்கோமுடிபுனைதல்காண்பான்
அமிழ்துணக்குழுமின்றவமரரினரசவெள்ளம். (௬௭)

பாகியல்பவளச்செவ்வாய்ப்பணைமுலைப்பாவையல்குல்
தோகையர்குழாமுமைந்தர்சும்மையுந்துவன்றியெங்கும்
ஏகுமினேகுமென்றென்றிடையிடைநிற்றலல்லால்
போகிலமீளகில்லாபொன்னகர்வீதியெல்லாம். (௬௮)

வேந்தரேபெரிதென்பாரும்வீரரேபெரிதென்பாரும்
மாந்தரேபெரிதென்பாருமகளிரேபெரிதென்பாரும்
போந்ததேபெரிதென்பாரும்புகுவதேபெரிதென்பாரும்
தேர்ந்ததேதேரினல்லால்யாவரோதெரியக்கண்டார். (௬௯)

குவளையினெழிலும்வேலின்கொடுமையுங்குழைத்துக்கூட்டி
திவளுமஞ்சனமென்றேய்ந்தநஞ்சினைத்தெரியத்தீட்டி
தவளவொண்மதியுள்வைத்ததன்மைசால்தடங்கணல்லார்
துவளும்நுண்ணிடையாராடுந்தோகையங்குழாத்திற்றொக்கார். (௭0)

நலங்கிளர்பூமியென்னும்நங்கையைநறுந்துழாயின்
அலங்கலான்புணருஞ்செல்வங்காணவந்தடைந்திலாதார்
இலங்கையினிருதரேயிவ்வேழுலகத்துவாழும்
விலங்கலுமாசைநின்றவிடாமதவிலங்கலேயால். (௭௧)

சந்திரர்கோடியென்னத்தரளவெண்கவிகையோங்க
அந்தரத்தன்னமெல்லாமார்ந்தெனக்கவரிதுன்ன
இந்திரற்குவமைசாலுமிருநிலக்கிழவரெல்லாம்
வந்தனர்மௌலிசூட்டுமண்டபமரபிற்புக்கார். (௭௨)

முற்பயந்தெடுத்தகாதற்புதல்வனைமுறையினேடும்
இற்பயன்சிறப்பிப்பாரினீண்டியவவ்வகைதூண்ட
அற்புதன்றிருவைச்சேருமருமணங்காணப்புக்கார்
நற்பயன்றவத்தினுய்க்குநான்மறைக்கிழவரெல்லாம். (௭௩)

விண்ணவர்விசும்புதூர்த்தார்விரிதிரையுடுத்தகோல
மண்ணவர்திசைகள்தூர்த்தார்மங்கலமிசைக்குஞ்சங்கம்
கண்ணகன்முரசினோதைகண்டவர்செவிகள்தூர்த்த
எண்ணருங்கனகமாரியெழுதிரைக்கடல்கள்தூர்த்த. (௭௪)

விளக்கொளிமறைத்தமன்னர்மின்னொளிமகுடகோடி
துளக்கொளிவிசும்பினூருஞ்சுடரையுமறைத்தசூழ்ந்த
அளக்கர்வாய்முத்தமூரல்முறுவலாரணியின்சோதி
விளக்கலாமென்றவ்வானோர்கண்ணிணையுமறைத்தவன்றே. (௭௫)

ஆயதோரமைதியின்கணையனைமருட்டுஞ்சூட்டற்
சேயுமங்கலங்களானயாவையுமியையக்கொண்டு
தூயநான்மறைகள்வேதபாரகர்சொல்லத்தொல்லை
வாயல்கணெருக்கம்நீங்கமாதவக்கிழவன்வந்தான். (௭௬)

சங்கையேமுதலவாயகன்னியிருனதீர்த்த
மங்கலப்புனலும்நாலுவாரியினீரும்பூரித்
தங்கியின்வினையிற்கேற்றயாவையுமமைத்துவீரச்
சிங்கவாதனமும்வைத்துச்செய்வனபிறவுஞ்செய்தான். (௭௭)

கணிதநூலுணர்ந்தமாந்தர்காலம்வந்தடுத்ததென்ன
பிணியறநோற்றுநின்றபெரியவன்விரைவினேகி
மணிமுடிவேந்தன்றன்னைவல்லையிற்கொணர்தியென்ன
பணிதலைநின்றகாதற்சுமந்திரன்பரிவிற்சென்றான். (௭௮)

விண்டொடநிவந்தகோயில்வேந்தர்தம்வேந்தன்றன்னை
கண்டிலன்வினவக்கேட்டான்கைகயன்கோயினண்ணி
தொண்டைவாய்மடந்தைமாரிற்சொல்லமற்றவருஞ்சொல்ல
பெண்டிரிற்கூற்றமன்னாள்பிள்ளையைக்கொணர்கவென்றாள். (௭௯)

என்றனளென்னக்கேட்டானெழுந்தபேருவகைபொங்க
பொன்றிணிமாடவீதிபொருக்கெனநீங்கிப்புக்கான்
தன்றிருவுள்ளத்துள்ளேதன்னையேவினையுமற்றக்
குன்றிவர்தோளினானைத்தொழுதுவாய்புதைத்துக்கூறும். (௮௰)

கொற்றவர்முனிவர்மற்றுங்குவலயத்துள்ளாருன்னை
பெற்றவன்றன்னைப்போலப்பெரும்பரிவியற்றிநின்றார்
சிற்றவைதானுமாங்கேகொணர்கெனச்செப்பினாளப்
பொற்றடமகுடஞ்சூடப்போதுதிவிரைவினென்றான். (௮௧)

ஐயனுமச்சொற்கேளாவாயிரமௌலியானை
கைதொழுதரசவெள்ளங்கடலெனத்தொடர்ந்துசுற்ற
தெய்வகிதங்கள்பாடத்தேவருமகிழ்ந்துவாழ்த்த
தையலாரிளைத்துநோக்கத்தாரணிதேரிற்சென்றான். (அ௨)

திருமணிமகுடஞ்சூடச்சேவகன்செல்கின்றானென்
றொருவரினொருவர்முந்தக்காதலோடுவகையுந்த
இருகையுமிரைத்துமொய்த்தாரின்னுயிர்யார்க்குமொன்றாய்
பொருவருந்தேரிற்செல்லப்புறத்திடைக்கண்டார்போல்வார். (அ௩)

துண்ணெனுஞ்சொல்லாள்சொல்லச்சுடர்முடிதுறந்துதூய
மண்ணெனுந்திருவைநீங்கிவழிக்கொளாமுன்னம்வள்ளல்
பண்ணெனுஞ்சொல்லினார்தந்தோளெனும்பணைத்தவேயும்
கண்ணெனுங்காலவேலுமிடைநெடுங்கானம்புக்கான் (அ௪)

சுண்ணமுமலருஞ்சாந்துங்கனகமுந்தூவவந்து
வண்ணமேகலையும்நாணும்வளைகளுந்தூவுவாரும்
புண்ணுறவனங்கன்வாளிபுழைத்ததம்புணர்மென்கொங்கை
கண்ணுறப்பொழிந்தகாமவெம்புனல்கழுவுவாரும். (அ௫)

அங்கணனவனிகாத்தற்காமிவனென்னலாமோ
நங்கணான்பிலனென்றுள்ளந்தள்ளுறநடுங்கிநைவார்
செங்கணுங்கரியகோலமேனியுந்தேருமாகி
எங்கணுந்தோன்றுகின்றானெனைவரோவிராமனென்பார். (அ௬)

இனையராமகளிரெல்லாமிரைத்தனர்நிரைத்துமொய்த்தார்
முனைவரும்நகரமூதூர்முதிஞருமிளைஞர்தாமும்
அனையவன்மேனிகண்டாரன்பினுக்கெல்லைகாணார்
நினைவினர்மனத்தால்வாயால்நிகழ்ந்ததுநிகழ்த்தலுற்றாம். (அ௭)

உய்ந்ததிவ்வுலகமென்பாருழிகாண்கிற்பாயென்பார்
மைந்தநீகோடியெங்கள்வாழ்க்கைநாள்யாவுமென்பார்
ஐந்தவித்தரிநிற்செய்ததவமுனக்காகவென்பார்
பைந்துழாய்த்தெரியலாய்க்கேநல்வினைபயக்கவென்பார். (அ௮)

உயாருளொண்கணைக்குந்தாமரைநிறத்தையொக்கும்
புயல்பொழிமேகமென்னபுண்ணியஞ்செய்தவென்பார்
செயலருந்தவங்கள்செய்திச்செம்மலைத்தந்தசெல்வத்
தயரதற்கென்னகைம்மாறுடையம்யாம்தக்கதென்பார். (அ௯)

வாரணமாற்றவந்துகராவுயிர்மாற்றும்நேமி
நாரணனுக்குமிந்தநம்பிதன்கருணையென்பார்
ஆரணமறிதல்தேற்றாவையனையனுகிநோக்கி
காரணமின்றியேயுங்கண்கள்நீர்கலுழநிற்பார். (௯௦)

நீலமாமுகிலனான்றனிறையினோடறிவுநிற்க
சீலமார்க்குண்டுகெட்டேன்றேவரினடங்குவானோ
காலமாக்கணிக்கும்நுண்மைக்கணக்கையுங்கடந்துநின்ற
மூலமாய்முடிவிலாதமூர்த்தியிம்முன்பனென்பார். (௯௧)

ஆர்கலியகழ்ந்தோர்கங்கையவனியிற்கொணர்ந்தோர்முந்தை
போர்கெழுபுலவர்க்காகியசுரரைப்பொருதுவென்றோர்
பேர்கெழுசிறப்பின்வந்தபெரும்புகழ்நிற்பதையன்
தார்கெழுதிரடோள்தந்தபுகழினைத்தழுவியென்பார். (௯௨)

(வேறு.) சந்தமிவைதாவில்மணியாரமிவையாவும்
சிந்துரமுமிங்கிவைசெறிந்தமதவேழப்
பந்திகள்வயப்பரிபசும்பொனின்வெறுக்கை
மைந்தவறியோர்கொளவழங்கெனவிசைப்பார். (௯௩.)

மின்பொருவுதேரின்மிசைவீரன்வருபோழ்தில்
தன்பொருவில்கன்றுதனிதாவிவரல்கண்டாங்
கன்புருகுசிந்தையொடுமாவுருகுமாபோல்
என்புருகிநெஞ்சுருகிநஞ்சுருகிநிற்பார். (௯௪)

சத்திரம்நிழற்றநிமிர்தானையொடுநானா
அத்திரம்நிழற்றவருளோடவனியாள்வார்
புத்திரரினிப்பெறுதல்புல்லிதெனநல்லோர்
சித்திரமெனத்தனிதிகைத்துருகிநிற்பார். (௯௫)

கார்மினெடுலாயதெனநூல்கனலுமார்பன்
தேர்மிசைநம்வாயில்கடிதேகுதல்செய்வானே
கூர்கனகராசியொடுகோடிமணியாலும்
தூர்மினெடுவீதியினையென்றுசொரிவாரும் (௯௬)

தாய்கையில்வளர்ந்திலன்வளர்த்ததுதவத்தால்
கேகயன்மடந்தைகிளர்ஞாலமிவனாள
ஈகையிலுவந்தவவ்வியற்கையிதுவென்றால்
தோகையிவள்பேருவகைசொல்லலரிதென்பார். (௯௭)

பாவமுமருந்துயருமேவர்பழியுமென்பார்
பூவலயமின்றுதனியன்றுபொதுவென்பார்
தேவர்பகையுள்ளனவிவ்வள்ளல்தெறுமென்பார்
ஏவல்செயுமன்னர்தவம்யாவதுகொலென்பார். (௯௮)

ஆண்டினையராயினையகூறவடல்வீரன்
தூண்டுபுரவிப்பொருவில்சுந்தரமணித்தேர்
நீண்டகொடிமாடநிரைவீதிநிறையப்போய்
பூண்டபுகழ்மன்னனுறைகோயில்புகலோடும். (௯௯)

(வேறு.) ஆங்குவந்தடைந்தவண்ணலாசையின்கவரிவீச
பூங்குழன்மகளிருள்ளம்புதுக்களியாடநோக்கி
வீங்கிருங்காதல்காட்டிவிரிமுகக்கமலபீடத்
தோங்கியமகுடஞ்சூடிபுவனைவீற்றிருப்பக்காணான். (௧௦௦)

வேத்தவைமுனிவரோடுவிருப்பொடுகளிக்குமெய்ம்மை
ஏத்தவையிசைக்குஞ்செம்பொன்மண்டபமினிதினெய்தான்
ஓத்தவையுலகத்தெங்குமுள்ளவையுணர்ந்தாருள்ளம்
பூத்தவைவடிவையொப்பான்சிற்றவைகோயில்புக்கான். (௧௦௧)

புக்கவன்றன்னைநோக்கிப்புரவலர்முனிவர்யாரும்
தக்கதேநினைந்தான்தாதைதாமரைச்சரணஞ்சூடி
திக்கினைநிமிர்த்தகோலச்செல்வனேசெம்பொற்சோதி
மிக்குயர்மகுடஞ்சூட்டச்சூடுதல்விழுமிதென்றார். (௧௦௨)

ஆயனநிகழும்வேலை அண்ணலும் அயர்ந்துதேறத்
தூயவன் இருந்தசூழல் துருவினன்வருதல்நோக்கி
நாயகன் உரையான்வாயால் நான் இதுபகர்வென் என்று
தாயெனநினைவான்முன்னேகூற்றெனத்தமியள்வந்தாள். (௧௦௩)

வந்தவள்தன்னைச்சென்னிமண்ணுறவணங்கிவாய்த்த
சிந்துரப்பவளச்செவ்வாய்செங்கையிற்புதைத்துமற்றை
சுந்தரத்தடக்கைதானைமடக்குறத்துவண்டுநின்றான்
அந்திவந்தடைந்ததாயைக்கண்டஆன்கன்றின் அன்னான். (௧௦௪)

நின்றவன்தன்னைநோக்கியிரும்பினையியைந்தநெஞ்சிற்
கொன்றுழல்கூற்றமென்னும்பெயரினிற்கொடுமைபூண்டாள்
இன்றெனக்குணர்த்தலாவதேயதேயென்னினுநும்
முன்னுனக்குந்தைமைந்தவுரைப்பதோருரையுண்டென்றாள். (௧௦௫)

எந்தையேஎவநீரேஉரைசெயஇயைவதுண்டேல்
உய்ந்தனென்அடியேன்என்னிற்பிறந்தவர்உளரோவாழி
வந்ததென்தவத்தின்ஆயவருபயன்மற்றொன்றுண்டோ
தந்தையும்தாயும்நீரேதலைநின்றேன்பணிமின்என்றான். (௧௦௬)

ஆழிசூழுலகமெல்லாம்பரதனேயாளநீபோய்த்
தாழிருஞ்சடைகள்தாங்கித்தாங்கருந்தவமேற்கொண்டு
பூழிவெங்கானம்நண்ணிப்புண்ணியத்துறைகளாடி
ஏழிரண்டாண்டின்வாவென்றியம்பினனரசனென்றாள். (௧௦௭)

இப்பொழுதெம்மனோராலியம்புதற்கெளிதேயாரும்
செப்பருங்குணத்திராமன்றிருமுகச்செவ்விநோக்கில்
ஒப்பதேமுன்புபின்பவ்வாசகமுணரக்கேட்ட
அப்பொழுதலர்ந்தசெந்தாமரையினைவென்றதம்மா (௧௦௮)

தெருளுடைமனத்துமன்னனேவலிற்றிறம்பவஞ்சி
இருளுடையுலகந்தாங்குமின்னலுக்கியைந்துநின்றான்
உருளுடைச்சகடம்பூண்டவுடையவனுய்த்தகாரே
றருளுடையொருவனீக்கவப்பிணியவிழ்ந்ததொத்தான். (௧௦௯)

மன்னவன்பணியன்றாகில்நும்பணிமறுப்பனோவென்
பின்னவன்பெற்றசெல்வமடியனேன்பெற்றதன்றோ
என்னினியுறுதியப்பாலிப்பணிதலைமேற்கொண்டேன்
மின்னொளிர்கானமின்றேபோகின்றேன்விடையுங்கொண்டேன். (௧௧௦)

௩-வது. கைகேசிசூழ்வினைப்படலம்-முற்றும். ஆ திருவிருத்தம்-௨௧௫.

கம்பநாட்டாழ்வார்திருவடிகளேசரணம்.

## ௪-வது. நகர்நீங்குபடலம்.

என்றுகொண்டினையகூறியடியிணையிறைஞ்சிமீட்டும்
தன்றுணைத்தாதைபாதமத்திசைநோக்கித்தாழ்ந்து
பொன்றிணிபோதினாளும்பூமியும்புலம்பநையக்
குன்றினுமுயர்ந்ததோளான்கோசலைகோயில்புக்கான். (௧)

குழைக்கின்றகவரியின்றிக்கொற்றவெண்குடையுமின்றி
இழைக்கின்ற * விதி முன்செல்லத்தருமம்பின்னிரங்கியேக
மழைக்குன்றமனையான்மௌலிகவித்தனன்வருமென்றென்று
தழைக்கின்றவுள்ளத்தன்னாள்முன்னொருதமியன்சென்றான். (௨)

* விதி - தம்முடைய ஆதிசங்கற்பம்.

புனைந்திலன்மௌலிகுஞ்சிமஞ்சனப்புனிதநீரால்
நனைந்திலனென்கொலென்னுமையத்தாள்நளினபாதம்
வனைந்தபொற்கழற்கால்வீரன்வணங்கலுங்குழைந்துவாழ்த்தி
நினைந்ததென்னிடையுண்டோநெடுமுடிபுனைதற்கென்றாள். (௩)

(வேறு.) மங்கையம்மொழிகூறலுமானவன்
செங்கைகூப்பிநின்காதற்றிருமகன்
பங்கமில்குணத்தெம்பிபரதனே
துங்கமாமுடிசூடுகின்றானென்றான். (௪)

முறைமையன்றென்பதொன்றுண்டுமும்மையின்
நிறைகுணத்தவனின்னினும்நல்லனால்
குறைவிலனெனக்கூறினள்நால்வர்க்கும்
மறுவிலன்பினில்வேற்றுமைமாற்றினாள். (௫)

என்றுபின்னருமன்னவனேவிய
தன்றெனாமைமகனேயுனக்கறன்
நன்றுநும்பிக்குநானிலம்நீகொடுத்
தொன்றிவாழுதியூழிபலவென்றாள். (௬)

தாயுரைத்தசொற்கேட்டுத்தழைக்கின்ற
தூயசிந்தையத்தோமில்குணத்தினான்
நாயகன்னெனைநன்னெறியுய்ப்பதற்
கேயதுண்டோர்பணியென்றியம்பினான். (௭)

ஈண்டுரைத்தபணியென்னையென்றவட்
காண்டொரேழினோடேழகன்கானிடை
மாண்டமாதவரோடுடன்வைகிப்பின்
மீண்டுநீவரல்வேண்டுமென்றானென்றான். (௮)

ஆங்கவ்வாசகமென்னுமனல்குழை
தூங்குதன்செவியில்தொடராமுனம்
ஏங்கினாள்இளைத்தாள்திகைத்தாள்மனம்
வீங்கினாள்விம்மினாள்விழுந்தாளரோ. (௯)

வஞ்சமோமகனேயுனைமாநிலம்
தஞ்சமாகநீதாங்கென்றவாசகம்
நஞ்சமோயினிநானுயிர்வாழ்வெனோ
அஞ்சுமஞ்சுமென்னாருயிரஞ்சுமால். (௧௦)

கையைக்கைநெரிக்குந்தன்காதலன்
வைகுமாலிலையன்னவயிற்றினை
பெய்வளைத்தளிராற்பிசையும்புகை
வெய்துயிர்க்கும்விழுங்கும்புழுங்குமால். (௧௧)

நன்றுமன்னன்கருணையெனாநகும்
நின்றமைந்தனைநோக்கிநெடுஞ்சுரந்
தென்றுபோவதெனவெழுமின்னுயிர்
பொன்றும்போதுற்றதுற்றதுபோலுமே. (௧௨)

அன்பிழைத்தமனத்தரசற்குநீ
என்பிழைத்தனையென்றுநின்றேங்குமால்
முன்பிழைத்தவறுமையின்முற்றினோர்
பொன்பிழைக்கப்பொதிந்தனர்போலவே. (௧௩)

அறமெனக்கிலையோவெனுமாவிநைந்
திறவடுத்ததென்றெய்வதங்காளெனும்
பிறவுரைப்பதென்கன்றுபிரிந்துழி
கறவையொப்பக்கரைந்துகலங்கினாள். (௧௪)

இத்திறத்தினிடருறுவாள்தனைக்
கைத்தலத்தினெடுத்தருங்கற்பினோய்
பொய்த்திறத்தினார்க்குதியோபுகல்
மெய்த்திறத்துநம்வேந்தனைநீயென்றான். (௧௫)

பொற்புறுத்தனமெய்ம்மைபொதிந்தன
சொற்புறுத்தற்குரியனசொல்லினான்
கற்புறுத்தியகற்புடையாடனை
வற்புறுத்திமனங்கொளத்தேற்றுவான். (௧௬)

சிறந்ததம்பிதிருவுறவெங்கையை
மறந்தும்பொய்யிலனாக்கிவனத்திடை
உறைந்துநீருமுறுதிபெற்றேனினிற்
பிறந்துநான்பெறும்பேறென்பதியாவதோ. (௧௭)

விண்ணுமண்ணுமிவ்வேலையுமற்றும்வே
றெண்ணும்பூதமெலாமிறந்தேகினும்
அண்ணலேவல்மறுக்கவடியனேற்
கொண்ணுமோவிதற்குள்ளழியேலென்றான். (௧௮)

ஆயினையவரசன்றனாணையால்
ஏகலென்பதியானுமுறைக்கிலென்
சாகலாவுயிர்தாங்கவல்லேனையும்
போகினின்றொடுங்கொண்டனைபோகென்றாள். (௰௯)

என்னைநீங்கியிடர்க்கடல்வைகுறும்
மன்னர்மன்னனைவற்புறுத்தாதுடன்
துன்னுகானந்தொடரத்துணிவதோ
அன்னையேயறம்பார்க்கிலையாமென்றான். (௨௰)

வரிவிலெம்பியிம்மண்ணரசாயவற்
குரிமைமாநிலமுற்றபின்கொற்றவன்
றிருவினீங்கித்தவஞ்செயுநாளுடன்
அருமைநோன்புகளாற்றுதியாமன்றே. (௨௧)

சித்தம்நீதிகைக்கின்றதென்றேவரும்
ஒத்தமாதவஞ்செய்துயர்ந்தாரன்றே
எத்தனைக்குளவாண்டுகளீண்டவை
பத்துநாலும்பகலலவோவென்றான். (௨௨)

முன்னர்க்கோசிகனென்னுமுனிவரன்
தன்னருட்டலைதாங்கியவிஞ்சையும்
பின்னரெய்தியபேறும்பிழைத்தவோ
இன்னம்நன்றவர்க்கேவினைசெய்தலே. (௨௩)

மாதவர்க்குவழிபாடிழைத்தரும்
போதமுற்றிப்பொருவருவிஞ்சைகள்
ஏதமற்றனதாங்கியிமையவர்
காதல்பெற்றுநன்காவரக்காண்டியால். (௨௪)

மகரவேலைமண்டொட்டவண்டாடுதார்ச்
சகரர்தாதைபணிதலைநின்றுதம்
புகரில்யாக்கையினின்னுயிர்போக்கிய
நிகரின்மாப்புகழ்நின்றதன்றோவெனா. (௨௫)

மான்மறிக்கரத்தான்மழுவேந்துவான்
தான்மறுத்திலன்றாதைசொற்றாயையே
ஊன்அறக்குறைத்தானரவோனருள்
யான்மறுப்பதென்றெண்ணுவதோவென்றான். (௨௬)

ை இத்திறத்தவெனைப்பலவாசகம்
உய்த்துரைத்தமகனுரையுட்கொளா
எத்திறத்துமிறக்குமிந்நாடென்று
மெய்த்திறத்துவிளங்கிழையுன்னுவாள். (உ எ)

அவனிகாவல்பரதனதாருக
இவனிந்ஞாலமிறந்திருக்கானிடைத்
தவனிலாவகைகாப்பென்றகைவிலாப்
புவனிநாதற்றொழுதென்றுபோயினள். (உ அ)

போயின்றாளைத்தொழுதுபுரவலன்
ஆகமற்றவள்தன்னையுமாற்றிச்
சோகந்தீர்ப்பவளென்றுசுமித்திரை
மேகந்தோய்தனிக்கோயிலமேயினன். (உ கூ)

நடந்தகோசலைகேகையநாட்டிறை
மடந்தைகோயிலையெய்தினள்மன்னவன்
கிடந்தபார்மிசைவீழ்ந்தனள்கெட்டுயிர்
உடைந்தபோழ்தினுடல்விழுந்தென்னவே. (௩0)

(வேறு.) பிரியார்பிரிவேதென்னும்பெரியோய்தகவோவென்னும்
நெரியோவடியேம்நிலைநீநினையாநினைவேதென்னும்
வரியோர்தனமேயென்னுந்தமியேன்வலியேயென்னும்
அரிவோவினையோவென்னும்அரசேஅரசேயென்னும். (௩ க)

இருளற்றிடவுற்றொளிரும்இரவிக்கெதிருந்திகிரி
உருளத்தனியுய்த்தொருகோனடையிற்கடைகாணுலகம்
பொருளற்றிடமுற்றுறுமப்பகலிற்புகுதற்கென்றே
அருளக்கருதிற்றிதுவோவாசர்க்கரசேயென்னும். (௩ உ)

திரையார்கடல்சூழுலகின்றவமேதிருவின்திருவே
நிரையார்கலையின்கடலேநெறியார்மறையின்நிலையே
கரையாவயர்வேனெனைநீகருணாலயனேயெனினென்
றுரையாவிதுதானழகோஉலகேழுடையாயென்னும். (௩ ௩)

மின்னின்றனையமேனிவெறிதாய்விடநின்றதுபோல்
உன்னுந்தகைமைக்கடையாவுறுநோயுறகின்றுணரான்
இன்னென்றுரையானென்னேயிதுதான்யாதென்றறியென்
மன்னன்றகைமைகாணவாராய்மகனேயென்னும். (௩ ௪)

இவ்வாறமூவாளிரியற்குரல்சென்றிசையாமுன்னம்
ஓவ்வாதொல்லாதென்னுவொளிவாணிருபர்முனிவர்
அவ்வாறறிவாயென்னவந்தான்முனிவன்அவனும்
வெவ்வாளரசன்நிலைகண்டென்றும்வினைவென்றுன்று. (௩௫)

இறந்தான்அல்லன்அரசன்இறவாதொழிவான்அல்லன்
மறந்தான்உணர்வென்றுன்றுவன்கேகயர்கோன்மங்கை
துறந்தாள்துயரம்தன்னைத்துறவாதொழிவாளிவளே
பிறந்தார்பெயருந்தன்மைபிறராலறிதற்கெளிதோ. (௩௬)

என்றுவுன்னுமுனிவன்இடாலமூவாள்துயரம்
சொன்னுளாகாளெனமுன்றெமுகேகயர்கோன்மகளை
அன்றுயுனாயாயரசன்அயர்வானிலையென்னென்ன
தன்றால்நிகழ்ந்ததன்மைதானேதெரியச்சொன்னுள். (௩௭)

சொற்றுள்சொற்றுமுன்னஞ்சுடர்வாளரசர்க்கரசை
பொற்றுமனைபோற்கையாற்பொடிசூழ்படிநின்றெழுவி
சுற்றுய்அயரேல்அவளேதரும்நின்காதற்கரசன்
றெற்றேசெயலின்றெழுநீயென்றென்றிரவாநின்றுன். (௩௮)

சீதப்பனிநீரளவித்தின்காலுதவுந்தண்கால்
போதத்தளவேதவழ்வித்தின்சொற்புகலாநின்றுன்
ஓதக்கடனஞ்சனையாளுனாஙஞ்சொருவாறவியக்
காதற்புதல்வன்பெயரோபுகல்வானுயிருங்கண்டான். (௩௯)

காணுவையாவினிநீயொழிவாய்கழிபேரவலம்
ஆணுயகனேயினிநாடாள்வானிடையூறுளதோ
மாணுவுனாயாடானேதருமாமழையேயனையான்
பூணுதொழிவானெனில்யாமுளமோபொன்றேலென்றுன். (௪௦)

என்றம்முனிவன்றன்னைநினையாவினையேனினியான்
பொன்றும்மளவில்லவனைப்புனைமாமகுடம்புனைவித்
தொன்றும்வனமென்றுன்னுவண்ணஞ்செய்தென்னுனையும்
குன்றும்பழிபூணுமற்காவாய்கோவேயென்றுன். (௪௧)

முனியும்முனியுஞ்செய்கைக்கொடியாள்முகமேமுன்னி
இனியுன்புதல்வற்கரசும்எனையோர்க்கின்னுயிரும்
மனுவின்வழிநின்கணவற்குயிரும்உதவிவசைதீர்
புனிதம்மருவும்புகழேபுனையாய்பொன்னேயென்றுன். (௪௨)

மொய்ம்மாண்வினைவேரறவென்றொழிவான்மொழியாமுன்னம்
எம்மாவழுவாளரசன்மெய்யிற்பிரிவானென்னில்
இம்மாவுலகத்துயிரோடினிவாழ்வுகவேனென்சொல்
பொய்மாணுமற்றின்றேபொன்றுதொழியேனென்றாள். (௪௩)

கொழுநன்றுஞ்சும்மெனவுங்கொள்ளாதுலகம்மெனவும்
பழிநின்றுயரும்மெனவும்பாவம்முளதாமெனவும்
ஒழிகின்றிலையன்பியுமொன்றுணர்கின்றிலையானினிமேல்
மொழிகின்றனவென்னென்றுமுனியும்முறையன்றென்பான். (௪௪)

கண்ணோடாதேகணவனுயிரோடிடர்காணாதே
புண்ணோடுங்கனலோவிடமோவென்னப்புகல்வாய்
பெண்ணோநீயோமாயாப்பேயோகொடியாய்நீயிம்
மண்ணோடின்னோடென்னும்வசையோவலிதேயென்றான். (௪௫)

வாயான்மன்னன்மகனைவனமேகென்றுமுன்னம்
நீயோசொன்னாயவனேகியிர்கானிடைவெங்நெறியில்
போயோபுகலோதவிரான்புகழோடுயிரைச்சுடுவெங்
தீயோநின்போற்றீயாருளரோசெயலென்னென்றான். (௪௬)

தாவில்முனிவன்புகலத்தளராநின்றமன்னன்
நாவில்நஞ்சம்முடையநங்கைதன்னைநோக்கி
பாவிநீயேவெங்கான்படர்வாயென்றென்னுயிரை
ஏவினாயோவவனும்ஏகினானேயென்றான். (௪௭)

கண்டேனெஞ்சங்கனிவாய்க்கனிவாய்விடநானெடுநாள்
உண்டேனதனனீயென்னுயிரைமுதலோடுண்டாய்
பண்டேயெரிமுன்னுன்னைப்பாவிதேவியாகக்
கொண்டேனல்லேன்வேறோர்கூற்றந்தேடிக்கொண்டேன். (௪௮)

விழிக்குங்கண்வேறில்லாவெங்கானென்கான்முளையைச்
சுழிக்கும்வினையாலேகச்சூழ்வாயென்னைப்போழ்வாய்
பழிக்கும்நாணாய்மாணாப்பாவியினியென்பலவுன்
கழுத்தின்னாணுன்மகற்குக்காப்பின்னாணுமென்றான். (௪௯)

இன்னேபலவும்பகர்வானிரங்காதானைநோக்கிச்
சொன்னேனின்றேயிவளென்றாரமல்லள்துறந்தேன்
மன்னேயாவான்வருமப்பரதன்றனையுமகனென்
றுன்னேன்முனிவாவவனுமாகானுரிமைக்கென்றான். (௫௦)

என்னைக்கண்டும்ஏகாவண்ணம்இடையூறுடையான்
உன்னைக்கண்டும்இலனேஎன்றான்உயர்கோசலையை
பின்னைக்கண்டான்அனையான்பிரியக்கண்டதுயரம்
தன்னைக்கண்டேதவிர்வாள்தளர்வாள்நிலையிற்றளர்வான். (௫௧

மாற்றாள்செயலாமென்றும்கணவன்வரமீய்ந்துள்ளம்
ஆற்றாதயர்ந்தானென்றும்அறிந்தாள்அவளும்அவனைத்
தேற்றாநின்றாள்மகனைத்திரிவானென்றாள்அரசன்
தோற்றான்மெய்யென்றுலகஞ்சொல்லும்பழிக்குஞ்சோர்வாள். (௫௨

தள்ளாநிலைசால்மெய்ம்மைதழுவாவழுவாவகையின்
றெள்ளாநிலைகூர்பெருமைக்கிழிவாமென்றாலுரவோய்
விள்ளாநிலைசேரன்பால்மகன்மேல்மெலியினுலகம்
கொள்ளாதன்றேவென்றாள்கணவன்குறையக்குறைவாள். (௫௩

போவாதொழியானென்றாள்புதல்வன்றன்னைக்கணவன்
சாவாதொழியானென்றென்றுள்ளந்தள்ளுற்றயர்வாள்
காவாயென்றாள்மகனைக்கணவன்புகழுக்கழிவாள்
ஆவாவுயர்கோசலையாம்அன்னம்என்னுற்றனளே. (௫௪)

உணர்வான்அனையாளுரையாலுயர்ந்தானுரைசால்குமரன்
புணரானிலமேவனமேபோவானேயாமென்னா
இணரார்தருதாரரசன்இடராலயர்வான்வினையேன்
துணைவாதுணைவாவென்றான்தோன்றால்தோன்றாவென்றான். (௫௫)

கண்ணும்நீராயுயிரும்ஒழுகக்கழியாநின்றேன்
எண்ணும்நீர்நான்மறையோர்எரிமுன்னின்மேற்சொரிய
மண்ணும்நீராய்வந்தபுனலைமகனேவினையேற்
குண்ணும்நீராயுதவியுயர்கானடைவாயென்றான். (௫௬)

படைமாணரசைப்பலகாற்பழுவாய்மழுவாலெறிவான்
மிடைமாவலிதானனையான்வில்லாலடுமாவல்லாய்
உடைமாமகுடம்புனையென்றுரையாவுடனேகொடியேன்
சடைமாமகுடம்புனையத்தந்தேனந்தோவென்றான். (௫௭)

கறுத்தாயுருவம்மனமுங்கண்ணுங்கையுஞ்செய்ய
பொறுத்தாய்பொறையேயிறைவன்புரமூன்றெரித்தபோர்வில்
இறுத்தாய்தமியேனென்னாதென்னையிம்மூப்பிடையே
வெறுத்தாயினிநான்வாணாள்வேண்டேன்வேண்டேனென்றான். (௫௮)

பொன்னின் முன்னம்ஒளிரும்பொன்னேபுகழின்புகழே
னின்பின்னும்வரிவிற்குமராமெய்யின்மெய்யே
ன்னின்முன்னம்வனம்நீயடைதற்கெளியேனல்லேன்
ன்னின்முன்னம்புகுவேன்உயர்வானகம்யானென்ருன். (௫௯)

கெருதற்கொத்தநெஞ்சம்நேயத்தாலேயாவி
உருதற்கொத்தஉடலும்உடையேன்உன்போலல்லேன்
தருதற்கொத்தசனகன்தையல்கையைப்பற்றி
நற்கண்டகன்ருற்போகக்காணேனென்ருன். (௬௦)

றேபார்வேனினியானெல்லேயுன்னிற்பிரிய
ந்றேயுலகம்எனினும்வானேவருந்தாதெனினும்
பொற்றோரசேதமியேன்புகழேயுயிரேயுன்னைப்
பெற்றேனருமையறிவேன்பிழையேன்பிழையேனென்ருன். (௬௧)

அள்ளற்பள்ளப்புனல்சூழ் அகன்மாநிலமும் அரசும்
கொள்ளக்குறையாநிதியின்குவையும்முதலாமெவையும்
கள்ளக்கைகேசிக்கேயுதவிப்புகழ்கைக்கொண்ட
வள்ளற்றனம்என்னுயிரைமாய்க்கும்மாய்க்கும்என்ருன். (௬௨)

ஒலியார்கடல்சூழுலகத்துயர்வானிடைநாகரினும்
பொலியாநின்ருருன்னைப்போல்வாருளரோபொன்னே
வலியாருடையாரென்ருல்மழுவாளுடையான்வரவும்
சலியாநிலையாயென்ருற்றவிர்வாருளரோவென்ருன். (௬௩)

கேட்டேயிருந்தேனெனினுங்கிளர்வானின்றேயடைய
மாட்டேனுகில்அன்ருேவன்கண்என்கண்மைந்தா
காட்டேயுறைவாய்நீயிக்கைகேசியையுங்கண்டிந்
நாட்டேயுறைவேனென்ருல்நன்றென்றன்மையென்ருன். (௬௪)

மெய்யார்தவமேசெய்துன்மிடல்மார்பினிற்பெற்ற
செய்யாளென்னும்பொன்னும்நிலமாதென்னுந்திருவும்
உய்யாருய்யார்கெடுவேனுன்னைப்பிரியின்வினையேன்
ஐயாகைகேசியைநேராகேனுநானென்ருன். (௬௫)

பூணுரணியும்முடியும்பொன்னுசனமுங்குடையும்
சேணுர்மார்புந்திருவுந்தெரியக்காணத்திரிவேன்
மாணுமாவற்கலேயும்மாவின்ருேலும்மேவநான்
காணுதொழிந்தேனென்ருல்நன்ருய்த்தன்ருேகருமம். (௬௬)

என்றானன்றேன் செவ்வா றிசைதந் தரசன் உயிரும்
சென்றான் இன்றோ டென்னுந் தன்மை யெய்தித் தேய்ந்தான்
மென்றோள் மார்பின் முனிவன் வேந்தே அயரேல் அவனை
இன்றே காதவண்ணந் தகைவென் உலகோ டென்று. (௬௭)

முனிவன் செல்லும் அளவில் முடியுங் கொல்லென் றரசன்
தனியின் றுழல்தன் னுயிரைச் சிறிதே தகைவா னிந்த
புனிதன் போனால் இவனாற் போகா தொழிவா னென்னு
மனிதன் வடிவங் கொண்ட மறுவுந் தன்னை மறந்தான் (௬௮)

மறந்தா னினைவும் உயிரும் மன்னன் என்னும் மறுகா
இறந்தான் கொல்லோ அரசன் என்று இடருற் றழிவாள்
துறந்தாய் மகனே உலகோ டுடைமையும் என்னத் துணையாம்
அறந்தா னிதுவோ வையா வரசர்க் கரசே யென்றாள். (௬௯)

மெய்யின் மெய்யே யுலகின் வேந்தர்க் கெல்லாம் வேந்தே
உய்யும் வகைநின் னுயிரை யோம்பா திஞ்ஞான் றேம்பில்
வையம் முழுதுந் துயரான் மறுகும் முனிவ னுடன் நம்
ஐயன் வரினும் வருமா லயரே லரசே யென்றாள். (௭0)

என்றென் றரசன் மெய்யும் இருதா ளிணையும் முகமும்
தன்றன் செய்ய கையாற் றைவந் திடுகோசலையை
ஒன்றுந் தெரியா மம்மல் உள்ளத் தரசன் மெள்ள
வன்றிண் சிலைநங் குரிசில் வருமே வருமே யென்றான். (௭௧)

வன்மா யக்கை கேசி வாக்கால் என்றன் உயிரை
முன்மாய் விப்பத் துணிந்தா ளேனுங் கூனி மொழியால்
தன்மா மகனுந் தானுந் தரணி பெறுமா றன்றி
என்மா மகனைக் கானே கென்றா ளென்றா னென்றான். (௭௨)

பொன்னார் தோளான் கானே புகுதப் புகுதல் தவிரான்
என்னா ருயிரோ வகலா தொழியா திதுகோசலை கேள்
முன்னா ளொருமா முனிவன் மொழியுஞ் சாபம் உளதென்
றந்நா ளுற்ற தெல்லாம் அவளுக் கரசன் அறைவான். (௭௩)

வெய்ய கானத் திடையே வேட்டை வேட்கை மிகவே
ஐய சென்று கரியோ டரிகள் துருவித் திரிவேன்
கையார் சிலையுங் கணையுங் கொடுகார் மிருகம் வருமோர்
செய்ய நதியின் கரைவாய்ச் சென்றே மறைய நின்றேன். (௭௪)

இருமாமுனிவன்மனையோடொளியொன்றிலவாய்நயனம்
ஒருமாமகனேதுணையாய்த்தவமேபுரிபோழ்தினின்வாய்
வருமாமகனேபுனல்கொண்டகல்வான்வருமாறறியேன்
பொருமாகணைவிட்டிடலும்புவிமீதலறிப்புரள. (எ௫)

புக்குப்பெருநீர்முகரும்பொருபோதகமென்றொலிமேல்
கைக்கட்கணைசென்றதலாற்கண்ணிற்றெரியக்காணேன்
அக்கைக்கரியின்குரலேயன்றிதென்னவெருவா
மக்கட்குரலென்றயர்வேன்மனம்நொந்தவண்வந்தனனால். (எ௬)

உய்யுங்கடனுங்கெழிழக்கணையோடுருள்வோற்காணா
மெய்யுந்தனுவும்மனனும்வெறிதேகிடமேல்வீழா
ஐயநீதான்யாவன்அந்தோஅருள்கென்றயர
பொய்யொன்றறியாமைந்தன்கேளிதென்னப்புகல்வான். (எஎ)

சேலாகியமாமுதல்வன்றிருவுந்தியினின்மலரின்
மேலாகியநான்முகனால்வேதங்களின்மாமுறையின்
பாலாகியயோனிகளின்பலவாம்வருணந்தருவான்
நாலாகியதாம்வருணந்தனின்முன்னைமைநல்கினனால். (எ௮)

அந்நான்மறையோன்வழியில்அருள்காசிபனன்மைந்தன்
மின்னார்புரிநூல்மார்பன்விருத்தேசனன்மெய்ப்புதல்வன்
நன்னான்மறைநூல்தெரியும்நாவான்சலபோசனெனச்
சொன்னான்முனிவன்தருசுரோசனன்யானென்றான். (எ௯)

இருகண்களுமின்றியதாய்தந்தைக்குமிங்கவர்கள்
பருகும்புனல்கொண்டகல்வானபடர்ந்தேன்பழுதாயினதால்
இருகுன்றனையபுயத்தாயிபமென்றுணராதெய்தாய்
உருகுந்துயரந்தவிர்நீயூழின்செயலீதென்றே. (௮0)

உண்ணீர்வேட்கைமிகவேயுயங்குமெந்தைக்கொருநீ
தண்ணீர்கொடுபோயளித்தென்சாவுமுரைத்தும்புதல்வன்
விண்மீதடைவான்றொழுதானெனவும்அவர்பால்விளம்பென்
றெண்ணீர்மையினான்விண்ணோரெதிர்கொண்டிடவேகினனால். (௮௧)

மைந்தன்வரவேநோக்கும்வளமாதவன்பால்மகவோ
டந்தண்புனல்கொண்டணுகாவயாவிதுபோதளவாய்
வந்திங்கணுகாதென்னேவந்ததென்றேநொந்தேம்
சந்தங்கமழுந்தோளாய்தழுவிக்கொளவாவெனவே. (௮௨)

ஐயாயானோரரசன்அயோத்திநகரத்துள்ளேன்
மையார்களபந்துருவிமறைந்தேவதிந்தேனிருள்வாய்
பொய்யாவாய்மைப்புதல்வன்புனல்மொண்டிடும்ஓதையின்மேல்
கையார்கணைசென்றதலாற்கண்ணிற்றெரியக்காணேன். (௮௩)

வீட்டுண்டலறுங்குரலால்வேழக்குரலன்றெனவே
ஓட்டந்தெதிராநீயார்எனஉற்றவெலாம்உரையா
வாட்டந்தருநெஞ்சினனாய்நின்றான்வணங்காவானோர்
ஈட்டம்எதிர்வந்திட்டேஇறந்தேகினன்விண்ணிடையே. (௮௪)

அறுத்தாய்கணையாலெனவேஅடியேன்றன்னைஅய்யா
கறுத்தேயருளாயானேகண்ணிற்கண்டேன்அல்லேன்
மறுத்தான்இல்லான்வனமொண்டிடும்ஓதையினெய்ததலால்
பொறுத்தேயருள்வாயென்றுவிருதாள்சென்னிபுனைந்தேன். (௮௫)

வீழ்ந்தாரயர்ந்தார்புரண்டார்விழிபோயிற்றின்றென்றார்
ஆழ்ந்தார்துன்பக்கடலுள்ஐயாஐயாஎன்றார்
போழ்ந்தாய்நெஞ்சைஎன்றார்பொன்னாடதனிற்போய்நீ
வாழ்ந்தேயிருப்பத்தரியேம்வந்தேம்வந்தேமினியே. (௮௬)

என்றென்றயருந்தவரையிருதாள்வணங்கியானே
இன்றும்புதல்வன்இனிநீர்ஏவும்பணிசெய்திடுவேன்
ஒன்றுந்தளர்வுற்றயரீர்ஒழிமின்இடரென்றிட்டும்
வன்றிண்சிலையாய்கேண்மோஎனவேஒருசொல்வகுத்தான். (௮௭)

கண்ணுண்மணிபோல்மகவையிழந்தும்உயிர்காதலியா
உண்ணுவெண்ணியிருந்தாலுலகோர்என்னென்றுரையார்
விண்ணின்றலைசேருதும்யாம்எம்போல்விடலைபிரிய
பண்ணும்பரிமாவுடையாய்அடைவாய்படர்வான்என்று. (௮௮)

தாவாதொளிருங்குடையாய்தவறிங்கிதுநின்சரணம்
காவாய்என்றாய்அதனாற்கடியசாபங்கருதேம்
ஏவாமகவைப்பிரிந்தின்றெம்போலிடருற்றனைநீ
போவாய்அகல்வான்என்னாப்பொன்னாட்டிடைபோயினரால். (௮௯)

சிந்தைதளர்வுற்றயர்தல்சிறிதும்இலனாயின்சொல்
மைந்தனுளனென்றதனால்மகிழ்வோடிவண்வந்தனனால்
அந்தமுனிசொற்றமையும்அண்ணல்வனம்ஏகுதலும்
என்றன்உயிர்வீகுதலும்இறையுந்தவறாவென்றான். (௯0)

இம்மாமொழிதந்தாசன்இடருற்றிடும்பொழுதினிலச்
செம்மாமயில்கோசலையுந்திகையாவுணர்வோய்வினளாய்
விம்மாநெறியின்விதியின்விளைவுந்தளர்வின்றொடர்வும்
அம்மாதவனும்விரைவோடவலந்தருநெஞ்சினனாய். (கூக)

(வேறு.) உரைசெய்பெருமையுயர்தவத்தோரோங்கல்
புரைசெய்மதகளிற்றான்பொற்கோயின்முன்னர்
முரைசமுழங்கமுடிசூட்டமொய்த்தாண்
டரைசரினிதிருந்தநல்லவையினானன். (கூஉ)

வந்தமுனியைமுகம்நோக்கிவாள்வேந்தர்
எந்தைபுகுதற்கிடையூறுண்டாயதோ
அந்தமில்சோகத்தமுதகுரல்தானென்ன
சிந்தைதெளிந்தோய்தெரியெமக்கிவ்வென்றுரைத்தார். (கூங)

கொண்டாள்வரமிரண்டுகைகையர்கோன்கொம்பவட்கு
தண்டாதசெங்கோற்றயாதனுந்தானளித்தான்
ஒண்டார்முகிலவனம்போகென்றொருப்படுத்தாள்
எண்டாலும்வேறில்லையீதடுத்தவாறென்றான். (கூச)

வேந்தன்பணியினாற்கைகேசிமெய்ப்புதல்வன்
பாந்தண்மிசைக்கிடந்தபாரளிப்பானயினான்
ஏந்துதடந்தோளிராமன்றிருமடந்தை
சாந்தனொருமுறையேகாடுறைவானயினான். (கூரு)

வாரார்முலையாருமற்றுள்ளமாந்தர்களும்
ஆராதகாதலரசர்களுமந்தணரும்
பேராதவாய்மைப்பெரியோனுரைசெவியில்
சாராதமுன்னந்தயரதனைப்போல்வீழ்ந்தார். (கூசா)

புண்ணுற்றதீயிற்புகையுற்றுயிர்பதைப்ப
மண்ணுற்றயர்ந்துமறுகுற்றுடம்பெல்லாம்
கண்ணுற்றவாரிகடலுற்றதங்கிலையே
விண்ணுற்றதெம்மருங்கும்விட்டழுதபேரோசை. (கூஎ)

மாதருங்கலமுமங்கலமுஞ்சிந்தித்தம்
கோதைபுடைபெயரக்கூற்றனையகண்செவப்ப
பாதமலர்சேவப்பத்தாம்பதைத்துப்பார்சேர்ந்தார்
ஊதையெறியவொசிபூங்கொடியொப்பார். (கூஅ)

ஆவா அரசன் அருள் இலனே.ஆம்என்பார்
காவாஅறத்தையினிக்கைவிடுவேம்யாம்என்பார்
தாவாதமன்னர்தலைத்தலைவீழ்ந்தேங்கினர்
மாவாதஞ்சாய்த்தமராமரமேபோல்கின்றார். (௯௯)

கிள்ளையொடுபூவையழுதகிளர்மாடத்
துள்ளுறையும்பூசையழுதஉருவறியா
பிள்ளையழுதபெரியோரையென்சொல்ல
வள்ளல்வனம்புகுவானென்றுரைத்தமாற்றத்தால். (௧௦௦)

சேதாம்பற்போதனையசெங்கனிவாய்வெண்டளவப்
போதாம்பற்றோன்றப்புணர்முலைமேற்பூந்தாள
மாதாம்பற்றென்னமழைக்கண்ணீராலியுக
நாதாம்பற்றுமழலைநங்கைமாரேங்கினர். (௧௦௧)

ஆவுமழுதவதன்கன்றழுதவன்றலர்ந்த
பூவுமழுதபுனற்புள்ளழுதகள்ளொழுகும்
காவுமழுதகளிறழுதகால்வயப்போர்
மாவுமழுதனவம்மன்னவனைமானவே. (௧௦௨)

ஞானியுமுய்கலானென்னுதேநாயகனைக்
கானியுமென்றுரைத்தகைகேசியுங்கொடிய
கூனியமல்லாற்கொடியார்பிறருளரோ
மேனியுமின்றிவெறுநீரோயாயினர். (௧௦௩)

தேறுதறிவழிந்தாரொங்குலப்பார்தேரோட்
நீறுகிச்சுண்ணம்நிறைந்ததெருவெல்லாம்
ஆறுகிஓடினகண்ணீர் அருநெஞ்சம்
கூறுகிஓடாதவித்துணையேகுற்றமே. (௧௦௪)

மண்செய்தபாவம்உளதென்பார்மாமலர்மேற்
பெண்செய்தபாவம்அதனிற்பெரிதென்பார்
புண்செய்தநெஞ்சைவிதியென்பார்பூதலத்தோர்
கண்செய்தபாவம்கடலிற்பெரிதென்பார். (௧௦௫)

ஆளான்பரதன்அரசென்பார்அய்யன்இனி
மீளான்நமக்குவிதிகொடிதுகாண்என்பார்
கோளாகிவந்தவாகொற்றமுடிதான்என்பார்
மாளாதநம்மின்மனம்வலியார்ஆர்என்பார். (௧௦௬)

ஆதிஅரசன்அருங்கேகயன்மகள்மேல்
காதல்முதிரக்கருத்தழிந்தான்ஆமென்பார்
சீதைமணவாளன்தன்னேடும்திக்கானம்
போதும்அதுஅன்றேற்புகுதும்எரியென்பார். (௧0௭)

கையால்நிலந்தடவிக்கண்ணீர்மெழுகுவார்
உய்யாள்போற்கோசலையென்றேவாதுவெய்துயிர்ப்பார்
அய்யாஇளங்கோவே.ஆற்றுதியோநீஎன்பார்
நெய்ஆழல்உற்றதுற்றூர்அந்நீள்நகரார். (௧0அ)

தன்றுறுவேயில்லதன்மகற்குப்பார்கொள்வான்
எள்ளுறியகருமம்நேர்ந்தாளிவளென்று
கள்ளுறுசெவ்வாய்க்கணிகைகாண்கைகேசி
உள்ளுறுகாதல்இலள்போல்என்றுள்ளழிந்தார். (௧0௯)

நின்றுதவமியற்றித்தான்நிரநேர்ந்ததோ
அன்றிவ்வுலகத்துள்ஆருயிராய்வாழ்வாரை
கொன்றுகளையக்குறித்தபொருள்அன்றே
நன்றுவரங்கொடுத்தநாயகற்குநன்றென்பார். (௧௧0)

பெற்றுடையமன்னவனுக்கிந்துபிறந்துலகம்
முற்றுடையகோவைப்பிரியாதுமொய்த்திண்டி
உற்றுறைதும்யாரும்உறையவேசின்றுனில்
புற்றுடையகாடெல்லாம்நாடாகிப்போம்என்பார். (௧௧௧)

என்னேநிருபர்இயற்கைஇருந்தவா
தன்னேரிலாததலைமகற்குத்தாரணியை
முன்னேகொடுத்துமுறைநிறம்பத்தம்பிக்கு
பின்னேகொடுத்தாற்பிழையாதோமெய்என்பார். (௧௧௨)

கோதைவரிவிற்குமரற்கொடுத்தநில
மாதையொருவர்புணர்வாரவஞ்சித்த
பேதைசிறுவனைப்பின்பார்த்துநிற்குமா
சீதைபிரியினுந்திராத்திருவென்பார். (௧௧௩)

உந்தாதுநெய்வார்த்துதவாதுகாலெறிய
நந்தாவிளக்கின்நடுங்குகின்றநங்கைமார்
செந்தாமரைத்தடங்கட்செவ்விஅருள்நோக்கம்
அந்தோபிரிதுமோஆவிதியேஎன்பார். (௧௧௪)

(வேறு.) கேட்டான்இளையோன்கிளர்ஞாலம்வரத்தினாலே
மீட்டாள்அளித்தாள்வனம்தம்முனின்வெம்மைமுற்றி
திட்டாதவேற்கட்சிறுதாயெனயாவராலும்
முட்டாதகாலக்கடைத்தீயெனமூண்டெழுந்தான். (௧௧௫)

கண்ணிற்கடைத்தீஉகநெற்றியிற்கற்றைநாற
விண்ணிற்சுடருஞ்சுடர்தோன்றமெய்நீர்விரிப்ப
உண்ணிற்கும்உயிர்ப்பெனும்ஊதைபிறக்கநின்ற
அண்ணற்பெரியோன்தனதாதியின்மூர்த்திஒத்தான். (௧௧௬)

சிங்கக்குருளைக்கிடுதீஞ்சுவைஊனைநாயின்
வெங்கட்கடுங்குட்டியைஊட்டவிரும்பினளே
நங்கைக்கறிவின்திறம்நன்றிதுநன்றிதென்னா
கங்கைக்கிறைவன்கடகக்கைபுடைத்துநக்கான். (௧௧௭)

சுற்றார்மணிஆர்வடிவாள்புடைதோன்றஆர்த்து
விற்றாங்கிவாளிப்பெரும்புட்டில்புறத்துவீக்கி
பற்றார்ந்தசெம்பொற்கவசம்பனிமேருவாங்கோர்
புற்றாம்எனஓங்கியதோளொடுமார்புபோர்க்க. (௧௧௮)

அடியிற்சுடர்பொற்கழல்ஆர்கலிநாணஆர்ப்ப
பொடியிற்றடவுஞ்சிறுநாண்பெரும்பூசல்ஓசை
இடியிற்றொடரக்கடலேழுமடுத்திஞ்ஞாலம்
முடியிற்குமுறும்மழைமும்மையின்மேன்முழங்க. (௧௧௯)

வானும்நிலனும்முதலீறில்வரம்பில்பூதம்
மேனின்றுகீழ்காறும்விரிந்தனவீழ்வபோல
தானும்தனதம்முனும்அல்லதுமும்மைஞாலத்
தூனும்உயிரும்உடையார்கள்உடைந்தொதுங்க. (௧௨0)

புவிப்பாவைபரங்கெடப்போர்உவந்தோரைஎல்லாம்
அவிப்பானும்அவித்தவர்ஆக்கையைஅண்டம்முற்றக்
குவிப்பானும்எனக்கொருகோவினைக்கொற்றமௌலி
கவிப்பானும்நின்றேன்இதுகாக்குனர்காமின்என்றான். (௧௨௧)

விண்ணாட்டவர்மண்ணவர்விஞ்சையர்நாகர்மற்றும்
எண்ணாட்டவர்யாவரும்நிற்கஓர்மூவர்ஆகி
மண்ணாட்டினர்காட்டினர்விட்டினர்வந்தபோதும்
பெண்ணாட்டம்ஒட்டேன்இனிப்பேர்உலகத்துள்என்னா. (௧௨௨)

காலக்கதிரோன்நடுவுற்றதோர்வெம்மைகாட்டி
ஞாலத்தவர்கோமகன்அங்காரத்தநாப்பண்
மாலைச்சிகரத்தனிமந்தரமேருமுந்தை
வேலைத்திரிகின்றதுபோற்றிரிகின்றவேலை. (கஉ௩)

வேற்றுக்கொடியாள்விளைவித்தவினைக்குவிம்மி
தேற்றத்தெளியாதயர்சிற்றவைபாலிருந்தான்
ஆற்றற்றுணைத்தம்பிதன்விற்புயலண்டகோளம்
கீற்றுத்துடையப்பகிரானுருமேறுகேட்டான். (கஉ௪)

விருக்கியபொற்கலன்வில்லிடஆரம்மின்ன
மாருத்தனிச்சொற்றுளிமாரிவழங்கிவந்தான்
காருக்கமிர்ந்துபுகைந்துகனன்றுபொங்கும்
ஆருக்கனல்ஆற்றும்அஞ்சனமேகம்என்ன. (கஉ௫)

மின்றொத்தசிற்றக்கனல்விட்டுவிளங்கின்ற
பொன்றொத்தமேனிப்புயலொத்ததடக்கையானை
என்னத்தஎன்னீஇமையோராமுனிந்திலாதாய்
சன்னத்தனுசித்தனுவேந்துதற்கேதுஎன்றான். (கஉ௬)

மெய்யைச்சிதைவித்துநின்மெய்ம்முறைநீத்தநெஞ்சம்
மையிற்கரியாள்எதிர்நின்னைநன்மௌலிசூட்டல்
செய்யக்கருதித்தடைசெய்குனர்தேவரேனும்
துய்யைச்சுடுவெங்கனலிற்சுடுவான்துணிந்தேன். (கஉ௭)

வலக்கார்முகம்என்கையதாகஅவ்வானுளோரும்
விலக்கார்அவர்வந்துவிலக்கினுமென்கைவாளிக்
கிலக்காளரிவித்துலகேழினொடேழுமன்னர்
குலக்காவலுமின்றுனக்கியான்தரக்கோடிஎன்றான். (கஉ௮)

இளையான்இதுகூறஇராமன்இயைந்தநீதி
வளையாவருநன்னெறிநின்னறிவாகும்அன்றே
உளையாஅறம்வற்றிடஊழ்வழுவுற்றசீற்றம்
விளையாதநிலத்துனக்கெங்ஙன்விளைந்ததென்றான். (கஉ௯)

நின்டான்அதுரைத்தலும்நித்திலம்தோற்கநக்கு
சேண்டான்தொடர்மாநிலம்நின்னதென்றுந்தைசெப்ப
பூண்டாய்பகையால்இழந்தேவனம்போதிஎன்றால்
யாண்டோஅடியேற்கினிச்சிற்றம்அடுப்பதென்றான். (கங0)

மின்கட்பரிவில்லவர்நீள்வனத்துன்னைநீக்க
புன்கட்பொறியாக்கைபொறுத்துயிர்போற்றுகேனோ
என்கட்புலமுன்னுனக்கீய்ந்துவைத்தில்லையென்ற
வன்கட்புலந்தாங்கியமன்னவன்காண்கொலென்றான், (கஙக)

பின்குற்றமன்னும்பயக்கும்அரசென்றல்பேணேன்
முன்கொற்றமன்னன்முடிகொள்கெனக்கொள்ளமுண்ட
தென்குற்றமன்றோஇகல்மன்னவன்குற்றம்யாதோ
மின்குற்றொளிரும்வெயில்தீக்கொடமைந்தவேலோய். (கஙஉ)

நதியின்பிழையன்றுநறும்புனலின்மையற்றே
பதியின்பிழையன்றுபயந்துநமைப்புரந்தாள்
மதியின்பிழையன்றுமகன்பிழையன்றுமைந்த
விதியின்பிழைநீயிதற்கென்னைவெகுண்டதென்றான். (கஙங)

உதிக்கும்உலையுள்உறுதீஎனஊதைபொங்க
கொதிக்கும்மனம்எங்கணம்ஆற்றுவென்கோளிழைத்தாள்
மதிக்கும்மதியாய்முதல்வானவர்க்கும்வலீஇதாம்
விதிக்கும்விதியாகுமென்விற்றொழில்காண்டியென்றான். (கஙச)

ஆய்தந்தவனவ்வுரைகூறலுமையநின்றன்
வாய்தந்தனகூறுதியோமறைதந்தநாவால்
நீதந்ததன்றேநெறியோர்கணிலாததீன்ற
தாய்தந்தையென்றாலவர்மேற்சலிக்கின்றதென்னே. (கஙரு)

நற்றாதையும்நீதனிநாயகன்நீவயிற்றில்
பெற்றாயும்நீயேபிறரில்லைபிறர்க்குநல்கக்
கற்றாயிதுகாணுதியின்றெனக்கைமறித்தான்
முற்றாமதியம்மிலைந்தான்முனிந்தானையன்னான். (கஙசு)

வரதன்பகர்வான்வரம்பெற்றவள்தானிவ்வையம்
சரதம்முடையாள்அவள்என்றனித்தாதைசெப்ப
பரதன்பெறுவான்இனியான்படைக்கின்றசெல்வம்
விரதம்இதின்நல்லதுவேறினியாவதென்றான். (கஙஎ)

ஆன்றான்பகர்வான்பினுமையவிவ்வையமையல்
தோன்றாநெறிவாழ்துணைத்தம்பியைப்போர்தொலைத்தோ
சான்றோர்புகழுந்தவத்தாதையைவாதைகொண்டோ
ஈன்றாளைவென்றோவினியிக்கதந்தீர்வதென்றான். (கஙஅ)

செல்லுஞ்சொல்வல்லானெதிர்தம்பியுந்தெவ்வர்சொல்லும்
சொல்லுஞ்சுமந்தேனிருதோளெனச்சோம்பியோங்கும்
கல்லுஞ்சுமந்தேன்கணைப்புட்டிலுங்கட்டமைத்த
வில்லுஞ்சுமக்கப்பிறந்தேன்வெகுண்டென்னையென்றான். (கஙௗ)

நன்சொற்கடந்தாண்டெனைநாளும்வளர்த்ததாதை
தன்சொற்கடந்தெற்கரசாள்வதுதக்கதன்றால்
என்சொற்கடந்தாலுனக்கியாதுளதீனமென்றான்
தென்சொற்கடந்தான்வடசொற்கலைக்கெல்லைதேர்ந்தான். (கசய)

சீற்றந்துறந்தானெதிர்நின்றுதெரிந்துசெப்பும்
மாற்றந்துறந்தான்மறைநான்கெனவாங்கல்செல்லா
நாற்றெண்டிசைவேலையில்நம்பிதனுணையாலே
ஏற்றந்தொடங்காக்கடலிற்றணிவெய்திநின்றான். (கசக)

அன்றன்றனையையனுமாதியொடங்கமென்று
தன்றாலுமளப்பருந்தானுந்தன்பாங்கர்நின்ற
பொன்மானுரியானுந்தழீஇயெனப்புல்லிப்பின்னைச்
சொன்மாணபுடையன்னைசுமித்திரைகோயில்புக்கான். (கசஉ)

கண்டான்மகனும்மானுந்தனகண்கள்போல்வார்
தண்டாவனஞ்செல்வதற்கேசமைந்தார்கள்தம்மை
புண்டாங்குநெஞ்சத்தனளாய்ப்படிமேற்புரண்டாள்
உண்டாயதுன்பக்கடற்கெல்லையுணர்ந்திலாதாள். (கசங)

சோர்வாளையோடித்தொழுதேந்திஎன்துன்பமென்னும்
ஈர்வாளைவாங்கமனந்தேற்றுதற்கேற்றசெய்வான்
போர்வாளரசர்க்கிறைபொய்த்தனன்ஆக்கிலேன்
கார்வானெடுங்கானிறைகண்டினுன்மீள்வெனென்றான். (கசச)

கான்புக்கிடினுங்கடல்புக்கிடினுங்கலிப்பேர்
வான்புக்கிடினும்எனக்கன்னவைமாணயோத்தி
யான்புக்கதொக்கும்எனையார்நலிகிற்குமிட்டார்
ஊன்புக்குயிர்புக்குணர்புக்குலையற்கவென்றான். (கசரு)

தாயாற்றுகிலாள்தனையாற்றுகின்றார்கள்தம்பால்
தீயாற்றுகிலார்தனிச்சிந்தையினின்றுசெற்ற
நோயாற்றுகில்லாவுயிர்போலநுடங்கிடையார்
மாயாப்பழியாள்தரவற்கலையேந்திவந்தார். (கசகூ)

கார்வானமொப்பான்றனைக்காண்டொறுங்காண்டொறும்போய்
நீராயுகக்கண்ணினும்நெஞ்சழிகின்றநீரார்
போரவிடர்ப்பட்டயலாருறுபீழைகண்டும்
நீராமனத்தாள்தாவந்தனசிரமென்றார். (கசஎ)

வாணித்திலவெண்ணகையார்தாவள்ளல்தம்பி
யாணர்த்திருநாடிழப்பித்தவரீந்தவெல்லாம்
பூணப்பிறந்தானும்பின்றுனைவைபோர்விலோடும்
காணப்பிறந்தேனும்பின்றேனவைகாட்டுமென்றான். (கசஅ)

அன்றான்அவர்தந்தனஆதரத்தோடும்எந்தி
இன்றுஇடர்தீர்ந்துடன்ஏகெனஎம்பிராட்டி
சொன்றல்அதுவேதுணைஆம்எனத்தூயநங்கை
பொன்னார்அடிமேற்பணிந்தான்அவளும்புகன்றாள். (கசகூ)

ஆகாதன்றானுனக்கவ்வனமிவ்வயோத்தி
மாகாதலிராமனம்மன்னவன்வையமீந்தும்
போகாவுயிர்த்தாயர்நம்பூங்குழற்சீதையென்றே
ஏகாயினியிவ்வயினிற்றலுமேதமென்றாள். (கரு0)

பின்னும்பகர்வாள்மகனேயிவன்பின்செல்தம்பி
என்னும்படியன்றடியாரினில்ஏவல்செய்தி
மன்னும்நகர்க்கேயிவன்வந்திடின்வாவதன்றேல்
முன்னம்முடியென்றனள்பால்முலைசோரநின்றாள். (கருக)

(வேறு.) இருவருந்தொழுதனரிரண்டுகென்றரீஇ
வெருவருமாவினிற்றுயும்விம்மினள்
பொருவருங்குமாரும்போயினார்புறம்
திருவனாத்துகிலொரீஇச்சீரைசாத்தியே. (கருஉ)

தான்புனைசீரையைத்தம்பிசாத்திடத்
தேன்புனைதெரியலான்செய்கைநோக்கினன்
வான்புனையிசையினய்மறுக்கிலாதுநீ
யான்புகல்வனையதோருறுதிகேளென. (கருங)

அன்னையரனைவருமாழிவேந்தனும்
முன்னையரல்லர்வெந்துயரின்மூழ்கினார்
என்னையும்பிரிந்தனரிடருறுவகை
உன்னைநீயென்பொருட்டுதவுவாயென்றான். (கருச)

ஆண்டகையம்மொழிபகரவன்பனும்
தூண்டருதிரள்புயந்துளங்கத்துன்னெனு
மீண்டதோருயிரிடைவிம்மவிம்முவான்
ஈண்டினக்கடியனேன்பிழைத்ததியாதென்றான். (கடுரு)

நீருளவெனினுளமீனும்நிலமும்
பாருளவெனினுளயாவும்பார்ப்புறில்
நாருளதனுவுளாய்நானுஞ்சீதையும்
ஆருளரெனின்உளெம்அருளுவாயென்றான். (கடுசா)

பைந்தொடியொருத்திசொற்கொண்டுபார்மகள்
நைந்துயிர்நடுங்கவுநடத்திகானென
உய்ந்தனனிருந்தனனுண்மைகாவலன்
மைந்தனென்றினியசொல்வழங்கினனெனு. (கடுஎ)

மாறினியென்னைநீவனங்கொள்வாயென
ஏறினவெகுளியையாதுமுற்றுற
ஆறினைதவிர்கெனவையவாணையில்
கூறியமொழியினுங்கொடியதாமென்றான். (கடுஅ)

செய்துடைசெல்வமோயாதுந்தீர்ந்தமை
கைதுடைத்தேகவுங்கடவையோவையா
நெய்துடைத்தடையலர்நேயமாதர்கண்
மைதுடைத்துறைபுகும்வயங்கொள்வேலினுய். (கடுகூ)

உரைத்தபின்னிராமனென்றுரைக்கநேர்ந்திலன்
வரைத்தடந்தோளினன்வதனநோக்கினன்
விரைத்தடந்தாமரைக்கண்ணின்மிக்கநீர்
நிரைத்திடையிடைவிழநெடிதுநிற்கின்றான். (கசா௦)

அவ்வயினரசவைநின்றுமன்பினன்
எவ்வமிலிருந்தவமுனிவனெய்தினன்
செவ்வியகுமாருஞ்சென்னிதாழ்ந்தனர்
கௌவையம்பெருங்கடல்முனியுங்கால்வைத்தான். (கசாக)

அன்னவர்முகத்தினோடகத்தைநோக்கினன்
பொன்னரைச்சிரையின்பொலிவுநோக்கினன்
என்னினியுணர்த்துவதெடுத்ததுன்பத்தால்
தன்னையுமுணர்ந்திலனுணருந்தன்மையான். (கசாஉ)

வாழ்வினைமுதலியமங்கலத்துநாள்
தாழ்வினையருவாச்சிரைசாத்தினான்
சூழ்வினைநான்முகத்தொருவர்சூழினும்
ஊழ்வினையொருவராலொழிக்கற்பாலதோ. (கசுங)

வெவ்வினையவள்தரவிளைந்ததேயுமன்
றிவ்வினைஇவன்வயின்எய்தற்பாற்றுமன்
றெவ்வினைநிகழ்ந்ததோஎவர்எண்ணமோ
செவ்விதின்ஒருமுறை தெரியும்பின்னென்றான். (கசுச)

விற்றடந்தாமரைச்செங்கண்வீரனை
உற்றடைந்தையநீஒருவிஓங்கிய
கற்றடங்கானுதியென்னிற்கண்ணகன்
மற்றடந்தானையான்வாழ்கிலானென்றான். (கசுரு)

அன்னவன்பணிதலையேந்தியாற்றுதல்
என்னதுகடன் அவன்இடரைநீக்குதல்
நின்னதுகடன்இதுநெறியும்என்றனன்
பன்னகப்பாயலுட்பள்ளிநீங்கினான். (கசுசு)

வெவ்வரம்பையில்சுரம்விரவென்றான்அலன்
தெவ்வரம்பனையசொற்றீட்டினாள்தனக்
கவ்வரம்பொருதவேல்அரசன்ஆய்கிலா
திவ்வரந்தருவென்என்றேன்றதுண்டென்றான். (கசுஎ)

என்றனன்எந்தைஇவ்வரங்கள்ஏவினாள்
ஈன்றவள்யான்அதுசென்னிஏந்தினேன்
சான்றெனநின்றநீதடுத்தியோஎன்றான்
தோன்றியநல்லறம்நிறுத்தத்தோன்றினான். (கசுஅ)

என்றபின்முனிவன்ஒன்றியம்பநேர்ந்திலன்
நின்றனன்நெடுங்கணீர்நிலத்துநீர்த்துக
குன்றனதோளவன்தொழுதுகொற்றவன்
பொன்றிணிநெடுமதில்வாயில்போயினான். (கசுகூ)

சுற்றியசீரையன்தொடர்ந்ததம்பியன்
முற்றியஉவகையன்முளரிப்போதினும்
குற்றமில்முகத்தினன்கொள்கைகண்டவர்
உற்றதைஒருவகைஉணர்த்துவாமரோ. (கஎ௦)

அந்தணர்அருந்தவர்அவனிகாவலர்
நந்தலில்நகருளார்நாட்டுளார்கள்தம்
சிந்தைஎன்புகல்வதுதேவர்உள்ளமும்
வெந்தனர்மேல்வரும்உறுதிவேண்டலார். (௧௱௧)

ஐயனைக்காண்டலும்அணங்கனார்கள்தாம்
மொய்இளந்தளிர்களால்முளரிமேல்விழும்
மையலின்மதுகரங்கடியுமாறெனக்
கைகளின்மதர்நெடுங்கண்கள்எற்றினார். (௧௱௨)

தம்மையும்உணர்ந்திலர்தனிப்பில்அன்பினால்
அம்மையின்இருவினைஅகற்றவோஅன்றேல்
விம்மியபெருயிர்மீண்டிலாமைகொல்
செம்மல்தன்தாதையிற்சிலவர்முந்தினார். (௧௱௩)

விழுந்தனர்சிலர்சிலர்விம்மிவிம்மிமேல்
எழுந்தனர்சிலர்முகத்திழிகண்ணீரிடை
அழுந்தினர்சிலர்பதைத்தளகவல்லியின்
கொழுந்தெரியுற்றெனத்துயரங்கூர்கின்றார். (௧௱௪)

கரும்பனமொழியினர்கண்பனிக்கிலர்
வரம்பறுதுயரினால்மயங்கியேகொலாம்
இரும்பனமனத்தினர்என்னநின்றனர்
பெரும்பொருளிழந்தவர்போலும்பெற்றியார். (௧௱௫)

நெக்கனஉடல்உயிர்நிலையில்நின்றில
இக்கணம்இக்கணம்என்னும்தன்மையும்
புக்கனபுறத்தனபுண்ணிற்கண்மலர்
உக்கனநீர்வறந்துதிரவாரியே. (௧௱௬)

இருகையிற்கரிநிகர்எண்ணிறந்தவர்
பெருகையிற்பெயர்த்தனர்தலையைப்பேணலர்
ஒருகையிற்கொண்டனர்உருட்டுகின்றனர்
கரிகையிற்கண்மலர்சூன்றுநீக்கினார். (௧௱௭)

சிந்தினஅணிமணிசிதறிவீழ்ந்தன
பைந்துணர்மாலையிற்பரிந்தமேகலை
நந்தினர்நகையொளிவிளக்கம்நங்கைமார்
சுந்தரவதனமும்மதிக்குத்தோற்றவே. (௧௱௮)

அறுபதின்ஆயிரர்அரசன்தேவியர்
மறுவறுகற்பினர்மழைக்கண்ணீரினர்
சிறுவனைத்தொடர்ந்தனர்திறந்தவாயினர்
எறிதிரைக்கடலெனவிரங்கியேங்கினார். (௧௭௯)

கன்னிநன்மயில்களுங்குயிற்கணங்களும்
அன்னமும்சிறையிழந்தவனிசேர்ந்தன
என்னவீழ்ந்துழந்தனர்இராமன்அல்லது
மன்னுயிர்ப்புதல்வரைமற்றும்பெற்றிலார். (௧௮0)

கிளையினும்நரம்பினும்நிரம்புங்கேழன
அளவிறந்துயிர்க்கவிட்டாற்றுந்தன்மையால்
தொளைபடுகுழலினோடியாழ்க்குத்தோற்றன
இளையவர்அமுதினும்இனியசொற்களே. (௧௮௧)

புகலிடம்கொடுவனம்போலும்என்றுதம்
மகன்வயின்இரங்குறும்மகளிர்வாய்களால்
அகல்மதில்நெடுமனைஅரத்தஆம்பல்கள்
பகலிடைமலர்ந்ததோர்பழனம்போன்றவே. (௧௮௨)

திட்டுடைக்குங்குமச்சேறுஞ்சாந்தமும்
இடையிடைவண்டலிட்டாரம்ஈர்த்தன
மிடைமுலைக்குவடொரீஇமேகலைத்தடங்
கடலிடைப்புகுந்தகட்கலுழியாறரோ. (௧௮௩)

தண்டலைக்கோசலைத்தலைவன்மாதரை
கண்டனன்இரவியும்கமலவாண்முகம்
விண்டலத்துறையும்நல்வேந்தற்காயினும்
உண்டிடர்உற்றபோதென்உறுதன. (௧௮௪)

தாயரும்கிளைஞரும்சார்ந்துளார்களும்
சேயரும்அணியரும்சிறந்தமாதரும்
காயெரிஉற்றனர்அனையகவ்வையர்
வாயிலும்முன்றிலும்மறையமொய்த்தனர். (௧௮௫)

இரைத்தனர்இரைத்தெழுந்தேங்கிஎங்கணும்
திரைப்பெருங்கடல்எனத்தொடர்ந்துபின்செல
உரைப்பதைஉணர்கிலன்ஒழிப்பதோர்கிலன்
வரைப்புயத்தண்ணல்தன்மனையைநோக்கினான். (௧௮௬)

நன்னெடுகளிர்முடிசூடநன்மணிப்
பொன்னெடுந்தேரொடும்பவனிபோனவன்
துன்னெடுஞ்சிறையுஞ்சுற்றிமீண்டும்அப்
பொன்னெடுந்தெருவிடைப்போதன்மேயினன். (கஅஎ)

அஞ்சனமேனியில்அழகுச்செய்திய
வஞ்சனைகண்டபின்வதிர்ந்துநிங்கலா
நெஞ்சினும்வலிதுயிர்வினைப்பதென்சில
நஞ்சினும்வலியநம்நலம்என்றூர்சிலர். (கஅஅ)

மண்கொடுவரும்எனவழியிருந்தியாம்
எண்கொடுசுடர்வனத்தெய்தல்காணவோ
பெண்கொடுவினைசெயப்பெற்றநாட்டினிற்
கண்கொடுபிறத்தலும்கடைஎன்றூர்சிலர். (கஅகூ)

முழுவதேபிறந்துலகுடையமொய்ம்பினன்
உழுவைசேர்கானகத்துறைவென்யான்என
எழுவதேஎழுதல்கண்டிருப்பதேஇருந்
தழுவதேஅழகிநிவ்அன்பென்றூர்சிலர். (ககூ0)

வலங்கடிந்தேழையர்ஆயமன்னனை
நலங்கடிந்தறக்கெடநயக்கலிர்கள்நும்
குலங்கடிந்தான்வலிகொண்டகொண்டலை
விலங்கடிந்தாளொடுவிகொன்றூர்சிலர். (ககூக)

திருவனசுற்றியசிறையாடையன்
பொருவருந்துயரினன்தொடர்ந்துபோகின்றுன்
இருவரைப்பயந்தவள்ஈன்றகான்முளை
ஒருவனேஇவற்கிவ்வூர்உறவென்றூர்சிலர். (ககூஉ)

முழுக்கலின்வலியநம்மூரிநெஞ்சினை
மழுக்களிற்பிளத்தும்என்றேடுவார்வழி
ஒழுக்கியகண்ணினிற்கலுழிஊற்றிடை
இழுக்கலிவ்வழுக்கிவிழ்ந்திடர்உற்றூர்சிலர். (ககூங)

பொன்னணிமணியணிமெய்யிற்போக்கினர்
மின்னெனமின்னனவிளங்குமெய்விலைப்
பன்னிறத்துகிலினைப்பறித்துநீக்கினர்
சின்னநுண்டுகிலினைப்புனைகின்றூர்சிலர். (ககூச)

நிறைமகவுடையவர்நெறிசெல்லும்பொறி
குறைமககுறையினும்கொடுப்பராம்உயிர்
முறைமகன்வனம்புகமொழியைக்காக்கின்ற
இறைமகன்திருமனம்இரும்பென்றார்சிலர். (௧௯௫)

வாங்கியமருங்குலார்வைத்தகொங்கையர்
பூங்கொடிஒதுங்குவபோல்ஒதுங்கினர்
ஏங்கியகுரலினர்இணைந்தகாந்தளில்
தாங்கியசெங்கைதந்தலைகள்மேலுளார். (௧௯௬)

தலைக்குவட்டயன்மதிதவழுமாளிகை
நிலைக்குவட்டிடையிடைநின்றநங்கைமார்
முலைக்குவட்டிழிகணீர்ஆலிமொய்த்துக
மலைக்குவட்டகவுறுமயிலின்மாழ்கினர். (௧௯௭)

மஞ்செனஅகிற்புகைவழங்குமாளிகை
எஞ்சலில்சாளரத்திரங்கும்இன்சொலார்
அஞ்சனக்கண்ணின்நீர்அருவிசோர்தர
பஞ்சரத்திருந்தழும்கிளியிற்பன்னினர். (௧௯௮)

நன்னெடுங்கண்களில்நான்றநீர்த்துளி
தன்னெடுந்தாரைகள்தளத்தின்வீழ்தலால்
மன்னெடுங்குமரன்மாட்டழுங்கிமாடமும்
பொன்னெடுங்கண்குழித்தழுவபோன்றவே. (௧௯௯)

மக்களைமறந்தனர்மாதர்தாயரைப்
புக்கிடம்அறிந்திலர்புதல்வர்பூசலிட்
டுக்கனர்உயங்கினர்உருகிச்சோர்ந்தனர்
துக்கம்நின்றறிவினைச்சூறையாடவே. (௨௦௦)

காமரம்கனிந்தெனக்கனிந்தமென்மொழி
மாமடந்தையர்எலாம்மறுகுசேர்தலால்
தேமருநறுங்குழற்றிருவின்நீங்கிய
தாமரைஒத்தனதவளமாடமே. ௨௦௧)

மழைக்குலம்புரைகுழல்விரிந்துமண்ணுற
குழைக்குலமுகத்தியர்குழாங்கொண்டேங்கினர்
இழைக்குலம்சிதறிடஏவுண்டோய்வுறும்
உழைக்குலம்உழைப்பனஒத்தோர்பால்எலாம். (௨௦௨)

கொடிஅடங்கினமனைக்குன்றம்கோமுர
சிடிஅடங்கினமுழக்கிழந்தபல்லியம்
படிஅடங்கலும்நிமிர்பசுங்கண்மாரியால்
பொடிஅடங்கினமதிற்புறத்துவீதியே. (௨0௩)

அட்டிலும்இழந்தனபுகைஅகிற்புகை
கெட்டிலும்இழந்தனநிறைந்தபால்கிளி
வட்டிலும்இழந்தனமகளிர்கால்மணித்
தொட்டிலும்இழந்தனமகவும்சோரவே. (௨0௪)

ஒளிதுறந்தனமுகம்உயிர்துறந்தென
துளிதுறந்தனமுகிற்றொகையும்தூயநீர்த்
தளிதுறந்தனபரிதானயானையும்
களிதுறந்தனமலர்க்கள்ளுண்வண்டினே. (௨0௫)

நிழல்பிரிந்தனகுடைநெடுங்கண்ஏழையர்
குழல்பிரிந்தனமலர்குமரர்தாளிணை
கழல்பிரிந்தனசினக்காமன்வாளியும்
அழல்பிரிந்தனதுணைபிரிந்தஅன்றிலே. (௨0௬)

தாரொலிநீத்தனபுரவிதண்ணுமை
வாரொலிநீத்தனமழையின்விம்முறும்
தேரொலிநீத்தனதெருவும்தெண்டிரை
நீரொலிநீத்தனநீத்தம்போலவே. (௨0௭)

முழஎழும்ஒலிஇலமுறையின்யாழ்நரம்
பெழஎழும்ஒலிஇலஇமைப்பில்கண்ணினர்
விழஎழும்ஒலிஇலவேறும்ஒன்றில
அழஎழும்ஒலிஇலஅரசவீதியே. (௨0௮)

தென்ஒலிச்சிலம்புகள்சிலம்புபொன்மனை
நல்ஒலித்திலநளிர்க்கலையும்அன்னவே
புள்ஒலித்திலபுனல்பொழிலும்அன்னவே
கள்ஒலித்திலமலர்களிறும்அன்னவே. (௨0௯)

செய்மறந்தனபுனல்செவந்தவாய்ச்சியர்
கைம்மறந்தனபசுங்குழவிகாந்தெரி
நெய்மறந்தனநெறிஅறிஞர்யாவரும்
மெய்மறந்தனர்ஒலிமறந்தவேதமே. (௨௧0)

ஆடினர்அழுதனர்அமுதஏழிசை
பாடினர்அழுதனர்பரிந்தகோதையர்
ஊடினர்அழுதனர்உயிரின்அன்பரைக்
கூடினர்அழுதனர்குழாங்குழாங்கொடே. (௨௧௧)

நீட்டிலகளிறுகைநீரின்வாய்புதல்
பூட்டிலபுரவிகள்புள்ளும்பார்ப்பினுக்
கீட்டிலஇரைபுனிற்றீன்றகன்றையும்
ஊட்டிலகறவைகன்றுருகிச்சோர்ந்தவே. (௨௧௨)

மாந்தர்தம்மொய்ம்பினின்மகளிர்கொங்கையும்
ஏந்திளநீர்களும்வறுமைஎய்தின
சாந்தம்அம்மகினர்தம்முடியிற்றையலார்
கூந்தலின்வறுமைஅம்மலரின்கூலமே. (௨௧௩)

(வேறு.) ஓடைநல்லணிமுனிந்தனஉயர்களிற்றுச்சி
சூடைநல்லணிமுனிந்தனதொடர்மணிகொடியின்
ஆடைநல்லணிமுனிந்தனஅம்பொன்செய்இஞ்சி
பேடைநல்லணிமுனிந்தனமென்னடைப்பிறவும். (௨௧௪)

திக்குநோக்கியதீவினைப்பயனெனச்சிந்தை
நெக்குநோக்குவோர்நல்வினைப்பயனெனநேர்வோர்
பக்கம்நோக்கலென்பருவரல்இன்பம்என்றிரண்டும்
ஒக்கநோக்கியயோகரும்அருந்துயருழந்தார். (௨௧௫)

ஓவிநல்லுயிருயிர்ப்பினேடுடல்பதைத்துலைய
மேவிநல்லழகெழில்கெடவிம்மனேய்விம்ம
தாவிலெம்பொறிமறுகுறத்தயரதனென்ன
ஆவிநீக்கின்றதொத்ததவ்வயோத்திமாநகரம். (௨௧௬)

உயங்கிஅந்நகர்உலைவுறஒருங்குழைசுற்ற
மயங்கியேங்கினர்வயின்வயின்வரம்பிலர்தொடர
இயங்குபல்லுயிர்க்கோர்உயிர்எனநின்றவிராமன்
தயங்குநூண்முலைச்சானகிஇருந்துழிச்சார்ந்தான். (௨௧௭)

அழுதுதாயரோடருந்தவர்அந்தணர்அரசர்
புழுதிபாடியமெய்யினர்புடைவந்துபொரும
பழுதுசீரையினுடையினன்வரும்படிபாரா
எழுதுபாவைஅன்னாள்மனத்துணுக்கமொடெழுந்தாள். (௨௧௮)

எழுந்தநங்கையைமாமியர்தழுவினர்ஏங்கிப்
பொழிந்தவண்கணீர்ப்புதுப்புனலாட்டினர்புலம்ப
அழிந்தசிந்தையள்அன்னமிதின்னதென்றறியாள்
வழிந்தநீர்நெடுங்கண்ணினள்வள்ளலைநோக்கி. (௨௧௯)

(வே.று.)பொன்னைஉற்றபொலன்கழலோய்புகழ்
மன்னைஉற்றதுண்டோமற்றிவ்வன்றுயர்
என்னைஉற்றதியம்பென்றியம்பினாள்
மின்னைஉற்றநடுக்கத்துமேனியாள். (௨௨௦)

பொருவில்எம்பிபுவிபுரப்பான்புகல்
இருவர்ஆணையும்ஏந்தினென்இன்றுபோய்
கருவிமாமழைக்கற்கடங்கண்டுநான்
வருவென்ஈண்டுவருந்தலைநீஎன்றான். (௨௨௧)

நாயகன்வனம்நண்ணல்உற்றான்என்றும்
மேயமண்இழந்தான்என்றும்விம்மலள்
நீய்வருந்தலைநீங்குவென்யான்என்ற
தீயவெஞ்சொல்செவிசுடத்தேம்புவாள். (௨௨௨)

துறந்துபோம்எனச்சொற்றசொற்றேறுமோ
உறைந்தபாற்கடற்சேக்கைஉடன்ஒரீஇ
அறம்திறம்பும்என்றய்யன்அயோத்தியில்
பிறந்தபின்பும்பிரிவிலள்ஆயினாள். (௨௨௩)

அன்னதன்மையள்அய்யனும்அன்னையும்
சொன்னசெய்யத்துணிந்ததுதூயதே
என்னைஎன்னைஇருத்திஎன்றான்என
உன்னஉன்னஉயிர்உயிழாநின்றாள். (௨௨௪)

வல்லரக்கரின்மால்வரைபோய்விழுந்
தல்லரக்கினுருக்கழல்காட்டயற்
கல்லரக்குங்கடுமையஅல்லநின்
சில்லரக்குண்டசேவடிப்போதென்றான். (௨௨௫)

பரிவிகந்தமனத்தொடுபற்றிலா
தொருவுநின்றனைவழிஅருக்கனும்
எரியும்என்பதியாண்டையதீண்டுநின்
பிரிவினும்சுடுமோபெருங்காடென்றாள். (௨௨௬)

அண்ணல்அன்னசொற்கேட்டனன்அன்றியும்
உண்ணிவர்ந்தகருத்தும்உணர்ந்தனன்
கண்ணினீர்க்கடல்கைவிடநேர்கிலன்
எண்ணுகின்றனன்என்செயற்பாற்றென்று. (௨௨௭)

அனையவேலைஅகன்மனைஎய்தினள்
புனையும்சீரம்துணிந்துபுனைந்தனள்
நினைவில்வள்ளல்பின்வந்தயல்நின்றனள்
பனையின்நீள்கரம்பற்றியகையினாள். (௨௨௮)

ஏழைதன்செயல்கண்டவர்யாவரும்
விழும்மண்ணிடைவிழ்ந்தனர்விய்ந்திலர்
வாழும்நாள்உளஎன்றபின்மாள்வரோ
ஊழிபேரினும்உய்குனர்உய்வரே. (௨௨௯)

தாயர்தவ்வையர்தன்துணைச்சேடியர்
ஆயம்மன்னியஅன்பினர்என்றிவர்
தீயின்மூழ்கினர்ஒத்தனர்செங்கணான்
தூயதையலைநோக்கினன்சொல்லுவான். (௨௩0)

முல்லையும்கடல்முத்தும்எதிர்ப்பினும்
வெல்லும்வெண்ணகையாய்விளைவுன்னுவாய்
அல்லைபோதஅமைந்தனைஆதலின்
எல்லைஅற்றஇடர்தருவாய்என்றான். (௨௩௧)

கொற்றவன்அதுகூறலும்கோகிலம்
செற்றதன்னகுதலையள்சிறுவாள்
உற்றுநின்றதுயரம்இதொன்றுமே
எற்றுறந்தபின்இன்பம்கொலாம்என்றாள். (௨௩௨)

பிறிதொர்மாற்றம்பெருந்தகைபேசலன்
மறுகிவீழ்ந்தழமைந்தருமாதரும்
செறுவில்வீழ்ந்தநெடுந்தெருச்சென்றனன்
நெறிபெருமைபரிதினினீங்குவான். (௨௩௩)

சீரைசுற்றித்திருமகள்பின்செல
மூரிவிற்கைஇளையவன்முன்செல
காரைஒத்தவன்போம்படிகண்டஅவ்
ஊரைஉற்றதுணர்த்தவும்ஒண்ணுமோ. (௨௩௪)

ஆரும்பின்னர்அழுதவலித்திலர்
சோரும்சிந்தையர்யாவரும்சூழ்ந்தனர்
வீரன்முன்வனம்மேவுதும்யாம்எனாப்
போரொன்றேல்லொலிகைமிகப்போயினார். (௨௯௫)

தாதைவாயில்குறுகினன்சார்தலும்
கோதைவேலவன்தாயரைக்கும்பிடா
ஆதிமன்னனைஆற்றுமின்நீர்என்றான்
மாதராரும்விழுந்துமயங்கினார். (௨௯௬)

ஏத்தினார்தம்மகனைமருகியை
வாழ்த்தினார்இளையோனைவழுத்தினார்
காத்துநல்குமின்தெய்வதங்காள்என்றார்
நாத்தழும்பஅரற்றிநடுங்குவார். (௨௯௭)

அன்னதாயர்அறிவிற்பிரிந்தபின்
முன்னர்நின்றமுனிவனைக்கைதொழா
தன்னதாருயிர்த்தம்பியும்தாமரைப்
பொன்னும்தானும்ஓர்தேர்மிசைப்போயினான். (௨௯௮)

௪-வது. நகர்நீங்குபடலம்-முற்றும். ஆக திருவிருத்தம்-௫௯௯.
கம்பநாட்டாழ்வார்திருவடிகளேசரணம்.

---

## ௫-வது. தைலம்மாட்டுபடலம்

(*)

ஏவியகுருசில்பின்யாவர்ஏகிலார்
மாவியல்தானைஅம்மன்னைநீங்கலாத்
தேவியர்ஒழிந்தனர்தெய்வமாநகர்
ஓவியம்ஒழிந்தனஉயிர்இலாமையால். (௧)

கைகளிர்பரந்துகால்தொடரக்கண்உகும்
வெய்யநீர்வெள்ளத்துமெள்ளச்சேறலால்
உய்யஏழ்உலகும்ஒன்றானநீர்உழல்
தெய்வமீன்ஒத்தஅச்செம்பொற்றேரரோ. (௨)

மீன்புகழ்பெறவெயில்ஒதுங்கமேதியோ
டான்புகக்கதிரவன்அத்தம்புக்கனன்
கான்புகக்காண்கிலேன்என்றுகல்லதர்
தான்புகமுடுகினன்என்னும்தன்மையான். (௩)

பருத்தவான்மதிகொடுபெருமத்தண்ணலே
வருத்தவாணுதலியர்வதனராசிபோல்
உருத்தகண்ணிரின்ஒளியும்நீங்கின
முகுழ்த்தழகிழந்தனமுளரிகாட்டமே. (௪)

அந்தியில்வெயிலொளிஅழியவானகம்
நந்தலில்கைகயன்பயந்தநங்கைதன்
மந்தரைஉரையெனும்கடுவின்மட்கிய
சிந்தையின்இருண்டதுசெம்மைநீங்கியே. (௫)

பரந்துமின்அரும்பியபசலைவானகம்
அரந்தையின்முனிவரன்அறைந்தசாபத்தால்
நிரந்தரம்இமைப்பிலாநெடுங்கண்நீடிய
புரந்தரன்உருவெனப்பொலிந்ததெங்குமே. (௬)

திருநகர்க்கியோசனைஇரண்டுசென்றொரு
விரைசெறிசோலையைவிரைவின்எய்தினன்
இரதமின்றிழிந்தபின்இராமன்இன்துணை
உரைசெறிமுனிவரோடுறையுங்காலையே. (௭)

வட்டம்ஓரோசனைவளைவிற்றாய்நடு
எட்டனைஇடவும்ஓர்இடம்இலாவகை
பட்டகுசோலையின்புறத்துப்போர்த்தென
விட்டதுகுருசிலைவிடாதசேனையே. (௮)

குயின்றியகுலமணிநதியின்கூலத்தில்
பயின்றுயர்வாலுகப்பரப்பில்பைம்புலில்
வயின்றொறும்வைகினர்ஒன்றும்வாய்மடுத்
தயின்றிலர்துயின்றிலர்அழுதுவிம்மினார். (௯)

(வேறு.)வாவிவிரிதாமரையின்மாமலரின்வாசக்
காவிவிரிநாண்மலர்முகுழ்த்தனையகண்ணார்
ஆவிவிரிபால்நுரையின்ஆடைஅணைஆக
நாவிவிரிகூழைஇளநவ்வியர்துயின்றார். (௧௦)

பெரும்பகல்வருந்தினர்பிறங்குமுலைதெங்கின்
குரும்பைகள்பொரும்செவிலிமங்கையர்குறங்கில்
அரும்பனையகொங்கைஅயில்அம்பனையஉண்கண்
கரும்பனையசெஞ்சொல்நவில்கன்னியர்துயின்றார். (௧௧)

பூவகம்நிறைந்தபுளினத்திரள்கள்தோறும்
மாவகிரின்உண்கணர்மடப்பிடியின்வைக
சேவகம்அமைந்தசிறுகட்கரிகள்என்னத்
தூவகலில்குந்தமறமைந்தர்கள்துயின்றார். (௧௨)

தாவும்மிருதவமும்இவைதழுவஉயர்கொழுனர்
முகமும்அவர்அருளும்நகர்சிலர்கள்துயர்முடுக
அகவும்இளமயில்கள்உயிர்அலசியனஅனையார்
மகவுமுலைவருடஇளமகளிர்கள்துயின்றார். (௧௩)

மாகமணிவேதிகையில்மாதவிசெய்பந்தல்
கேகயநெடுங்குலம்எனச்சிலர்கிடந்தார்
பூகவனமுடிபடுகொர்ப்புளினமுன்றில்
தோகைஇளஅன்னநிரையிற்சிலர்துயின்றார். (௧௪)

சம்பகநறும்பொழில்களிற்றருணவஞ்சிக்
கொம்பமுதொசிந்தனஎனச்சிலர்குழைந்தார்
வம்பளவுகொங்கையொடுவாலுகம்வளர்க்கும்
அம்பவளவல்லிகள்எனச்சிலர்அசைந்தார். (௧௫)

குங்குமமலைக்குளிர்பனிக்குழுமிஎன்னத்
துங்கமுலையிற்றுகள்உறச்சிலர்துயின்றார்
அங்கைஅணையிற்பொலிவழுங்கமுகம்எல்லாம்
பங்கையமுகுழ்த்தனஎனச்சிலர்படிந்தார். (௧௬)

தொடுத்தகலிடைச்சிலர்துவண்டனர்துயின்றார்
அடுத்தஅடையிற்சிலர்அழிந்தனர்அயர்ந்தார்
உடுத்ததுகில்சுற்றொருதலைச்சிலர்உறைந்தார்
படுத்ததளிரிற்சிலர்பசந்தனர்அசந்தார். (௧௭)

எனையரும்இன்னணம்இறங்கினர்உறங்கா
மானவனும்மந்திரிசுமந்திரனைவாவென்
றூனமில்பெருங்குணம்ஒருங்குடையஉன்றல்
மேனிகழ்வதுண்டவுரைகேள்எனவிளம்பும். (௧௮)

(வேறு.) பூண்டபேரன்பினாற்போக்குவதரிதுபோக்கா
நீண்டுநின்றேகல்பொல்லாதெந்தைநீயிரதமின்னே
தூண்டினைமீளநோக்கிச்சுவட்டையோர்ந்தென்னையங்கே
மீண்டனனென்னமீள்வரிதுநின்னைவேண்டிற்றென்றான். (௧௯)

செவ்வியகுரிசில்கூறத்தேர்வலான்செப்புவான்அவ்
வெவ்வியதாயில்தீயவிதியினில்மேலென்போலாம்
இவ்வையின்னின்னைநீக்கிஇன்னுயிர்நீர்க்கின்றேயி
அவ்வையின்அனையகாண்டற்கமைதலால்அளியன்என்றான். (உ0)

(வேறு.)தேவியும்இளவலும்தொடரச்செல்வனைப்
பூவியல்கானகம்புகஉய்த்தேன்என்கோ
சோவினைஉடன்கொடுகுறுகினேன்என்கோ
யாவதுகூறுகேன்இரும்பின்நெஞ்சினேன். (உக)

தாருடைமலரினும்ஒதுங்கத்தக்கிலா
வாருடைமுலையொடும்மதுகைமைந்தரை
பாரிடைச்செலுத்தினேன்பழையநண்பினேன்
தேரிடைவந்தனென்தீதிலேன்என்கோ. (உஉ)

வன்புலக்கன்மனமதியில்வஞ்சனேன்
என்புலப்புறஉடைந்திரங்குமன்னன்பால்
உன்புலக்குரியசொல்உணர்த்தச்செல்கெனோ
தென்புலக்கோமகன்தூதிற்செல்கெனோ. (உங)

நாற்றிசைமாந்தரும்நகரமாக்களும்
தேற்றினர்கொணர்வர்உன்சிறுவன்றன்னைஎன்
றாற்றினஅரசனைஅய்யவெய்யஎன்
கூற்றுறழ்சொல்லினாற்கொலைசெய்வேன்கொலோ. (உச)

அங்கிமேல்வேள்விசெய்தரிதிற்பெற்றநின்
சிங்கவேறகன்றதென்றுணர்த்தச்செல்கெனோ
எங்கள்கோமகற்கினிஎன்னிற்கேகயன்
நங்கையேகடைமுறைநல்லள்போலுமால். (உரு)

முடிவுறஇன்னனமொழிந்தபின்னரும்
அடியுறத்தழுவினன்அழுங்குபேர்அரா
இடியுறத்துவளுவதென்னும்இன்னலன்
படியுறப்புரண்டனன்பலவும்பன்னினான். (உசு)

தடக்கையால்எடுத்தவற்றழுவிக்கண்ணீர்
துடைத்துவேறிருத்திமற்றினையசொல்லினான்
அடக்கும்ஐம்பொறியொடுகரணத்தப்புறம்
கடக்கும்வாலுணர்வினுக்கணுகுங்காட்சியான். (உஎ)

பிறக்கலென்றுற்றபின்பெறுவயாவையும்
திறத்துளிஉணர்வதோர்செம்மைஉள்ளத்தாய்
புறத்துறுபெரும்பழிபொறுஇன்றெய்தலும்
அறத்திறம்மறத்தியோஅவலம்உண்டெனா. (உ௮)

முன்புநின்றிசைநிறீஇமுடிவுமுற்றிய
பின்புநின்றுறுதியைப்பயக்கும்பேர்அறம்
இன்பம்வந்துறும்எனின்இனியதாய்இடைத்
துன்பம்வந்துறும்எனிற்றுறக்கல்ஆகுமோ. (உ௯)

சிறப்பெரும்படைக்கலம்சிறத்தின்நேர்உற
மறப்பயன்விளைக்குறும்வன்மைஅன்றரோ
இறப்பினும்திருஎலாம்இழப்பஎய்தினும்
துறப்பிலர்அறமெனல்சூரர்ஆவதே. (௩௰)

கான்புறம்சேறலில்அருமைகாண்டலால்
வான்பிறங்கியபுகழ்மன்னர்தொல்குலம்
யான்பிறந்தறத்தினின்றிழுக்கிற்றென்னவோ
ஊன்துறந்துயிர்குடித்துழலும்வேலினாய். (௩௧)

வினைக்கருமெய்ம்மையன்வனத்துள்விட்டனன்
மனக்கரும்புதல்வனைஎன்றல்மன்னவன்
தனக்கருந்தவம்அதுதலைக்கொண்டேகுதல்
எனக்கருந்தவம்இதற்கிரங்கல்எந்தைநீ. (௩௨)

முந்தினைமுனிவனைஇறைஞ்சிமுற்றும்என்
வந்தனைமுதலியமாற்றம்கூறினை
எந்தையைஅவனொடும்எய்திஈண்டென
சிந்தனைஉணர்த்துதிஎன்றுசெப்புவாய். (௩௩)

முனிவனைஎம்பியைமுறையின்நின்றரும்
புனிதவேதியர்க்கும்மேல்உறைபுத்தேளிர்க்கும்
இனியனஇழைத்திஎன்றியம்பிஎற்பிரி
தனிமையும்தீர்த்திஎன்றுணர்த்திதன்மையால். (௩௪)

வெவ்வியதன்னையால்விளைந்ததின்றொரு
கவ்வைஎன்றிறையும்தன்கருத்தின்நோக்கலன்
எவ்வருள்என்வயின்வைத்ததின்சொலால்
அவ்வருள்அவன்வயின்அருளுகென்றியால். (௩௫)

வேண்டினன்இவ்வரம்என்றுமேலவன்
ஈண்டருள்எம்பிபால்திருவிளதினை
பூண்டமாதவனெடும்கோயில்புக்கென
தாண்டகைவேந்தனை அவலம்ஆற்றிப்பின். (௩௬)

ஏழ்இரண்டாண்டும்நீத்திண்டவந்துனைத்
தாழ்குவன்திருவடிகளரல்ஈண்டெனச்
சூழிவெங்கடகளிற்றாசற்சொல்லிப்பின்
வாழிமாதவன்சொலால்மனம்தெருட்டுவாய். (௩௭)

முறைமையால்எற்பயந்தெடுத்தமூவர்க்கும்
குறைவிலாஎன்நெடுவணக்கம்கூறிப்பின்
இறைமகன்துயர்துடைத்திருத்திமாடென்றான்
மறைகளைமறைந்துபோய்வனத்துள்வைகுவான். (௩௮)

ஆள்வினைஆண்மையிற்றிறம்பல்அன்றெனுத்
தாள்முதல்வணங்கியதனித்திண்டேர்வலான்
ஊழ்வினைவசத்துயிர்நிலைஎன்றுன்னுவான்
வாழ்வினைநோக்கியைவணங்கிநோக்கினன். (௩௯)

அன்னவள்கூறுவாள்அரசர்க்கத்தையர்க்
கென்னுடைவணக்கம்முன்இயம்பியானுடைப்
பொன்னிறப்பூவையும்கிளியும்போற்றுகென்
றுன்னும்என்தங்கையர்க்குணர்த்துவாய்என்றாள். (௪0)

தேர்வலான்அவ்வுரைகேட்டுத்தீங்குறின்
யார்வலார்உயிர்துறப்பெளிதன்றேஎனுப்
போர்வலான்தடுக்கவும்பொருமிவிம்மினன்
சோர்விலாள்அறிவிலாத்துயர்க்குச்சோர்கின்றான். (௪௧)

ஆறினன்போற்சிறிதவலம்அவ்வழி
வேறிலாஅன்பினுய்விடைதந்தீகெனு
ஏறுசேவகற்றொழுதிளையமைந்தனைக்
கூறுவதியாதெனஇனையகூறினன். (௪௨)

உரைசெய்தெங்கோமகற்குறுதிஆக்கிய
தரைகெழுசெல்வத்தைத்தவிரமற்றொரு
விரைசெறிகுழலிமாட்டளித்தமெய்யனை
அரைசன்என்றின்னம்ஒன்றறையற்பாலதோ. (௪௩)

கானகம்பற்றிநற்புதல்வன்காய்உணப்
போனகம்பற்றியபொய்யில்மன்னர்க்கிங்
கூனகம்பற்றியஉயிர்கொடின்னும்போய்
வானகம்பற்றிலாவலிமைகூறென்றான். (சச)

மின்னுடன்பிறந்தவாட்பாதவேந்தற்கு
மன்னுடன்பிறந்திலென்மண்கொண்டாள்யின்ற
தன்னுடன்பிறந்திலென்தம்பிமுன்அலென்
என்னுடன்பிறந்தயான்வலியென்என்றிஆல். (சரு)

ஆரியன்இளவலைநோக்கிஅய்யஇச்
சீரியஅல்லனசெப்பல்என்றபின்
பாரிடைவணங்கினன்பதைக்கும்நெஞ்சினன்
தேரிடைவித்தகன்சேறல்மேயினான். (சசா)

கூட்டினன்தேர்ப்பொறிகூட்டிக்கோன்முறை
பூட்டினன்புரவிஅப்புரவிபோம்நெறி
காட்டினன்காட்டித்தன்கல்விமாட்சியால்
ஓட்டினன்ஒருவரும்உணர்வுறாமலே. (சஎ)

தையல்தன்கற்பும்தன்தகவும்தம்பியும்
மையறுகருணையும்உணர்வும்வாய்மையும்
செய்யதன்வில்லுமேசேமம்ஆகக்கொண்
டையனும்போயினான்அல்லின்நாப்பணே. (சஅ)

(வேறு.) பொய்வினைக்குதவும்வாழ்க்கைஅரக்கரைப்பொருந்திஅன்னார்
செய்வினைக்குதவும்நட்பாற்செல்பவர்த்தடிப்பதேய்க்கும்
மைவிளக்கியதேஅன்னவயங்கிருள்துரக்கவானம்
கைவிளக்கெடுத்ததென்னவந்ததுகட்வுட்டிங்கள். (சகூ)

மருமத்துத்தன்னைஊன்றும்மறக்கொடும்பாவம்தீர்க்கும்
உருமொத்தசிலையினேனைஒருப்படுத்துதவிநின்ற
கருமத்தின்விளைவைஎண்ணிக்களிப்பொடுகாணவந்த
தருமத்தின்வதனம்என்னப்பொலிந்ததுதனிவெண்டிங்கள். (ரு0)

காம்புயர்கானம்செல்லும்சரியவன்வறுமைநோக்கி
தேம்பினகுவிந்தபோலும்செங்கழுநீரும்சேனைப்
பாம்பினதலையஆகிப்பரிந்தனகுவிந்துசாய்ந்த
ஆம்பலும்என்றபோதுநின்றபோதலர்வதுண்டோ. (ருக)

அஞ்சனக்குன்றம்அன்ன அழகனும் அழகன்தன்மேல்
எஞ்சலில்பொன்போர்த்தன்னஇளவலும்இந்துஎன்பான்
வெஞ்சிலைப்புருவத்தாள்தன்மெல்லடிக்கேற்பவெண்ணாற்
பஞ்சிடைப்படுத்தால்என்னவெண்ணிலாப்பரப்பப்போனார். (௫௨)

சிறுநிலைமருங்குல்கொங்கைஏந்தியசெல்வம்என்னும்
நெறிஇருங்கூந்தல்நங்கைசிறடிநீர்க்கொப்பூழின்
நறியனதொடர்ந்துசென்றுநடந்தெனில்நவையினீங்கும்
உறுவலிஅன்பின்நூங்கொன்றுண்டெனஉணர்வதுண்டே. (௫௩)

பரிதிவானவனும்கீழ்பாற்பருவரைபற்றுமுன்னம்
திருவின்நாயகனும்தென்பால்யோசனைஇரண்டுசென்றான்
அருவிபாய்கண்ணும்புண்ணாய்அழிகின்றமனமும்தானும்
துரிதமான்தேரிற்போனான்செய்ததுசொல்லல்உற்றாம். (௫௪)

கடிகைஓர்இரண்டுமூன்றிற்கடிமதில்அயோத்திகண்டான்
அடிஇணைதொழுதான்ஆதிமுனிவனைஅவனும்உற்ற
படிஎலாம்கேட்டுநெஞ்சிற்பருவரல்உழந்தான்முன்னே
முடிவெலாம்உணர்ந்தான்அந்தோமுடிந்தனன்மன்னன்என்றான் (௫௫)

நின்றுயர்பழியைஅஞ்சிநேர்ந்திலன்தடுக்கவள்ளல்
ஒன்றும்நான்உரைத்தல்நோக்கான்தருமத்திற்குறுதிபார்ப்பான்
வென்றவர்உளரோமேலைவிதியினைஎன்றுவிம்மி
பொன்றிணிமன்னன்கோயில்சுமந்திரனோடும்போனான். (௫௬)

தேர்கொண்டுவள்ளல்வந்தான்என்றுதம்சிந்தைஉந்த
ஊர்கொண்டதிங்கள்என்னமன்னனைஉழையர்சுற்ற
கார்கொண்டமேனியானைக்கண்டிலர்கண்ணில்வற்றா
நீர்கொண்டநெடுந்தேர்ப்பாகன்நிலைகண்டேநிலையிற்றீர்ந்தார். (௫௭)

இரதம்வந்துற்றதென்றாங்கியாவரும்இயம்பலோடும்
வரதன்வந்துற்றான்என்னாமன்னனும்மயக்கம்தீர்ந்தான்
புரைதபுகமலநாட்டம்பொருக்கெனவிழித்துநோக்கி
விரதமாதவனைக்கண்டான்வீரன்வந்தனனோஎன்றான். (௫௮)

இல்லைஎன்றுரைக்கல்ஆற்றான்ஏங்கினன்முனிவன்நின்றான்
நல்லவன்முகமேநம்பிநடந்திலன்என்னும்மாற்றம்
சொல்லலும்அரசன்சோர்ந்தான்துயர்உறுமுனிவன்நான்இவ்
அல்லல்காண்கில்லேன்என்னாஆங்குநின்றகலப்போனான். (௫௯)

நாயகன்பின்னும்தன்தேர்ப்பாகனைநோக்கிநம்பி
சேயனோஅணியனோஎன்றுரைத்தலும்அனையான்செய்ய
வேயுயர்கானம்தானும்தம்பியும்மிதிலைப்பொன்னும்
போயினன்என்றான்என்றபோழ்தத்தேஆவிபோனான். (௯0)

இந்திரன்முதல்வர்ஆயகடவுளர்யாரும்ஈண்டி
சந்திரன்அனையதாங்கோர்மானத்தின்தலையிற்றாங்கி
வந்தனன்எந்தைதந்தைஎனமனங்களித்தவள்ளல்
உந்தியான்உலகின்உம்பர்மீள்கிலாஉலகத்துய்த்தார். (௯௧)

உயிர்ப்பிலன்துடிப்பும்இல்லன்என்றுணர்ந்துருவம்தீண்டி
அயிர்த்தனள்நோக்கிமன்னற்காருயிர்இன்மைதேறி
மயிற்குலம்அனையநங்கைகோசலைமறுகிவீழ்ந்தாள்
வெயிற்சுடுகோடைதன்னில்என்பிலாஉயிரின்வேவாள். (௯௨)

இருந்தஅந்தணனோடெல்லாம்ஈன்றவன்தன்னைஈனப்
பெருந்தவம்செய்தநங்கைகணவனிற்பிரிந்துதெய்வ
மருந்திழந்தவரின்விம்மிமணிபிரிஅரவின்மாழ்கி
அருந்துணைபிரிந்தஅன்றிற்பெடைஎனஅரற்றல்உற்றாள். (௯௩)

(வேறு.)தானேதானேதஞ்சம்இலாதான்தகைவில்லான்
போனான்போனான்எங்களைநீத்திப்பொழுதென்னா
வானிர்கண்டிமண்அரவற்றிமறுகுற்ற
மீனேஎன்னமெய்தடுமாறிவிழுகின்றாள். (௯௪)

ஒன்றேநன்றுட்டெய்க்குவர்இந்நாட்டுயிர்காப்பார்
அன்றேமக்கட்பெற்றுயிர்வாழ்வார்க்கவம்உண்டே
இன்றேவந்தீண்டஞ்சல்எனுதெம்மகன்என்பான்
கொன்றான்அன்றோதந்தையைஎன்றாள்குலைகின்றாள். (௯௫)

நோயும்இன்றிநோன்கதிர்வாள்வேல்இவைஇன்றி
மாயும்செல்வம்மக்களினாலோமறமன்னன்
காயும்புள்ளிக்கற்கடகம்நாகம்கனிவாழை
வேயும்போன்றான்என்றுமயங்காவிழுகின்றாள். (௯௬)

வடித்தாழ்கூந்தற்கேகயன்மாதேமதியாலே
பிடித்தாய்வையம்பெற்றனைபேராவரம்இன்னே
முடித்தாய்அன்றேமந்திரம்என்றாள்முகில்வாய்மின்
துடித்தால்என்னமன்னவன்மார்பிற்றுவள்கின்றாள். (௯௭)

அருந்தோரானைச்சம்பரனைப்பண்டமர்வென்றாய்
இருந்தார்வானோர்உன்அருளாலேஇனிஇந்நாள்
விருந்தாகின்றாய்என்றனள்வேழந்தரசொன்றை
பெருந்தாள்அன்பிற்சூழ்பிடிஎன்னப்பிரிவுற்றாள். (௬௮)

வேள்விச்செல்வம்துய்த்திகொல்மெய்மைத்துணைஇன்மை
சூழ்இச்செல்வம்துய்த்திகொல்தோலாமனுநூலின்
வாழ்இச்செல்வம்துய்த்திகொல்முன்என்றனள்வானோர்
கேள்விச்செல்வம்துய்க்கவயிற்றோர்கிளைதந்தாள். (௬௯)

(வேறு.) ஆழிவேந்தன்பெருந்தேவிஅன்னபன்னிஅழுதாற்ற
தோழிஅன்னசுமித்திரையும்துளங்கிஏங்கிஉயிர்சோர
ஊழிதிரிவதெனக்கோயில்உலையும்வேலைமற்றொழிந்த
மாழைஉண்கட்டேவியரும்மயிலின்குழாத்தின்வந்திறைத்தார். (௭௦)

துஞ்சினனைத்தம்உயிரின்துணையைக்கண்டார்துணுக்கத்தான்
நஞ்சுநுகர்ந்தால்எனஉடலம்நடுங்காநின்றார்என்றாலும்
அஞ்சிஅழுங்கிவிழுந்திலரால்அன்பிற்றறுகண்பிறிதுண்டோ
வஞ்சம்இல்லாமனத்தானைவானிற்றொடர்வான்மனம்வலித்தார். (௭௧)

அளங்கொள்அளக்கர்இரும்பரப்பில்அண்டர்உலகில்அப்புறத்தில்
விளங்குமாதர்கற்பினார்இவரின்யாவர்எனநின்றார்
களங்கம்நீத்தமதிமுகத்தார்கானவெள்ளம்கால்கோப்ப
துளங்கல்இல்லாத்தனிக்குன்றிற்றொக்கமயிலிற்சூழ்ந்திருந்தார் (௭௨)

கைத்தசொல்லால்உயிர்இழந்தும்புதல்வற்பிரிந்தும்கடைபோட
மெய்த்தவேந்தன்திருவுடம்பைப்பிரியாதாற்றிவிட்டிலரால்
பித்தமயக்காம்சுறவெறியும்பிறவிப்பெரியகடல்கடக்க
உய்த்துமீண்டநாவாயிற்றாழும்போவார்ஒக்கின்றார். (௭௩)

மாதரார்கள்அறுபதினாயிரரும்உள்ளம்வலித்திருப்ப
கோதில்குணத்துக்கோசலையும்இளையமாதும்குழைந்தேங்க
சோதிமணித்தேர்ச்சுமந்திரன்சென்றரசன்தன்மைசொலவந்த
வேதமுனிவன்விதிசெய்தவினையைநோக்கிவிம்முவான். (௭௪)

செய்யக்கடவசெயற்குரியசிறுவர்ஈண்டையார்அல்லர்
எய்தக்கடவபொருள்எய்தாதிகவாஎன்னஇயல்பென்ன
மையற்கொடியாள்மகன்ஈண்டுவந்தால்முடித்தும்மற்றென்ன
தையற்கடனின்றெடுத்தவனைத்தயிலக்கடலின்தலைஉய்த்தான். (௭௫)

தேவிமாரைஇவற்குரிமைசெய்யும்நாளிற்செந்தீயின்
ஆவித்திர்எனநீக்கிஅரிவைமார்கள்இருவரையும்
தாவில்கோயிற்றலைஇருத்தித்தண்டார்ப்பரதற்கொண்டணைகென்
றேவினான்மன்னவன்ஆணைஎழுதிமுடங்கல்கொடுத்தவரை. (௭௬)

போனார்அவரும்கேகயர்கோன்பொன்மாநகரம்புகஎய்த
ஆனாஅறிவன்அருந்தவனும் அறம்ஆர்பள்ளியதுசேர்ந்தான்
சேனாபதியிற்சுமந்திரனைச்செயற்பாற்குரியசெய்கென்றா
மேனாம்சொன்னமாந்தர்க்குவிளைந்ததினிநாம்விளம்புவாம். (௭௭)

மீனீர்வேலைமுரசியம்பவிண்ணோர்ஏத்தமண்இறைஞ்ச
தூநீர்ஒளிவாள்புடைஇலங்கச்சுடர்த்தேர்ஏறித்தோன்றினான்
வானேபுக்கான்அரும்புதல்வன்மக்கள்அகன்றார்வரும்அளவும்
யானேகாப்பன்இவ்வுலகைஎன்பான்போலஎறிகதிரோன். (௭௮)

வருந்தாவண்ணம்வருந்தினார்மறந்தார்தம்மைவள்ளலும்அங்
கிருந்தான்என்றேஇருந்தார்கள்எல்லாம்எழுந்தார்அருள்இருக்கும்
பெருந்தாமரைக்கட்கருமுகிலைப்பெயர்ந்தார்காணார்பேதுற்றார்
பொருந்தாநயனம்பொருந்திமைப்பொன்றச்சூழ்ந்தனனப்புரண்டார்

எட்டுத்திசையும்ஓடுவான்எழுவார்விழுவார்இடர்க்கடலுள்
விட்டுநீத்தான்நமைஎன்பார்வெய்யஅய்யன்வினைஎன்பார்
ஒட்டிப்படர்ந்ததண்டகம்இவ்வுலகத்துளதன்றேஉணர்வைச்
சுட்டிச்சேர்தல்ஆற்றுதுமேல்தொடர்தும்தேரின்சுவடென்பார். (௮0)

தேரின்சுவடுநோக்குவார்திருமாநகரின்திசைதிரிய
ஊரும்திகிரிக்குறிஒற்றிஉணர்ந்தார்எல்லாம்உயிர்வந்தார்
ஆரும்அஞ்சல்அய்யன்போய்அயோத்திஅடைந்தான்எனஅசனிக்
காரும்கடலும்ஒருவழிக்கொண்டார்த்தவென்னக்கடிதார்த்தார். (௮௧)

மானஅரவின்வாய்த்தீயவிளைவான்தொளைவாள்எயிற்றின்வழி
ஆனகடுவுக்கருமருந்தாஅருந்தும்அமுதம்பெற்றுயர்ந்து
போனபொழுதிற்புகுந்தஉயிர்பொறுத்தார்ஒத்தார்பொருவரிய
வேனில்மதனைமதன்அழித்தான்மீண்டான்என்னஆண்டைஇயார்.

ஆறுசெல்லச்செல்லத்தேர்ஆழிகண்டார்அயல்அப்பால்
வேறுசென்றநெறிகாணார்விம்மாநின்றஉவகையர்ஆய்
மாறிஉலகம்வகுத்தநாள்வரம்புகடந்துமண்முழுதும்
ஏறிஒடுங்கும்எறிகடல்போல்எயில்மாநகரம்எய்தினார். (௮௩)

புக்கார்அரசன்பொன்னுலகம்போனான்என்னும்பொருள்கேட்டார்
உக்கார்நெஞ்சம்உயிர்உகுத்தார்உற்றதெம்மால்உரைப்பரிதால்
தக்கான்போனான்வனம்என்னும்தகையும்உணர்ந்தார்மிகைஆவி
அக்காலத்தேஅகலுமோஅவதிஎன்றொன்றுளதானால். (அச)

மன்னற்கல்லார்வனம்போனமைந்தற்கல்லார்வாங்கரிய
இன்னற்சிறையின்இடைப்பட்டார்இருந்தார்நின்றஅருந்தவனும்
உன்னற்கரியபழிக்கஞ்சிஅன்றேஒழிந்ததியான்என்று
பன்னற்கரியபலநெறியும்பகர்ந்துபதைப்பைநீக்கினான். (அரு)

வெள்ளத்திடைவாழ்வடவனலைஅஞ்சிவேலைகடவாத
பள்ளக்கடலில்முனிபணியால்பையுள்நகரம்வைகிடமேல்
வள்ளற்றுறைதபணிஎன்னும்வானோர்தவத்தால்வயங்கிருளின்
நள்ளிற்போனவரிசிலைக்கைநம்பிசெய்கைநடத்துவாம். (அசு)

ரு-வது. தைலம்மாட்டுபடலம்-முற்றும். ஆ திருவிருத்தம்-கூசகூ.

கம்பநாட்டாழ்வார்திருவடிகளேசரணம்.

---

## கூ-வது. கங்கைப்படலம்.

(*)

வெய்யோன்ஒளிதன்மேனியின்விரிசோதியின்மறைய
பொய்யோஎனும்இடையாளொடும்இளையானொடும்போனான்
மையோமரகதமோமறிகடலோமழைமுகிலோ
ஐயோஇவன்வடிவென்பதொர்அழியாஅழகுடையான். (க)

அளிஅன்னதொர்அறல்துன்னியகுழலாள்கடல்அமிர்தின்
தெளிஅன்னதொர்மொழியாள்நிறைதவம்அன்னதொர்செயலாள்
வெளிஅன்னதொர்இடையாளொடும்விடைஅன்னதொர்நடையான்
களிஅன்னமும்மடஅன்னமும்நடமாடுவகண்டான். (உ)

அஞ்சம்பையும்அய்யன்தனதலகம்பையும்அளவா
நஞ்சங்களைவெலஆகியநயனங்களைஉடையாள்
துஞ்சும்களிவரிவண்டுகள்குழலின்படிசுழலும்
கஞ்சங்களைமஞ்சன்கழல்நகுகின்றதுகண்டாள். (ங)

மாகந்தமும்மகரந்தமும்அளகம்தரும்மதியின்
பாகந்தரும்நுதலாளொடுபவளம்தரும்இதழான்
மேகந்தனிவருகின்றதுமின்னோடெனமிளிர்பூண்
நாகந்தனிவருகின்றதுபிடியோடெனநடவா. (ச)

தொளைகட்டியகிளைமுட்டியசுருதிச்சுவைஅமுதின்
கிளைகட்டியகருவிக்கிளர்இசையிற்பசைநறவின்
விளைகட்டியின்மதுரித்தெழுகிளவிக்கிளர்விழிபோல்
களைகட்டவர்தனைவிட்டெழிகுவளைத்தொகைகண்டான். (௬)

அருப்பேந்தியகலசத்துணைஅமுதேந்தியமதமா
மருப்பேந்தியஎனல்ஆம்முலைமழைஏந்தியகுழலாள்
கருப்பேந்திரம்முதலாயினகண்டான்இடர்காணான்
பொருப்பேந்தியதோளானெடுவினையாடினன்போனான். (௬)

பன்னந்துகள்தாளம்தொகுபடர்பந்திகள்படுநீர்
அன்னந்துயில்வதிதண்டலைஅயல்நந்துறைபுளினம்
சின்னந்தரும்மலர்தந்தனசெறிநந்தனவனம்நன்
பொன்னந்தியநதிகண்டுளம்மகிழ்ந்தனர்போனார். (௭)

கால்பாய்வனமுதுமேதிகள்கதிர்மேய்வனகடைவாய்
பால்பாய்வனநறைபாய்வனமலர்வாய்அளிபடரச்
சேல்பாய்வனகய்ல்பாய்வனசெங்கால்மடஅன்னம்
போல்மாய்புனல்மடவார்படிநெடுநாட்டவைபோனார். (அ)

(வேறு) பரிதிபற்றியபல்கலன்முற்றினர்
மருதவைப்பின்வளம்கெழுநாடொரீஇ
சுருதிகற்றுயர்தோமிலர்சுற்றுறும்
விரிதிரைப்புனற்கங்கையைமேவினார். (௯)

கங்கைஎன்னும்கடவுட்டிருநதி
தங்கிவைகும்தபோதனர்யாவரும்
எங்கள்செல்கதிவந்ததென்றேமுறு
அங்கண்நாயகற்காணவந்தண்மினார். (௧௦)

பெண்ணில்நோக்கும்சுவையிற்பிறர்பிறர்க்
கெண்ணிநோக்கிஇயம்பரும்இன்பத்தை
பண்ணில்நோக்கும்பராஅமுதைப்பசுங்
கண்ணில்நோக்கினர்உள்ளம்களிக்கின்றார். (௧௧)

எதிர்கொடேத்தினர்இன்இசைபாடினர்
வெதிர்கொள்சோலினர்ஆடினர்வீரனை
கதிர்கொள்தாமரைக்கண்ணனைக்கண்ணினால்
மதுரவாரிஅமுதெனமாந்துவார். (௧௨)

மனையின்நீங்கியமக்களைவைகலும்
நினையும்நெஞ்சினர்கண்டிலர்கேடுவார்
அனையர்வந்துற.ஆண்டெதிர்ந்தார்களில்
இனியமாதவப்பள்ளிகொண்டெய்தினார். (௧௩)

பொழியும்கண்ணிற்புதுப்புனல்ஆட்டினர்
மொழியும்இன்சொலின்மொய்ம்மலர்சூட்டினர்
அழிவில்அன்பெனும்ஆர்அமிர்தூட்டினர்
வழியில்வந்தவருத்தத்தைவாட்டினர். (௧௪)

காயும்கானிற்பிறங்கும்கனிகளும்
தூயதேடிக்கொணர்ந்தனர்தோன்றல்நீ
ஆயகங்கைஅரும்புனல்ஆடினை
தீயைஓம்பினைசெய்அமுதென்றனர். (௧௫)

மங்கையர்க்குவிளக்கன்னமானையும்
செங்கைபற்றினன்தேவரும்துள்பற
பங்கையத்தயன்பண்டுதன்பாதத்தின்
அங்கையிற்றரும்கங்கையின்ஆடினன். (௧௬)

கன்னிநீக்கருங்கங்கையும்கைதொழா
பன்னிநீக்கரும்பாதகம்பாருளோர்
என்னின்நீக்குவர்யானும்இன்றெற்றந்த
உன்னின்நீக்கினென்உய்ந்தனென்யான்என்றாள். (௧௭)

வெங்கண்நாகக்கரத்தினன்வெண்ணிறக்
கங்கைவார்சடைக்கற்றையன்கற்புடை
மங்கைகாணநின்றாடுகின்றான்வகிர்த்
திங்கள்சூடியசெல்வனிற்றோன்றினான். (௧௮)

தள்ளும்நீர்ப்பெருங்கங்கைத்தரங்கத்தால்
வள்ளிநுண்ணிடைமாமலராளொடும்
வெள்ளிவெண்ணிறப்பாற்கடல்மேலைநாள்
பள்ளிநீங்கியபான்மையிற்றோன்றினான். (௧௯)

வஞ்சிநாணஇடைக்குமடநடைக்
கஞ்சிஅன்னம்ஒதுங்கஅடிஅன்ன
கஞ்சம்நீரில்ஒளிப்பக்கயல்உகப்
பஞ்சிமெல்அடிப்பாவையும்ஆடினாள். (௨௰)

தேவர்தேவன்செறிசடைக்கற்றையுள்
கோவைமாலைஎருக்கொடுகொன்றையின்
பூவும்காதலன்பூங்குழற்கூந்தலின்
நாவினான்மலர்கள்கையும்நாறினுள். (உக)

நுரைக்கொழுந்தெழுந்தோங்கிநுடங்கலால்
நரைத்தகூந்தலின்கங்கைமந்தாகினி
உரைத்தபிதைத்தனிமையைஉன்னுவாள்
திரைக்கைநீட்டிச்செவிலியின்ஆட்டினள். (உஉ)

மங்கைவார்குழற்கற்றைமழைக்குலம்
தங்குநீரிடைத்தாழ்ந்துகுழைப்பன
கங்கைஆற்றொடும்காளிந்திதன்னொடும்
பொங்குநீர்ச்சுழிபோவனபோன்றவே. (உங)

சுழிபட்டோங்கியதுங்கொலிஆற்றுத்தன்
விழியிற்சேல்உகள்வால்நிறவெள்ளத்து
முழுகித்தோன்றுகின்றாள்முதற்பாற்கடல்
அமுதத்தன்றெழுவாள்என ஆயினள். (உச)

செய்யதாமரைத்தாள்பண்டுதீண்டலால்
வெய்யபாதகம்தீர்த்துவிளங்குவாள்
ஐயன்மேனிஎலாம்அளைந்தால்இனி
வையம்மாநரகத்திடைவைகுமே. (உரு)

துறைநறும்புனல்ஆடிச்சுருதியோர்
உறையுள்எய்திஉணர்வுடையோர்வுணர்
இறைவற்கைதொழுதேங்தெரிஓம்பிப்பின்
அறிஞர்காதற்கமைவிருந்தாகினன். (உசு)

வருந்தித்தான்தரவந்தஅமுதையும்
அருந்தும்நீர்என்றமரரைஊட்டினன்
விருந்துமெல்அட்குண்டுவிளங்கினன்
திருந்தினர்வையிற்செய்தனதேயுமோ. (உஎ)

ஆயகாலையின்ஆயிரம்அம்பிக்கு
நாயகன்பொர்க்குகன்எனும்நாமத்தான்
தூயகங்கைத்துறைவிடும்தொன்மையான்
காயும்வில்லினன்கற்றிரள்தோளினன். (உஅ)

துடியன்நாயினன்தோற்செருப்பார்த்தபேர்
அடியன்அற்றிறந்தன்னநிறத்தினன்
நெடியதானைநெருங்கலின்நீர்முகில்
இடியினோடெழுந்தால்அன்னஈட்டினன்.

கொம்புதுத்தரிகொட்டுமுறைமையன்
பம்பைபம்புபடையினன்பல்லவத்
தம்பன்அம்பிக்குநாதன்அழிகவுள்
தும்பிஈட்டம்புரைகிளைசுற்றத்தான். (௩௦)

காழம்இட்டகுறங்கினன்கங்கையின்
ஆழம்இட்டநெடுமையினன்அரை
தாழவிட்டசெந்தோலன்தயங்குறச்
சூழவிட்டதொடுபுலிவாலினன். (௩௧)

பற்றொடுத்தன்னபல்சூற்கவடியன்
கற்றொடுத்தன்னபோலும்கழலினன்
அற்றொடுத்தன்னகுஞ்சியன்ஆளியின்
நெற்றொடுத்துநெரிந்தபுருவத்தான். (௩௨)

பெண்ணைவன்செறும்பிற்பிறங்கிச்செறி
வண்ணவன்மயிர்வார்ந்துயர்முன்கையன்
கண்ணகன்தடமார்பெனும்கல்லினன்
எண்ணெய்உண்டஇருள்புரைமேனியான். (௩௩)

கச்சொடார்த்தகறைக்கதிர்வாளினன்
நச்சராவின்நடுக்குறுநோக்கினன்
பிச்சராம்அன்னபேச்சினன்இந்திரன்
வச்சிராயுதம்போலும்மருங்கினன். (௩௪)

ஊற்றுமெய்ந்நறவூனொடுமீன்நுகர்
நாற்றம்மேயநகையில்முகத்தினன்
சீற்றம்இன்றியும்தீஎழநோக்குவான்
கூற்றம்அஞ்சக்குமுறும்குரலினன். (௩௫)

சிருங்கிபேரம்எனத்திரைக்கங்கையின்
மருங்குதோன்றும்நகர்உடைவாழ்க்கையான்
ஒருங்குதேனொடுமீன்உபகாரத்தன்
இருந்தவள்ளலைக்காணவந்தெய்தினன். (௩௬)

சுற்றம்அப்புறம்நிற்கச்சுடுகணை
விற்றுறந்தரைவீக்கியவாள்ஒழித்
தற்றம்நீத்தமனத்தினன்அன்பினன்
நற்றவப்பள்ளிவாயிலைநண்ணினான். (௧௭)

கூவாமுன்னம்இளையோன்குறுகிநீ
ஆவான்யார்எனஅன்பின்இறைஞ்சினான்
தேவாநின்கழல்சேவிக்கவந்தனென்
நாவாய்வேட்டுவன்நாயடியேன்என்றான். (௧௮)

(வேறு) நிற்றிஈண்டென்றுபுக்குநெடியவற்றொழுதுதம்பி
கொற்றவநின்னைக்காணக்குறுகினன்நிமிர்ந்தகூட்டச்
சுற்றமும்தானும்உள்ளம்தூயவன்தாயின்நல்லான்
எற்றுநீர்க்கங்கைநாவாய்க்கிறைகுகன்ஒருவன்என்றான். (௧௯)

அண்ணலும்விரும்பிஎன்பால்அழைத்திநீஅவனைஎன்றான்
பண்ணவன்வருகஎன்னப்பரிவினன்விரைவிற்புக்கான்
கண்ணனைக்கண்ணின்நோக்கிக்கனிந்தனன்இருண்டகுஞ்சி
மண்ணுறப்பணிந்துமேனிவளைத்துவாய்புதைத்துநின்றான். (௨0)

இருத்திஈண்டென்னலோடும்இருந்திலன்எல்லைநீத்த
அருத்தியன்தேனும்மீனும்அமுதினுக்கமைவதாகத்
திருத்தினென்கொணர்ந்தேன்என்கொல்திருவுளம்என்னவீரன்
விருத்தமாதவரைநோக்கிமுறுவலன்விளம்பல்உற்றான். (௨௧)

அரியதாம்உவப்பஉள்ளத்தன்பினால்அமைந்தகாதல்
தெரிதரக்கொணர்ந்தஎன்றால்அமிழ்தினும்சீர்த்தஅன்றே
பரிவினிற்றழீஇயஎன்னிற்பவித்திரம்எம்மனோர்க்கும்
உரியனஇனிதின்நாமும்உண்டனெம்அன்றோஎன்றான். (௨௨)

சிங்கஏறனையவீரன்பின்னரும்செப்புவான்யாம்
இங்குறைந்தெழிநீர்க்கங்கைஏறுதும்நாளையாணர்
பொங்கும்நின்சுற்றத்தோடும்போய்உவந்தினிதுன்ஊரில்
தங்கிநீநாவாயோடும்சாருதிவிடியஎன்றான். (௨௩)

கார்குலாம்நிறத்தான்கூறக்காதலன்உணர்த்துவான்இப்
பார்குலாம்செல்வநின்னைஇங்ஙனம்பார்த்தகண்ணை
ஈர்கிலாக்கள்வனேன்யான்இன்னலின்இருக்கைநோக்கித்
தீர்கிலேன்ஆனதையசெய்குவென்அடிமைஎன்றான். (௨௪)

கோதைவிற்குரிசில்அன்னான்கூறியகொள்கைகேட்டான்
சீதையைநோக்கித்தம்பிதிருமுகம்நோக்கித்தீராக்
காதலன்ஆகும்என்றுகருணையின்மலர்ந்தகண்ணன்
யாதினும்இனியநண்பஇருத்திஈண்டெம்மொடென்றான். (௪௫)

திருநகர்தீர்ந்தவண்ணம்மானவதெரிந்திஎன்ன
பருவரல்தம்பிகூறப்பரிந்தவன்பையுள்எய்தி
இருகண்நீர்அருவிசோரக்குகனும்ஆண்டிருந்தான்என்னே
பெருநிலக்கிழத்திநோற்றும்பெற்றிலள்போலும்என்று. (௪௬)

விரிஇருட்பகையைஓட்டித்திசைகளைவென்றுமேலை
ஒருதனித்திகிரிஉந்திஉயர்புகழ்நிறுவியாரும்
இருநிலத்தேவர்க்கும்உள்ளத்திருந்தனஎன்னவீந்து
செருவலிவீரன்என்னச்செங்கதிர்ச்செல்வன்சென்றான். (௪௭)

மாலைவாய்நியமம்செய்துமரபுளிஇயற்றிவைகல்
வேலைவாய்அமிர்தன்னாளும்வீரனும்விரித்தநாணல்
மாலைவாய்ப்பாரின்பாயல்வைகினன்வரிவில்ஏந்திக்
காலைவாய்அளவும்தம்பிஇமைப்பிலன்காத்துநின்றான். (௪௮)

தும்பியின்குழாத்திற்சுற்றும்சுற்றத்தன்தொடுத்தவில்லன்
வெம்பிவெந்தழியாநின்றநெஞ்சினன்விழித்தகண்ணன்
தம்பிநின்றானைநோக்கித்தலைமகன்தன்மைநோக்கி
அம்பியின்தலைவன்கண்ணீர்அருவிசோர்குன்றின்நின்றான். (௪௯)

துறக்கமேமுதலஆயதூயனயாவைஏனும்
மறக்குமாநினையல்அம்மாவரம்பிலதோற்றுமாக்கள்
இறக்கும்ஆறிதுஎன்பான்போல்முன்னைநாள்இறந்தான்பின்னாள்
பிறக்கும்ஆறிதுஎன்பான்போல்பிறந்தனன்பிறவாவெய்யோன். (௫0)

செஞ்சவேசேற்றில்த்தோன்றும்தாமரைதேரில்த்தோன்றும்
வெஞ்சுடர்ச்செல்வன்மேனிநோக்கினவிரிந்தவேறோர்
அஞ்சனநாயிறன்னஐயனைநோக்கிச்செய்ய
வஞ்சிவாழ்வதனம்என்னும்தாமரைமலர்ந்ததன்றே. (௫௧)

நான்முதற்கமைந்தயாவும்நயந்தனன்இயற்றிநாமத்
தோண்முதற்கமைந்தவில்லான்மறையவர்தொடரப்போனான்
ஆண்முதற்கமைந்தகேண்மைஅன்பனைநோக்கிஐய
கோண்முதற்கமைந்தநாவாய்கொணருதிவிரைவின்என்றான். (௫௨)

(வேறு.) எவியமொழிகேளாஇழிபுனல்பொழிகண்ணன்
ஆவியும்உலைகின்றான்அடிஇணைபிரிகில்லான்
சாவியின்மலர்காசாகடல்மழைஅனையானை
தேவியொடடிதாழாச்சிந்தனைஉரைசெய்வான். (ருங)

பொய்ம்முறைஇலரேம்எம்புகலிடம்வனமேஆல்
கொய்ம்முறைஉறுதாராய்குறைவிலெம்வலியேம்ஆல்
செய்ம்முறைகுற்றேவல்செய்குதும்அடியோமை
இம்முறைஉறஎன்னஇனிதிருநெடிதெம்மூர். (ருச)

தேன்உளதினைஉண்டால்தேவரும்நுகர்தற்காம்
ஊன்உளதுணைநாயேம்உயிர்உளவிளையாடக்
கான்உளபுனல்ஆடக்கங்கையும்உளதன்றோ
நான்உளதனையும்நீஇனிதிருஎம்பால். (ருரு)

தோல்உளதுகில்போலும்சுவைஉளதொடர்மஞ்சம்
போல்உளபரண்வைகும்புரைஉளகடிதோடும்
கால்உளசிலைபூணும்கைஉளகவிவானின்
மேல்உளபொருள்எனும்வினையொடுகொணர்வேம்ஆல். (ருசா)

ஐயிருபத்தோடைந்தாயிரர்உளர்ஆணை
செய்குனர்சிலைவேடர்தேவரின்வலியார்ஆல்
உய்குதும்அடியேம்எம்குடிலிடைஒருநாள்நீ
வைகுதிஎனில்மேல்ஓர்வாழ்விலைபிறிதென்றான். (ருஎ)

அண்ணலும்அதுகேளாஅகம்நிறைஅருள்மிக்கான்
வெண்ணிறநகைசெய்தான்வீரநின்உழையாம்அப்
புண்ணியநதியாடிப்புனிதனைவழிபாடுற்
றெண்ணியசிலநாளிற்குறுகுதும்இனிதென்றான். (ருஅ)

சிந்தனைஉணர்கிற்பான்சென்றனன்விரைவோடும்
தந்தனன்நெடுநாவாய்தாமரைநயனத்தான்
அந்தணர்தமைஎல்லாம்அருளுதிர்விடைஎன்னா
இந்துவின்நுதலாளோடிளவலொடினிதேறு. (ருகூ)

விடுநதிகடிதென்றான்மெய்யுயிர்அனையானும்
முடுகினன்நெடுநாவாய்முரிதிரைநெடுநீர்வாய்
கடிதினில்மடஅன்னக்கதிஅதுசெலநின்றார்
இடர்வுறமறையோரும்எரிஉறுமெழுகானார். (சா0)

பால்உடைமொழியாளும்பகலவன்அனையானும்
சேல்உடைநெடுநன்னீர்சிந்தினர்விளையாட
தோல்உடைநிமிர்கோலில்த்துழவிடஎழுநாவாய்
கால்உடைநெடுநெருண்டிற்சென்றதுகடிதம்மா. (௯௧)

சாந்தணிபுளினத்தின்தடமுலைஉயர்கங்கை
காந்தினமணிமின்னக்கடிகமழ்கமலத்தில்
சேந்தொளிவிரியும்தெண்டிரைஎனும்நிமிர்கையால்
ஏந்தினள்ஒருதானேஏற்றினள்இனிதப்பால். (௯௨.)

அத்திசைஉற்றையன்அன்பனைமுகம்நோக்கி
சித்திரகூடத்திற்செல்நெறிபகர்என்ன
பத்தியின்உயிர்ஈயும்பரிவினன்அடிதாழா
உத்தமஅடிநாயேன்ஓதுவதுளதென்றான். (௯௩)

நெறிஇடுநெறிவல்லேன்நேடினென்வழுவாமல்
நறியனகனிகாயும்நறஇவைதரவல்லேன்
உறைவிடம்அமைவிப்பேன்ஒருநொடிவரைஉம்மை
பிரிகிலென்உடன்ஏகப்பெறுகுவென்எனில்நாயேன். (௯௪)

தீயனவகையாவும்திசைதிசைசெலநூறி
தூயனஉறைகானம்துருவினென்வரவல்லேன்
மேயினபொருள்நாடித்தருகுவென்வினைமுற்றும்
ஏயினசெயவல்லேன்இருளினும்நெறிசெல்வேன். (௯௫)

கல்லுவென்மலைமேலும்கவலையின்முதல்யாவும்
செல்லுவென்நெறிதூரம்செறிபுனல்தரவல்லேன்
வில்லினம்உளென்ஒன்றும்வெருவலென்இருபோதும்
மல்லினும்உயர்தோளாய்மலர்அடிபிரியாதேன். (௯௬)

திருவுளம்எனின்மற்றென்சேனையும்உடனேகொண்
டொருவலென்இருபோதும்உறைகுவென்உளர்ஆனார்
மருவலர்எனின்முன்னேமாள்குவென்வசைஇல்லேன்
பொருவருமணிமார்பாபோதுவென்உடன்என்றான். (௯௭)

அன்னவன்உரைகேளாஅமலனும்உரைநேர்வான்
என்னுயிர்அனையாய்நீஇளவல்உன்இளையான்இந்
நன்னுதலவள்நின்கேள்நளிர்கடல்நிலம்எல்லாம்
உன்னுடையதுநான்உன்தொழில்உரிமையின்உள்ளேன். (௯௮)

துன்புளதெனின்அன்றேசுகம்உளதுஅன்றி
பின்புளதிடைமன்னும்பிரிவுளதெனஉன்னேல்
முன்புளெம்ஒருநால்வேம்முடிவுளதெனஉன்னு
அன்புளஇனிநாம்ஓர்ஐவர்கள்உளர்ஆனோம். (௬௯)

படருறவுளன்உம்பிகான்உறைபகல்எல்லாம்
இடர்வுறுபகையாபோயான்எனஉரியாய்நீ
சுடர்உறுவடிவேலாய்சொன்முறைகடவேல்யான்
வடதிசைவரும்அந்நாள்நின்உழைவருகின்றேன். (௭௦)

அங்குளகிளைகாவற்கமைதியின்உளன்உம்பி
இங்குளகிளைகாவற்கியார்உளர்உரைசெய்யாய்
உன்கிளைஎனதன்றோஉறுதுயர்உறல்ஆமோ
என்கிளைஇதுகாஎன்ஏவலின்இனிதென்றான். (௭௧)

பணிமொழிகடவாதான்பருவரல்இகவாதான்
பிணிவுடையவன்என்னும்பிரிவினன்விடைகொண்டான்
அணிஇழைமயிலோடும்ஐயனும்இளையோனும்
திணிமரம்நிறைகானிற்சேணுறநெறிசென்றார். (௭௨)

௬-வது. கங்கைப்படலம்-முற்றும். ஆ திருவிருத்தம்-௬௬௫.
கம்பநாட்டாழ்வார்திருவடிகளேசரணம்.

---

## ௭-வது. வனம்புகுபடலம்.



பூரியர்புணர்மாதர்பொதுமனம்எனமன்னும்
சாரமும்உளதில்என்றறிவருஇளவேனில்
ஆரியன்வரலோடும்அமுதளவியசிதக்
காருறுகுளிமானக்காட்டியதவண்எங்கும். (௧)

வெயில்இளநிலவேபோல்விரிகதிர்இடைவீச
பயில்மரம்நிழல்ஈனப்பனிபுரைதுளிமேகப்
புயல்தரஇளமென்கால்பூஅளவியதெய்த
மயில்இனம்நடம்ஆடும்வழிஇனியனபோனர். (௨)

மன்றலின்மலிகோதைமயில்இயல்இளமானே
இன்றுயில்வதிகோபத்தினம்விரிவனஎங்கும்
கொன்றைகள்சொரிபோதின்குப்பைகொள்குலமாலை
பொன்திணிமணிமானப்பொலிவனபலகாணாய். (௩)

பாண்இளமிழற்றுகப்படுமழைபணைஆக
நாணினதொகுபீலிகோலினநடம்ஆடல்
பூணியவினசாயல்பொலிவதுபலகண்ணில்
காணியஎனல்ஆகும்களிமயில்அவைகாணாய். (௪)

சேந்தொளிவிரிசெவ்வாய்ப்பைங்கிளிசெங்கோலக்
காந்தளின்மலர்ஏறிக்கோதுவகவின்ஆரும்
மாந்தளிர்நறுமேனிமங்கையின்மடமுன்கை
ஏந்தினஎனல்ஆகும்இயல்பினஇவைகாணாய். (௫)

நெய்ஞ்ஞிறைநெடுவேலின்திறம்உறுதிமம்முற்றி
கைஞ்ஞிறைமிளிர்கண்ணாய்கருதினஇனம்என்றே
மெய்ஞ்ஞிறைவிரிசாயல்கண்டும்நின்விழிகண்டும்
மஞ்ஞையும்மடமானும்வருவனபலகாணாய். (௬)

பூவலர்குரவோடும்புடைதவழ்பிடவினும்
மாவலர்சொரிசூழல்த்துயில்எழுமயில்ஒன்றின்
தூவியின்மணம்நாற்றத்துணைபிரிபெடைதான்அச்
சேவலொடுறஊடித்திரிவதன்இயல்காணாய். (௭)

அருந்ததிஅனையாளேஅமிர்தினும்இனியாளே
செருந்தியின்மலர்தாங்கும்செறிஇதழ்வனசோகம்
பொருந்தினகளிவண்டிற்பொதிவனபொன்ஊதும்
இருந்தையின்எழுதீஒத்தெழுவனஇயல்காணாய். (௮)

ஏந்திளமுலையாளேஎழுதருஎழிலாளே
காந்தளின்முகைகண்ணிற்கண்டொருகளிமஞ்ஞை
பாந்தள்இதெனஉன்னிக்கவ்வியபடிபாராய்
தீந்தளவுகள்செய்யும்சிறுகுறுநகைகாணாய், (௯)

குன்றுறைவயமாவின்குருளையும்இகுள்சிந்திப்
பின்றினதெனல்ஆகும்பிடிதருசிறுமாவும்
அன்றலபிறிவொல்லாஅண்டர்தம்மனைஆவின்
கன்றொடுவிளையாடும்களியனபலகாணாய். (௧௦)

அகில்புனைகுழல்மாதேஅணிஇழைஎனல்ஆகும்
நகுமலர்நிறைமாலைக்கொம்பர்கள்நதிதோறும்
துகில்புனைநறுநீரில்த்தோய்வனதுறைஆடும்
முகிழ்இளமுலையாரின்மூழ்குவபலகாணாய். (௧௧)

முற்றுறுமுகைவிண்டுமுயல்நிலவிலதும்பி
விற்றிருநுதல்மாதேஅம்மலர்விரிகோங்கின்
சுற்றுறுமலர்எறித்துயில்வனசுடர்மின்னும்
பொற்றகடுறுநிலம்புனைவனபலகாணாய். (௧௨)

கூடியநறைவாயிற்கொண்டனவிழிகொள்ளா
முடியகனிமன்னமுடுகினநெறிகாணா
ஆடியசிற்றமாவண்டடங்தரின்இசைமுன்னாப்
பாடியபெடைகண்ணாவருவனபலகாணாய். (௧௩)

கன்னியர்அணிகோலம்கற்றறிகுனர்என்னப்
பொன்அணிநிறவேங்கைக்கொம்பர்கள்புதுமென்பூ
அன்னமென்நடையாய்நின்அளகநன்னுதல்அப்பும்
சின்னமென்மலர்மானச்சிந்துவபலகாணாய். (௧௪)

மணங்கிளர்மலர்வாசமாருதம்வரவீசக்
கணங்கிளர்தருசுண்ணம்கல்லுடையனகானத்
தணங்கினும்இனியாய்உன்அணிவடமுலைமுன்றில்
அணங்கினமவைமானத்துறுவனபலகாணாய். (௧௫)

அடிஇணைபொறைகல்லாஎன்றுசொல்அதர்எங்கும்
இடைஇடைமலர்சிந்தும்இனமரம்இவைகாணாய்
கொடியினொடிளவாசக்கொம்பர்கள்குயிலாய்உன்
துடிபுரைஇடைநாணித்துவள்வனஅவைகாணாய். (௧௬)

வாள்புரைவிழியாய்உன்மலர்அடிஅணிமானத்
தாள்புரைதளிர்வைகும்தகைஞிமிறிவைகாணாய்
கோள்புரைஇருள்வாசக்குழல்புரைமழைகாணாய்
தோள்புரைஇளவேயின்தொகுதிகளவைகாணாய். (௧௭)

பூநனைசினைதுன்றிப்புள்இடைஇடைபம்பி
நானிறநளிர்வல்லிக்கொடிஅளவிலமல்கி
மானினம்மயில்மாலைகுயிலினம்வருகானம்
நிகர்தொழிலாடைத்திரைபொருவனபாராய். (௧௮)

என்றனன்மடவாளோடினிதினில்விளையாடிப்
பொன்றிணிதிரள்தோளான்போயினன்நெறிபோதும்
சென்றதுகுடபால்அத்திருமலைஇதுஅன்றோ
என்றனன்வினைவென்றோர்மேவிடம்எனலோடும். (௧௯)

அருத்தியின்அகம்விம்மும்அன்பினின்நெடுநாளில்
இருத்தியவினைமுற்றிற்றென்றனன்றெரிகின்றான்
பாரத்துவன்எனும்நாமப்பரமுனிபவநோயின்
மருத்துவன்அனையானைவரவெதிர்கொளவந்தான். (௨௦)

குடையினன்திமிர்கோலன்குண்டிகையினன்முரிச்
சடையினன்உரிமானின்சருமன்நன்மரநாரின்
உடையினன்மயிர்நாலும்உருவினன்நெறிபேணும்
நடையினன்மறைநாலும்நடம்நவில்தருநாவான். (௨௧)

செந்தழல்புரிசெல்வன்திசைமுகமுனிசெவ்வே
தந்தனஉயிர்எல்லாம்தன்உயிர்எனநல்கும்
அந்தணன்உலகேழும்அமைவனின்அமரேசன்
உந்தியின்உதவாமேஉதவிடுதொழில்வல்லான். (௨௨)

அம்முனிவரலோடும்அனகனும்அலர்தூவி
மும்முறைதொழுதான்அம்முதல்வனும்எதிர்புல்லி
இம்முறைஉருவோநான்எய்துவதெனஉள்ளம்
விம்மினன்இழிகண்ணீர்விழிவழிஉகுகின்றான். (௨௩)

அகலிடம்நெடிதாளும்அமைதியைஅதுநீரப்
புகலிடம்எமதாகும்புரையிடைஇதுநாளில்
தகவிலதவவேடம்தழுவினைவருவானேன்
இகல்அடுசிலைவீரஇளையவனொடும்என்றான். (௨௪)

உற்றுளபொருள்எல்லாம்உணர்வுறஉரைசெய்தான்
நற்றவமுனிஅந்தோவிதிதருநவைஎன்பான்
இற்றதுசெயல்உண்டோஇனிஎனஇடர்கொண்டான்
பெற்றிலள்தவம்அந்தோபெருநிலமகள்என்றான். (௨௫)

துப்புறழ்துவர்வாயின்தூய்மொழிமயிலோடும்
அப்புறுகடல்ஞாலம்ஆளுதிகடிதென்று
ஒப்பறும்அரசுன்னைஉயர்வனம்உறஏகென்
றெப்பரிசுயிர்உய்ந்தான்என்துணைஅவன்என்றான். (௨௬)

அல்லலும்உளஇன்பம்அணுகலும்உளஅன்றே
நல்லவும்உளசெய்யும்நவைகளும்உளஅந்தோ
இல்லைஓர்பயன்நான்இன்றிடர்உறும்இதின்என்னப்
புல்லினன்உடனேகொண்டினிதுறைபுரைபுக்கான். (௨௭)

புக்குறைவிடம்கல்கிப்பூசனைமுறைபேணி
தக்கனகனிகாயும்தந்துளைதரும்அன்பால்
தொக்கநன்முறைகூறித்தூயவன்உயிர்போலும்
மக்களின்அருள்உற்ருன்மைந்தரும்மகிழ்வுற்ருர். (உ௯)

வைகினர்கதிர்காறும்அளவையின்மறையோனும்
உய்குவெம்இவனேடியாம்உடன்உறைதலின்என்பான்
செய்தனன்இனிதெல்லாம்செல்வனேமுகம்மூன்று
கொய்குலமலர்மார்பகூறுவதுளதென்ருன். (உ௯)

(வேறு.) நிறையும்நீர்மலர்நெடுங்கனிகிழங்குகாய்நேர்ந்த
குறையும்தீயவைதூயவைகுறைவிலஎம்மோ
டிறையும்இவ்வழிஒருங்கினில்உயர்தவம்முயல்வார்க்
கிறையும்ஈதலாஇனியதோர்இடம்அரிதின்னும். (௩0)

கங்கையாளொடுகரியவள்நாமகள்கலந்த
சங்கம்ஆதலிற்பிரியலென்தாமரைச்செங்கண்
அங்கநாயகஅயனுக்கும்அரும்பெறற்றீர்த்தம்
எங்கள்போலியர்தரத்ததன்றிருத்திர்ஈண்டென்ருன். (௩௧)

பூண்டமாதவன்அவ்வழிவிரும்பினன்புகல
நீண்டதன்றிதுநிறைபுனல்நாட்டுக்குநடுவாம்
மாண்டசிந்தையஇவ்வழிவைகுவென்என்ருல்
ஈண்டயாவரும்நெருங்குவர்என்றனன்இராமன். (௩உ)

ஆவதுள்ளதேஅய்யகேள்ஐயிரண்டமைந்த
காவதப்பொழிற்கப்புறம்கழிந்தபின்காண்டி
மேவுகாதலின்வைகுதிவிண்ணினும்இனிதால்
தேவர்கைதொழும்சித்திரகூடம்என்றுளதால். (௩௩)

என்றுகாதலின்எயினன்அடிதொழுதேத்தி
கொன்றைவேய்ங்குழற்கோவலர்முல்லையங்குடிமி
சென்றுசெக்கதிர்ச்செல்வனும்நடுவுறச்சிறுமான்
கன்றுநீர்நுகர்காளிந்திஎனும்நதிகண்டார். (௩௪)

ஆறுகண்டனர்அகம்மகிழ்ந்திறைஞ்சினர்அறிந்து
நீறுதோய்மணிமேனியர்நெடும்புனல்படிந்தார்
ஊறும்மென்கனிகிழங்கினேடுண்டுநீர்உண்டார்
ஏறிஏகுவதெங்ஙனம்என்றலும்இளையோன். (௩௫)

வாங்குவேய்ங்கழைதுணித்தனன்மானையின்கொடியால்
ஓங்குதெப்பம்ஒன்றமைத்ததின்உம்பரின்உலம்போல்
வீங்குதோள்அணல்தேவியோடினிதுவீற்றிருப்ப
நீங்கினன்அந்தநெடுநதிஇருகையால்நீந்தி. (௩௬)

ஆலைபாய்வயல்அயோத்தியர்ஆண்டகைக்கிளையான்
மாலைமால்வரைத்தோள்எனும்மந்தரம்திரிய
காலைவேலையைக்கடந்ததுகழிந்தநீர்கடிதின்
மேலைவேலையிற்பாய்ந்ததுமீண்டநீர்வெள்ளம். (௩௭)

அனையர்அப்புனல்ஏறினர்அக்கரைஅணைந்தார்
புனையும்வற்கலைபொற்பினர்நெடுநெறிபோனார்
சினையும்மூலமும்வேரும்வெந்திருநிலம்தீய்ந்து
நினையும்நெஞ்சமும்சுடுவதோர்நெடுஞ்சுரம்நேர்ந்தார். (௩௮)

நீங்கல்ஆற்றலள்சனகிஎன்றன்னவர்நினையா
ஓங்குவெய்யவன்உடுபதிஎனக்கதிர்உகுத்தான்
தாங்குவேங்கடத்துலவைகள்தழைகொண்டுதழைத்த
பாங்குவெங்கனல்பங்கயவனங்களாய்ப்பரந்த. (௩௯)

வறுத்துவித்தியஅனையனவல்அயிற்பரற்கள்
பறித்துவித்தியமலர்எனக்குளிர்ந்தனபசைந்த
இறுத்தெரிந்தனவல்லிகள்இளந்தளிர்ஈன்ற
கறுத்தவாள்அரவெயிற்றினுள்அமுதுகக்களித்த. (௪௦)

குழுமிமேகங்கள்குமுறினகுளிர்துளிகொணர்ந்த
மழுவில்வேடரும்முனிவரின்முனிகிலர்உயிரை
தழுவிநின்றனபசியிலபகையிலதணிந்த
உழுவையின்முலைமான்இளங்கன்றுகள்உண்ட. (௪௧)

கல்லைக்கிடந்தகடுவெந்தயர்கின்றகதழ்பாம்
பல்லல்உற்றிலஅலைபுனற்கிடந்தனஅனைய
வல்லைஉற்றவேய்புற்றெரும்எரிவனமணிவாழ்
புல்லெயிற்றிளங்கன்னியர்தோள்எனப்பொலிந்த. (௪௨)

படர்ந்தெழுந்தபுல்பசுநிறக்கம்பளம்பரப்பிக்
கிடந்தபோன்றனகேகையம்தோகைகள்கிளர
மடந்தைமார்எனநாடகம்வயின்தொறும்நவின்ற
தொடர்ந்தபாணரிற்பாங்கிசைமுரன்றனதும்பி. (௪௩)

காலம்இன்றியும்கனிந்தனகனிநெடுங்கந்தம்
மூலம்இன்றியும்முகிழ்த்தனவிலன்உறமுழுதும்
கோலமங்கையர்ஒத்தனகொம்பர்கள்இன்பச்
சீலம்அன்றியும்செய்தவம்வேறும்ஒன்றுளதோ. (௪௪)

எயினர்தங்கிடம்இருடிகள்இருப்பிடம்ஏய்ந்த
வயின்வயின்தொறும்மணிநிறக்கோபங்கள்மலர்ந்த
பயில்மரம்தொறும்பரிந்தனபேடையைப்பயிலும்
குயில்இரங்கினகுருந்தம்நின்றரும்பினமுருந்தம். (௪௫)

பந்தருட்புணாபாசறைப்பொருள்வயிற்பருவம்
தந்தகேள்வனைஉயிர்உறத்தழுவினர்பிரிந்த
கந்தெரியர்சிந்தையிற்கொதிப்பதக்கழலோர்
வந்தபோதவர்மனம்எனக்குளிர்ந்ததவ்வனமே. (௪௬)

வெளிறுநீங்கியபாலையைமெல்லெனப்போனார்
குளிறுவான்மதிக்குழவிதன்சூல்வயிற்றொளிப்பப்
பிளிறுமேகத்தைப்பிடிஎனப்பெரும்பனைத்தடக்கை
களிறுநீட்டும்அச்சித்திரகூடத்தைக்கண்டார். (௪௭)

௭-வது. வனம்புகுபடலம்-முற்றும். ஆ. திருவிருத்தம்-௭௱௮.
கம்பநாட்டாழ்வார்திருவடிகளேசரணம்.

---

## ௮-வது. சித்திரகூடப்படலம்.



வினையும்தேவர்க்கும்நமக்கும்ஒத்தொருநெறிநின்ற
அனகன்அங்கணன்ஆயிரம்பெயர்உடைஅமலன்
சனகன்மாமடமயிற்கந்தச்சந்தனம்செறிந்த
கனகமால்வரைஇயல்பெலாம்தெரிவுறக்காட்டும். (௧)

வாளும்வேலும்விட்டளாயினஅனையகண்மயிலே
தாளின்ஏலமும்மாலமும்தொடர்தருசாரல்
நீளமாமலைதுயில்வனநீர்உண்டகமஞ்சூற்
காளமேகமும்நாகமும்தெரிகிலகாணாய். (௨)

குருதிவாள்எனச்செவ்வரிபரந்தகட்குயிலே
மருவிமால்வரைஉம்பரிற்குதிக்கின்றவருடை
சுருதிபோற்றெளிமரகதக்கொழுஞ்சுடர்சுற்றப்
பருதிவானவன்பசும்பரிபுரைவனபாராய். (௩)

வடங்கொள்பூண்முலைமடமயிலேமதக்கதமா
அடங்குபேழ்வயிற்றரவுரிஅமைதொறும்தொடக்கி
தடங்கள்தோறும்நின்றுடுவதண்டலைஅயோத்தி
நுடங்குமாளிகைத்துகிற்கொடிநிகர்ப்பனநோக்காய். (௪)

உவரிவாய்அன்றிப்பாற்கடல்உதவியஅமுதே
துவரிநீண்மணித்தடந்தொறும்இடந்தொறும்துவன்றி
கவரிபால்நிறவால்புடைபெயர்வனகடிதில்
பவளமால்வரைஅருவியைப்பொருவியபாராய். (௫)

சலந்தலைக்கொண்டசீயத்தால்த்தனிமதக்கதமா
உலந்துவீழ்தலிற்சிந்தினஉதிரத்தின்மடவார்
புலந்தகாலைஅற்றுக்கனகுங்குமப்பொதியில்
கலந்தமுத்தெனவேழமுத்திமைப்பனகாணாய். (௬)

நீண்டமால்வரைமதிஉறநெடுமுடிநிவர்ந்த
தூண்டுமாமணிச்சுடர்அதன்கற்றையிற்சொருக
மாண்டவால்நிறஅருவிஅம்மழவிடைப்பாகன்
காண்டகும்சடைக்கங்கையைநிகர்ப்பனகாணாய். (௭)

தொட்டமாசுணம்சுடர்ஒளிமணியொடும்தூவி
விட்டசென்றனவிடாமதமழையனவேழம்
வட்டவேங்கையின்மலரொடும்ததைந்தனவயங்கும்
பட்டம்நெற்றியிற்சுற்றியபோல்வனபாராய். (௮)

இழைந்தநூல்இணைமணிக்குடம்சுமக்கின்றதென்ன
குழைந்தநுண்இடைக்குவிஇளவனமுலைக்கொம்பே
தழைந்தசந்தனச்சோலைதன்செலவினைத்தடுப்ப
நுழைந்துபோகின்றதொக்கின்றமதியினைநோக்காய். (௯)

உருகுகாதலில்த்தழைகொண்டுமழலைவண்டோச்சி
முருகுநாறுசெந்தேனினைமுழைநின்றும்வாங்கி
பெருகுசூல்இளம்பிடிக்கொருபிறைமருப்பியானை
பருகவாயினிற்கையின்நின்றளிப்பதுபாராய். (௧௦)

அளிக்குநாயகன்மாயைபுக்கடங்கினன்எனினும்
களிப்பில்இந்தியத்தியோகியைக்கரக்கிலன்அதுபோல்
ஒளித்துநின்றுளராயினும்உருத்தெரிகின்ற
பளிக்கறைச்சிலபரிமுகமாக்களைப்பாராய். (௧௧)

ஆடுகின்றமாமயிலினும்அழகியகுயிலே
கூடுகின்றிலர்கொடிச்சியர்தம்மனம்கொதிப்ப
ஊடுகின்றனர்கொழுனரைஉருகினர்நோக்க
பாடுகின்றனகின்னரமிதுனங்கள்பாராய். (௧௨)

வில்லிவாங்கியசிலைஎனப்பொலிநுதல்விளக்கே
வல்லிதாம்கழைதாக்கவில்வழிந்திழிபிரசம்
கொல்லிவாங்கியகுன்றவர்கொடிநெடுங்கவலை
கல்லிவாங்கியகுழிகளைநிறைப்பனகாணாய். (௧௩)

ஒருவில்பெண்மைஎன்றுரைக்கின்றஉடலினுக்குயிரோ
மருவுகாதலின்இனிதுடன்ஆடியமந்தி
அருவிநீர்கொடுவிசத்தான்அப்புறத்தேறி
கருவிமாமழைஉதிர்ப்பதோர்கடுவனைக்காணாய். (௧௪)

விருபஞ்சின்றிஅமுதநெய்மாட்டியவிளக்கே
சிறுவெங்கதிர்செறிந்தனபேர்கலதிரியா
மாறில்மண்டிலம்நிரப்பியமாணிக்கமணிக்கற்
பாறைமற்றொருபரிதியிற்பொலிவனபாராய். (௧௫)

சிலம்இன்னதென்றருந்தநிக்கருளியதிருவே
நீலவண்டினம்படிந்தெழவலைந்துடன்மிளிர்வ
சோலைவேங்கையின்கொம்பர்கள்பொன்மலர்தூவி
காலில்நிற்றெழுதெழுவனநிகர்ப்பனகாணாய். (௧௬)

விற்கொள்வாணுதல்விளங்கிழைஇளந்தளிர்க்கொழுந்தே
எற்கொள்மால்வரைஉம்பரின்இரும்புனம்காக்கும்
கொற்கொள்வேற்கணார்குரீஇஇனத்தெறிகுருவிந்தக்
கற்கள்வானிடைமீன்எனவீழ்வனகாணாய். (௧௭)

வரிகொள்ஒண்சிலைவயவர்தம்கணிச்சியின்மறிந்த
பரியகார்அகில்சுடநிமிர்பசும்புகைப்படலம்
அரியவேதியர்ஆகுதிப்புகையொடும்அளவி
கரியமால்வரைக்கொழுந்தெனப்படர்வனகாணாய். (௧௮)

கானகாண்மலர்கறைஅகில்காவிதேன்நாறும்
சோனைவார்குழற்சுமைபெறுநிடுகிடைத்தோகாய்
வானயாற்றுமீன்மலர்ந்தனஎனப்புனல்வறந்த
கானயாறுகள்கணமணிஇமைப்பனகாணாய். (௧௯)

மஞ்சளாவியமாணிக்கப்பாறையில்மறைவ
செஞ்செவேநெடுமரகதப்பாறையில்த்தெரிவ
விஞ்சைநாடியர்கொழுநரோடுடினர்விமலப்
பஞ்சளாவியசிறடிச்சுவடுகள்பாராய். (உ0)

சுழித்தசெம்பொனின்தொளைபுரைஉந்திஇன்துணையே
கொழித்தமாமணிஅருவியோடிழிவனகோலம்
அழித்துமேவியஅரம்பையர்அறல்புரைகூந்தல்
சுழித்துநீக்கியகற்பகநறுமலர்காணாய். (உக)

அறைகழற்சிலைக்குன்றவர்அகன்புனம்காவற்
பறைஎடுத்தொருகடுவன்நின்றடிப்பதுபாராய்
பிறையைஎட்டினள்பிடித்திதற்கிதுபிழைஎன்று
கறைதுடைக்குறுபேதைஓர்கொடிச்சியைக்காணாய். (உஉ)

அடுத்தபல்பகல்அன்பரிற்பிரிந்தவர்என்ப
தெடுத்துநந்தமக்கியம்புவஎனக்கரிந்திருண்ட
தொடுத்தமாதவிச்சூழலிற்சூர்அரமகளிர்
படுத்துவைகியபல்லவசயனங்கள்பாராய். (உங)

நினைந்தபோதினும்அமிர்தொக்கும்நேரிழைநிறைதேன்
வனைந்தவேங்கையில்கோங்கினில்வயின்தொறும்தொடுத்து
குனிந்தஊசலிற்கொடிச்சியர்எடுத்தஇன்குறிஞ்சி
கனிந்தபாடல்கேட்டசுணமாவருவனகாணாய். (உச)

இலவும்இந்திரகோபமும்புரைஇதழ்இனியோய்
அலவும்நுண்டுளிஅருவிநீர்அரம்பையர்ஆடக்
கலவைசாந்துசெங்குங்குமம்கற்பகம்கொடுத்த
பலவும்தோய்தலிற்பரிமளம்கமிழ்வனபாராய். (உரு)

செம்பொனாற்செய்துருவிகம்இட்டெழுதியசெப்போர்
கொம்பர்தாங்கியதெனப்பொலிவனமுலைக்கொடியே
அம்பொன்மால்வரைஅலர்கதிர்உச்சிசென்றணுக
பைம்பொன்மாமுடிமிலைச்சியதொப்பதுபாராய். (உசா)

மடந்தைமார்களில்த்திலதமேமணிநிறத்திணிகல்
தொடர்ந்தபாறையில்வேய்இனம்சொரிகதிர்முத்தம்
இடந்தொறும்கிடந்திமைப்பனஎக்கிளஞ்செக்கர்
படர்ந்தவானிடைத்தாரகைநிகர்ப்பனபாராய். (உஎ)

குழுவுநுண்டொளைவேயினுங்குழிநாம்பெறிவும்
கெழுவுதண்டமிழ்யாழினும்இனியசொற்கிளியே
முழுவதும்மலர்விரியநாண்முருக்கிடைமிடைந்த
பழுவம்வெங்கனல்கதுவியதொப்பனபாராய். (௨௮)

வளைகள்காந்தளிற்பெய்தனஅனையகைம்மயிலே
தொளைகொள்தாழ்தடக்கைநெடுந்துருத்தியில்த்தூக்கி
அளவில்மூப்பினர்அருந்தவர்க்கருவிநீர்கொணர்ந்து
களபமால்கரிகுண்டிகைசொரிவனகாணாய். (௨௯)

வடுவின்மாவகிர்இவையெனப்பொலிந்தகண்மயிலே
இடுகுகண்ணினர்இடர்உறுமூப்பினர்ஏக
நெடுகுகூனல்வால்நீட்டினஉருகுறுநெஞ்சக்
கடுவன்மாதவர்க்கருநெறிகாட்டுவகாணாய். (௩௦)

பாந்தள்தேர்இவைபழிபடப்பரந்தபேர்அல்குல்
ஏந்துநூல்மணிமார்பினர்ஆகுதிக்கியைந்த
கூந்தன்மென்மயில்குறுகினநெடுஞ்சிறைகோலி
காந்துகுண்டத்தின்வயங்கெரிஎழுப்புவகாணாய். (௩௧)

அலம்புவார்குழல்ஆய்மயிற்பெண்அருங்கலமே
நலம்பெய்வேதியர்மார்பினுக்கியைவுறநாடி
சிலம்பிபஞ்சினிற்சிக்கறத்தெரிந்தநூல்தேமாம்
பலம்பெய்மந்திகள்உடன்வந்துகொடுப்பனபாராய். (௩௨)

தெரிவைமார்க்கொருகட்டளைஎனச்செய்ததிருவே
பெரியமாக்களிற்பலாக்களிற்பிறங்கியவாழை
அரியமாக்கனிகடுவன்கள்அன்புகொண்டளிப்ப
கரியமாகிழங்ககழ்ந்தனகொணர்வனகாணாய். (௩௩)

ஐவனக்குரல்தினைக்கதிர்இறுங்கவைஅவரை
மெய்வணக்குறுவேய்இனம்ஈன்றமெல்அரிசி
பொய்வணக்கியமாதவர்புரைதொறும்புகுந்துன்
கைவளைத்தவாய்க்கிள்ளைதந்தளிப்பனகாணாய். (௩௪)

பிடிகொள்வேழத்தைஎயிற்றெடும்எடுத்துடன்விழுங்கும்
கடியமாசுணம்கற்றறிந்தவர்எனஅடங்கி
சடைகொள்சென்னியர்தாழ்விலர்தாம்மிதித்தேற
படிகள்தாம்எனத்தாழ்வனகிடப்பனபாராய். (௩௫)

அசும்புபாய்வரை அருந்தவமுடித்தவர் துணைக்கட்
டசும்புவேய்ந்தவர் ஒத்தவர் தமக்குவிண் தருவான்
விசும்புதூர்ப்பன ஆம்எனவெயில்எனவிளங்கும்
பசும்பொன்மானங்கள்போவனவருவனபாராய். (௩௬)

இனையயாவையும்எந்திழைக்கியம்பினன்காட்டி
அனையமால்வரை அருந்தவர்எதிர்வரவணங்கி
வினையின்நீங்கியவேதியர்விருந்தினன்.ஆனான்
மனையில்மெய்எனும்மாதவம்புரிந்தவன்மைந்தன். (௩௭)

(வேறு.) மாவியல்உதயம்ஆம்.துளபவானவன்
மேவியபகைஇருள்அவுணர்வீய்ந்துக
காவியல்குடவரைக்காலநேமிமேல்
ஏவியதிகிரிபோல்இரவிஎய்கினான். (௩௮)

சக்கரம்தானவன்உடலில்தாக்குற
எக்கியசோரியிற்பரந்ததெங்கணும்
செக்கர்அத்தியவன்வாயில்த்தீர்ந்துவே
றுக்கவான்தனிஎயிறெுத்ததிந்துவே. (௩௯)

ஆனனம்மகளிருக்களித்ததாமரைப்
பூநனிமுகிழ்த்தனபுலரிபோனபின்
மீன்எனவிளங்கியவெள்ளிஆம்பல்வீ
வான்எனமணித்தடம்மலர்ந்தஎங்குமே.. (௪0)

மந்தியும்கடுவனும்மரங்கள்நோக்கின
தந்தியும்பிடிகளும்தடங்கள்நோக்கின
நிந்தையில்சகுந்தங்கள்நீளம்நோக்கின
அந்தியைநோக்கினன் அறிவைநோக்கினன். (௪௧)

மொய்யுறுநறுமலர்முகிழ்த்தஆம்சில
மையறுநறுமலர்மலர்ந்தஆம்சில
ஐயனேடிஎவற்கும்அமுதனைருக்கும்
கைகளும்கண்களும்கமலம்போன்றவே. (௪௨)

மாலைவந்தகன்றபின்மருங்கிலாளொடும்
வேலைவந்துறைவிடம்மேயதாம்என
கோலைவந்துமிழ்சிலைத்தம்பிகோலிய
சாலைவந்தெய்தினன்தவத்தின்எய்தினான். (௪௩)

நெடுங்கழைக்குறுந்தறிநிறுவிமேல்நிரைத்
தொடுங்கலின்நெடுமுகடொழுக்கினூழ்உற
இடுங்கலில்கைவிசித்தேற்றிஎங்கணும்
முடங்கலில்வரிச்சுமேல்விரிச்சுமூட்டியே. (சச)

தேக்கடைப்படலையிற்செறிவுசெய்துபின்
பூக்கிளர்நாணலின்புல்லுவேய்ந்துகீழ்
ஆக்கியவேய்களிற்சுவரும்சுற்றுறப்
போக்கிமென்தளிர்ந்தவைபுனையல்த்திற்றியே (சரு)

வேறிடம்இயற்றினன்மிதிலைநாடிக்கும்
கூறினநெறிமுறைகுயிற்றிக்குங்குமச்
சேறுகொண்டழகுறத்திருத்தித்திண்சுவர்
ஆறிடுமணியொடும்கனகம்அப்பியே. (சசு)

மயில்உடைப்பீலியின்விதானம்மேல்வகுத்
தயில்உடைச்சரிகையால்அருகுதூக்குறத்
தெயில்இளங்கழைகளால்இயற்றியாறிடு
செயல்உடைப்புதுமலர்பொற்பச்சிந்தியே. (சஎ)

இன்னணம்இளையவன்இழைத்தசாலையில்
பொன்னிறத்திருவொடும்குடிபுக்கான்அரோ
நன்னெடுந்திசைமுகன்அகத்தும்நம்அனோர்க்
குன்அருஉயிருளும்ஒக்கவைகுவான். (சஅ)

(வேறு.)மாயம்நீங்கியசிந்தனைமாமறை
தூயபாற்கடல்வைகுந்தம்சொல்லல்ஆம்
ஆயசாலைஅரும்பெறல்அன்பினன்
நேயம்நெஞ்சின்விரும்பிநிரப்பினான். (சகூ)

மேவுகானம்மிதிலையர்கோன்மகள்
பூவின்மெல்லியபாதமும்போந்தன
தாவில்எம்பிகைசாலைசமைத்தன
யாவையாதும்இலார்க்கியையாதவே. (ருo)

என்றுசிந்தித்திளையவற்பார்த்திரு
குன்றுபோலக்குவவியதோளினாய்
என்றுகற்றனைநீஇதுபோல்என்றான்
துன்றுதாமரைக்கண்பனிசோர்கின்றான். (ருக)

அடரும்செல்வம்அளித்தவன் ஆணையால்
படரும்நல்அறம்பாலித்திரவியில்
சுடரும்மெய்ப்புகழ்சூடினென்என்பதென்
இடருனக்கிழைத்தேன்கெடுநாள்என்றான். (௫௨)

அந்தவாய்மொழிஐயன்இயம்பலும்
நொந்தசிந்தைஇளையவன்நோக்கினால்
எந்தைகாண்டிஇடரினுக்கஞ்சுராம்
முந்திவந்துமுளைத்ததன்றோஎன்றான். (௫௩)

ஆகசெய்தக்கதில்லைஅறத்தினின்
றேகல்என்பதரிதென்றும்எண்ணினான்
ஓகைகொண்டவன்உள்இடர்நோக்கினான்
சோகபங்கம்துடைப்பரிதால்என. (௫௪)

பின்னும்தம்பியைநோக்கிப்பெரியவன்
மன்னும்செல்வத்திற்குண்டுவரம்பிதற்
கென்னகேடுண்டிவ்எல்லைஇல்இன்பத்தை
உன்னுமேல்வரும்ஊதியத்தோடென்றான். (௫௫)

தேற்றித்தம்பியைத்தேவரும்கைதொழ
நோற்றிருந்தனன்நோன்சிலையோன்இப்பால்
ஆற்றல்மாதவன் ஆணையிற்போனவர்
கூற்றின்உற்றதுகூறல்உற்றுமரோ. (௫௬)

அ-வது. சித்திரகூடப்படலம் முற்றும். ஆ திருவிருத்தம்-எகூச.

கம்பநாட்டாழ்வார்திருவடிகளேசரணம்.

## கூ-வது. பள்ளிஅடைப்படலம்.



பொருவில்தூதுவர்போயினர்பொய்யிலார்.
இரவும்நன்பகலும்கடிதேகினர்
பரதன்கோயில்உற்றார்படிகாரிர்எம்
வரவுசொல்லுதிர்மன்னவற்கேஎன்றார். (௧)

தூதர்வந்தனர்உந்தைசொல்லோடென
காதல்முந்திக்களிக்கின்றசிந்தையான்
போதுகென்னனப்புக்கவர்கைதொழ
தீதிலன்கொல்திருமுடியோன்என்றான். (௨)

வலியென்னென்றவர்கூறமகிழ்ந்தனன்
இலைகொள்பூண்இளங்கோன்எம்பிரானொடும்
உலைவில்செல்வத்தனேஎனஉண்டென
தலையின்எந்தினன்தாழ்தடக்கைகளே. (௩)

மற்றும்சுற்றத்துளார்க்கும்வரன்முறை
உற்றதன்மைவிருவிஉவந்தபின்
இற்றதாரும்எழுதருமேனியாய்
கொற்றவன்தன்திருமுகம்கொள்கென்றார். (௪)

என்றுகூறலும்எத்திஇறைஞ்சினன்
பொன்றிணிந்தபொருவில்தடக்கையால்
நின்றுவாங்கிஉருகியநெஞ்சினன்
துன்றுநாண்மலர்ச்சென்னியிற்சூடினன். (௫)

சூடிச்சந்தனம்தோய்த்துடைசுற்றும்மண்
மூடிதோட்டின்முடங்கல்நிமிர்த்தனன்
ஈடுநோக்கிவந்தெய்தியதூதர்க்குக்
கோடிமேலும்நிதியம்கொடுத்தனன். (௬)

வாணிலாநகைதோன்றமயிர்ப்புறம்
பூணவானுயர்காதலிற்பொங்கினன்
நாணிலாமலர்தூவினன்தம்முனைக்
காணலாம்எனும்ஆசைகடாவவே. (௭)

எழுகசேனைஎன்றேவினன்எய்தினன்
தொழுதுகேகயர்கோமகன்சொல்லொடும்
தழுவுதேரிடைத்தம்பியொடேறினன்
பொழுதும்நாளும்குறித்திலன்போயினன். (௮)

யானைசுற்றினதேர்இரைத்தீண்டின
மானவேந்தர்குழுவினர்வாள்உடைத்
தானைசூழ்ந்தனசங்குமுரன்றன
மீனவேலையின்விம்மினபேரியே. (௯)

கொடிநெருங்கினதொங்கல்குழுமின
வடிநெடுங்கண்மடந்தையர்ஊர்மடப்
பிடிதுவன்றினபூண்ஒளிபோர்ந்தன
இடிதுவன்றினமின்எனஎங்குமே. (௧௦)

பண்டியங்கள்பரந்தனபல்லியம்
கொண்டியம்பினகொண்டலில்கோதையில்
வண்டியம்பினவாளியின்வாவுறும்
செண்டியங்குபரியுஞ்செறிந்தவே. (௧௧)

தொளைமுகத்திற்சுருதிவிளம்பின
இளைமுகத்தினன்உம்பரின்ஏகிட
விளைமுகத்தனல்வேலையின்மீதுசெல்
வளைமுகத்தனவாசியும்வந்தவே. (௧௨)

வில்லின்வேதியர்வாள்செறிவித்தகர்
மல்லின்மல்லர்சுரிகையின்வல்லவர்
கொல்லும்வேல்குந்தங்கற்றுயர்கொற்றவர்
தொல்லைவாரணப்பாகருஞ்சுற்றினர். (௧௩)

எறிபகட்டினம்ஆடுகள்ஏற்றைமா
குறிகொள்கோழிசிவல்குறும்பூழ்நெடும்
பொறிமயிர்க்கவுதாரிகள்போற்றுறும்
நெறியின்மாக்களும்முந்திநெருங்கினர். (௧௪)

நிறைந்தமாந்தர்நெருங்கினர்நெஞ்சினில்
பறந்துபோதும்கொல்என்றுபதைக்கின்றார்
பிறந்துதேவர்உணர்ந்துபெயர்ந்துமுன்
உறைந்தவான்உறுவார்களைஒக்கின்றார். (௧௫)

ஊன்அளைந்தஉடற்குயிர்ஆம்என
தான்அளைந்துதழுவினதண்ணுமை
தேன்அளைந்துசெவிஉறவார்த்தென
வான்அளைந்ததுமாகதர்பாடலே. (௧௬)

ஊறுகொண்டமுரசுமிழ்ஓதையை
வீறுகொண்டனவேதியர்வாழ்த்தொலி
ஏறுகொண்டெழும்மல்லர்இடிப்பினை
மாறுகொண்டனவந்திகர்ஏத்தரோ. (௧௭)

ஆறும்கானும்அகன்மலையும்கடந்
தேறிஏழ்பகல்நீந்திப்பின்எந்திரத்
தூறுபாகுமடைஉடைத்தொண்முளை
நாறுபாய்வயற்கோசலைநண்ணினன். (௧௮)

ஏர்துறந்தவயல்இளமைந்தர்தோள்
தார்துறந்தனதண்டலைகெல்வினும்
நீர்துறந்தனதாமரைநீத்தெனப்
பார்துறந்தனள்பங்கயச்செல்வியே. (௧௯)

பிதிர்ந்துசாறுபெருந்துறைமண்டிடச்
சிதிர்ந்துசிந்தி.அழிந்தனதேங்கனி
முதிர்ந்துகொய்புனர்இன்மையின்மூக்குமிழ்த்
துதிர்ந்துலர்ந்தனஒண்மலர்ஈட்டமே. (௨0)

எய்ந்தகாலம்இதுஇதற்காம்என
ஆய்ந்துமள்ளர்அரிகுனர்இன்மையால்
பாய்ந்தருகப்பகுகழுந்தேறலால்
சாய்ந்தொசிந்துமுளைத்தனசாலியே. (௨௧)

எட்குலாமலர்ஏசியநாசியர்
புட்குலாவயல்பூசற்கடைசியர்
கட்டிலார்களைகாதற்கொழுனரோ
டொட்கலாம்உடையாரின்உயங்கினர். (௨௨)

ஓதுகின்றிலகிள்ளையும்ஓதியர்
தூதுசென்றிலவந்திலதோழர்பால்
மோதுகின்றிலபேரிமுழாவிழா
போதுகின்றிலபொன்அணிவீதியே. (௨௩)

பாடல்நீத்தனபண்தொடர்பண்குழல்
ஆடல்நீத்தஅரங்கொடகன்புனல்
கூடல்நீத்தனகூடிகைகுளிகை
மாடம்நீத்தனமங்கலம்வள்ளையே. (௨௪)

நகைஇழந்தனவாண்முகம்நாறநெய்ப்
புகைஇழந்தனமாளிகைபொங்கழல்
சிகைஇழந்தனதீவிகைதேமலர்த்
தொகைஇழந்தனதோகையர்ஓதியே. (௨௫)

அலர்ந்தபைங்கூழ்அகன்குளக்கீழன
மலர்ந்தவாயிற்புனல்வழங்காமையால்
உலர்ந்தவன்கண்உலோபர்கடைத்தலை
புலர்ந்துநிற்கும்பரிசிலர்போலவே. (௨௬)

நாவிநீத்தருநல்வளம்துன்னிய
பூவினீத்தெனநாடுபொலிவொரீஇ
தேவிநீத்தருஞ்சேண்நெறிதாவிட்
ஆவிநீத்தஉடல்எனல்ஆயதே. (௨௭)

என்றநாட்டினைநோக்கிஇடர்உழந்
தொன்றும்உற்றதுணர்ந்திலன்உன்றுவான்
சென்றுகேட்பதொர்திக்குளதாம்என
நின்றுநின்றுநெடிதுயிர்த்தான்அரோ. (௨௮)

மீண்டும்எய்தி அம்மெய்எனும்நல்அணி
பூண்டவேந்தன்திருமகன்புந்திதான்
தூண்டுதேரினும்முந்துறத்துங்குவான்
நீண்டவாயில்நெடுநகர்நோக்கினன். (௨௯)

அண்டம்முற்றும்திரிந்தயர்ந்தாய்அமு
துண்டுபோதிஎன்றெண்கதிர்ச்செல்வனை
விண்டொடர்ந்துவிலக்குவபோல்வன
கண்டிலன்கொடியின்நெடுங்கானமே. (௩௦)

ஈட்டுநன்புகழ்க்கிட்டியயாவையும்
வேட்டவேட்டவர்கொண்மின்விரைந்தென
கோட்டிமாக்களைக்கூவுவபோல்வன
கேட்டிலன்முரசின்கிளர்ஓதையே. (௩௧)

கள்ளைமாக்கவர்கண்ணியன்கண்டிலன்
பிள்ளைமாக்களிறும்பிடிஈட்டமும்
வள்ளைமாக்கள்நிதியும்வயிரியர்
கொள்ளைமாக்களிற்கொண்டனர்ஏகவே. (௩௨)

காவல்மன்னவன்கான்முளைகண்டிலன்
ஆவும்மாவும்அழிகவுள்வேழமும்
மேவுகாதல்நிதியும்வெறுக்கையும்
பூவின்வானவர்கொண்டனர்போகவே. (௩௩)

சூழமைந்தசுரும்புநரம்புந்தம்
ஏழமைந்தஇசைஇசையாமையால்
மாழைஉண்கண்மயில்எனும்சாயலார்
கூழைபோன்றபொருநர்குழாங்களே. (௩௪)

தேரும்மாவும்களிறும்சிவிகையும்
ஊரும்பண்டியும்ஊருநர்இன்மையால்
யாரும்இன்றிஎழில்அழிவீதிகள்
வாரிஇன்றியல்வாறுகஆற்றினே. (௩௫)

அன்னதன்மைஅநகர்நோக்கினன்
பின்னைஅப்பெரியோர்தம்பெருந்தகை
மன்னன்வைகும்வளநகர்போலுமா
றென்னதன்மைஇளையவனேஎன்றான். (௩௬)

வேற்றடங்கலர்விண்உறவென்றிடும்
கூற்றடங்கப்பொருநெடுங்கோளினாய்
சேற்றடங்கட்டிருவொடும்நீங்கிய
பாற்றடங்கடல்ஒத்ததுபார்என்றான். (௩௭)

குருமணிப்பூண்அரசிளங்கோளரி
இருகைகூப்பிஇறைஞ்சினன்எய்திய
தொருவகைத்தன்றுறுதுயர்ஊழிவாழ்
திருநகர்த்திருநீர்ந்தனள்ஆம்என்றான். (௩௮)

அனையவேலையில்அக்கடைத்தோரண
மனையின்நீள்நெடுமங்கலவீதிகள்
நினையும்மாத்திரத்தேகியநேமியான்
தனையனும்தந்தைசார்பிடம்மேவினான். (௩௯)

விருப்பின்எய்தினன்வெந்திறல்வேந்தனை
இருப்புநல்இடம்எங்கணும்கண்டிலன்
அருப்பம்அன்றிதென்றுறயுறவெய்தினான்
பொருப்புநாணஉயர்ந்தபுயத்தினான். (௪0)

ஆயகாலையில்ஐயனைநாடித்தன்
றாயகையிற்றொழல்உறுவான்தனை
கூயள்அன்னைகுறுகுதிர்என்றென
வேய்கொள்தோளிஒருத்திவிளம்பினாள். (௪௧)

வந்துதாயைஅடியில்வணங்கலும்
சிந்தைஆரத்தழுவினள்திதிலர்
எந்தைஎன்னையர்எங்கையர்என்றனள்
அந்தம்இல்குணத்தானும்அதாம்என்றான். (௪௨)

(வேறு.) மூண்டெழுகாதலால்முளரித்தாள்தொழ
வேண்டினென்எய்தினென்உள்ளம்விம்மும்ஆல்
ஆண்டகைநெடுமுடிஅரசர்கோமகன்
யாண்டையான்பணித்திர்என்றிருகைகூப்பினன். (௪௩)

ஆனவன்உரைசெயஅறிவில்சிந்தையாள்
தானவர்வலிதவநிமிர்ந்ததானைஅத்
தேனமர்தெரியலான்தேவர்கைதொழ
வானகம்எய்தினன்வருந்தல்நீஎன்றாள். (௪௪)

எறிந்தனகடியசொல்செவியுள்எய்தலும்
நெறிந்தலர்குஞ்சியான்நெடிதுவீழ்ந்தனன்
அறிந்திலன்உயிர்த்திலன்அசனிஏற்றினால்
மறிந்துயர்மராமரம்மண்ணுற்றென்னவே. (௪௫)

வாய்ஒளிமழுங்கத்தன்மலர்ந்ததாமரை
ஆய்அலர்நயனங்கள்அருவிசோர்தர
தீய்எரிசெவியில்வைத்தனையதீயசொல்
நீயலதுரைசெயநினைப்பரோஎன்றான். (௪௬)

எழுந்தனன்ஏங்கினன்இரங்கிப்பின்னரும்
விழுந்தனன்விம்மினன்வெய்துயிர்த்தனன்
அழிந்தனன்ஆற்றினன்ஆற்றிஇன்னன
மொழிந்தனன்பின்னரும்முருகிற்செவ்வியான். (௪௭)

அறந்தனைவேர்அறுத்தருளைக்கொன்றனை
சிறந்தநின்தண்அளித்திருவைத்தேசழித்
திறந்தனைஆம்எனில்இறைவநீதியை
மறந்தனைஉனக்கிதின்மாசுமேல்உண்டோ. (௪௮)

சினக்குறும்பெறிந்தெழுகாமத்தீஅவித்
தினக்குறும்பியாவையும்எற்றியாவர்க்கும்
மனக்குறுநெறிசெலும்வள்ளியோய்மறந்
துனக்குறுநெறிசெலல்ஒழுக்கின்பாலதோ. (௪௯)

முதலவன்முதலியமுந்தையோர்பழங்
கதையையும்புதுக்கியதலைவன்கண்ணுடை
நுதலவன்சிலைவிலின்நோன்மைநூறிய
புதல்வனைஎங்கணம்பிரிந்துபோயினாய். (௫0)

செவ்வழிஉருட்டியதிகிரிமன்னவ
எவ்வழிமாயினும்இரவலாளர்தாம்
இவ்வழிஉலகினில்இன்மைகண்பினோர்
அவ்வழிஉலகினும்உளர்கொலோஅய்யா. (௰க)

பற்பகல்கிழற்றும்கின்கவிகைப்பாய்கிழல்
கிற்பனபல்உயிர்உணங்கநீநெடுங்
கற்பகநறுகிழல்காதலித்தியோ
மற்பகமலர்ந்ததோள்மன்னர்மன்னனே (௰உ)

இம்பர்கின்றேகினைஇருக்கும்சார்பிழந்
தும்பர்வந்துன்கழல்ஒதுங்கினர்கொல்.ஆம்
சம்பரன்அனையஅத்தானைத்தானவர்
அம்பரத்தின்னமும்உளர்கொல்.ஆம்ஐயா. (௰௩)

இயங்கெழுதானையர்இறுத்தமாத்திறை
உயங்கல்இல்மறையவர்க்குதவிஉம்பரின்
அயங்கெழுவேள்வியோடமரர்க்காக்கிய
வயங்கெரிவளர்த்தனைவைகவல்லையோ. (௰௪)

எழுயர்மதகளிற்றிறைவஎகினை
வாழியகரியவன்வழியன்கைஎனப்
பாழியம்புயத்துகின்பணியின்நீங்கிலா
ஆழியைஇனிஅவற்களிக்கஎண்ணியோ. (௰௫)

பற்றிலதவத்தினில்பயந்தமைந்தற்கு
முற்றுலகளித்தமுறையின்எய்திய
கொற்றவன்முடிமணக்கோலம்காணவும்
பெற்றிலைபோலும்கின்பெரியகண்களால். (௰௬)

ஆற்றலன்இன்னனபன்னிஆவலித்
தூற்றுறுகண்ணினன்உருகுவான்தனைத்
தேற்றினன்ஒருவகைசிறிதுதேறிய
கூற்றுறழ்வரிசிலைக்குருசில்கூறுவான். (௰௭)

எந்தையும்யாயும்எம்பிரானும்எம்முனும்
அந்தம்இல்பெருங்குணத்திராமன்ஆதலால்
வந்தனைஅவன்கழல்வைத்தபோதலால்
சிந்தைவெங்கொடுந்துயர்தீர்கலாதென்றான். (௰அ)

அவ்வுரைகேட்டலும்அசனிஏறென
வெவ்வுரைவல்லவள்மீட்டும்கூறுவாள்
தெவ்அடுசிலையினுய்த்தேவிதம்பிஎன்
றிவ்இருவோரொடும்கானத்தான்என்றாள். (௫௯)

வனத்தினன்என்றவள்இசைத்தமாற்றத்தை
நினைத்தனன் இருந்தனன்நெருப்புண்டான்என
வினைத்திறம்யாதினிவிளைவதின்னமும்
எனைத்துளகேட்பனதுன்பம்யான்என்றான். (௬0)

ஏங்கினன்விம்மலோடிருந்தஏந்தல்அப்
பூங்கழற்காலவன்வனத்துப்போயது
தீங்கிழைத்ததனினோதெய்வம்சீறியோ
ஓங்கியவிதியினோயாதினோஎனா. (௬௧)

தீயனஇராமனேசெய்யுமேல்அவை
தாய்செயல்அல்லவோதலத்துளோர்க்கெலாம்
போயதுதாதைவிண்புக்கபின்னரோ
ஆயதன்முன்னரோஅருளுவீர்என்றான். (௬௨)

குருக்களைஇகழ்தலின்அன்றுகூறிய
செருக்கினால்அன்றொருதெய்வத்தாலும்அன்
றருக்கனேஅனையஅவ்அரசர்கோமகன்
இருக்கவேவனத்தவன்ஏகினான்என்றாள். (௬௩)

குற்றம்ஒன்றில்லையேல்கொதித்துவேறுளோர்
செற்றதும்இல்லையேல்தெய்வத்தால்அன்றேல்
பெற்றவன்இருக்கவேபிள்ளைகான்புக
உற்றதென்பின்அவன்உலந்ததென்என்றான். (௬௪)

வாக்கினால்வரம்தரக்கொண்டுமைந்தனைப்
போக்கினேன்வனத்திடைபோக்கிப்பார்உனக்
காக்கினேன்அவன்அதுபொறுக்கலாமையால்
நீக்கினான்தன்உயிர்நேமிவேந்தென்றாள். (௬௫)

சூடினமலர்க்கரம்சொல்லின்முன்செவி
கூடினபுருவங்கள்குதித்துக்கூத்துநின்
றாடினஉயிர்ப்பினோட்டழற்கொழுந்துகள்
ஓடினஉமிழ்ந்தனஉதிரம்கண்களே. (௬௬)

துடித்தனகபோலங்கள்சுற்றும்தீச்சுடர்
பொடித்தனமயிர்த்தொளைபுகையும்போர்த்தது
மடித்தநுவாய்நெடுமழைக்கைமண்பக
அடித்தனஒன்றொடொன்றசனிஅஞ்சவே. (௬௭)

பாதங்கள்பெயர்தொறும்பாரும்மேருவும்
போதங்கொள்நெடுந்தனிப்பொருவில்கூம்பொடு
மாதங்கம்வருகலம்மறுகிக்கால்பொர
ஓதங்கொள்கடலில்நின்றுலைவபோன்றவே. (௬௮)

அஞ்சினர்வானவர்அவுணர்அச்சத்தால்
துஞ்சினர்எனபலசொரிமதத்தொளை
எஞ்சினதிசைக்கரிஇரவிமீண்டனன்
வெஞ்சினக்கூற்றும்தன்விழிபுதைத்ததே. (௬௯)

கொடியவெங்கோபத்தாற்கொதித்தகோளரி
கடியவள்தாய்எனக்கருதுகின்றிலன்
நெடியவன்முனியும்என்றஞ்சிநின்றனன்
இடிஉரும்அனையவெம்மொழிஇயம்புவான். (௭0)

மாண்டனன்எந்தைஎன்தம்முன்மாதவம்
பூண்டனன்நின்கொடும்புணர்ப்பினால்என்றால்
ஈண்டிலென்வாய்அதுகேட்டும்நின்றயான்
ஆண்டனனேஅன்றோஅரசைஆசையால். (௭௧)

தீயினம்இருந்தனையாணும்நின்றனென்
ஏயெனும்மாத்திரத்தெற்றுகிற்றிலென்
ஆயகன்முனியும்என்றஞ்சினேன்அலால்
தாய்எனும்பெயர்எனைத்தடுக்கற்பாலதோ. (௭௨)

மாளவும்உளன்ஒருமன்னன்வன்சொலால்
மீளவும்உளன்ஒருவீரன்மேயபார்
ஆளவும்உளன்ஒருபரதன்ஆகினல்
கோள்அலதறநெறிகுறைஉண்டாகுமோ. (௭௩)

சூழிஉடைத்தாய்உடைக்கொடியசூழ்ச்சியால்
வழிஉடைத்தாய்வரும்மரபைமாய்த்தொரு
பழிஉடைத்தாக்கினன்பரதன்பண்டெனும்
மொழிஉடைத்தாக்கலின்முறைமைவேறுண்டோ. (௭௪)

நோயிர்அல்லீர்நும்கணவன்தன்உயிர்உண்டீர்
பேயிரோநீர்இன்னம்இருக்கப்பெறுவீரோ
மாயிர்மாயாவன்பழிதந்தீர்முலைதந்தீர்
தாயிரோநீர்இன்னும்எனக்கென்தருவீரோ. (௭௫)

ஒன்றும்பொய்யாமன்னனைவாயால்உயிரோடும்
தின்றும்தீராவன்பழிகொண்டும்திருஎய்தி
என்றும்நீரேவாழஉவந்தீர்அவன்ஏகக்
கன்றும்தாயும்போவனகண்டும்கழிவீரோ. (௭௬)

இறந்தான்தந்தைஈய்ந்தவரத்துக்கிழிவென்னா
அறந்தான்ஈதென்றன்னவன்மைந்தன்அரசெல்லாம்
துறந்தான்தாயின்சூழ்ச்சியின்ஞாலம்அவனோடும்
பிறந்தான்ஆண்டான்என்னும்இதென்றாற்பெறல்ஆமே. (௭௭)

மாளும்என்றேதந்தையைஉன்னாவசைகொண்டாள்
கோளும்என்னாலேஎனல்கொண்டான்அதுஅன்றேல்
மீளும்அன்றேஎன்னையும்மெய்யேஉலகெல்லாம்
ஆளும்என்றேபோயினன்அன்றோஅரசாள்வான். (௭௮)

ஓதாநின்றதொல்குலமன்னன்உணர்வப்பால்
யாதானும்தான்ஆகஎனக்கேபணிசெய்வான்
தீதாநின்றசிந்தனைசெய்தான்அவன்என்ன
போதாதோஎன்தாய்இவள்கொண்டபுகழ்அம்மா. (௭௯)

உய்யாநின்றேன்இன்னமும்என்முன்உடன்வந்தான்
கையார்கல்லைப்புல்அடகுண்ணக்கலம்ஏந்தி
வெய்யோன்நான்இன்சாலியின்வெண்சோறமுதென்ன
நெய்யோடுண்ணாநின்றதுநின்றார்வினையாரோ. (௮0)

வில்லார்தோளான்மேவினன்வெங்கானகம்என்ன
நல்லான்அன்றேதுஞ்சினன்நஞ்சேஅனையாளை
கொல்லேன்மாயேன்வன்பழியாலேகுறைவற்றேன்
அல்லேனோயான்அன்புடையார்போல்அழுகின்றேன். (௮௧)

பாரோர்கொள்ளார்யான்உயிர்பேணிப்பழிபூணேன்
தீராதொன்றோதுன்பம்இவ்வூரில்திருவில்லாள்
ஆரோடெண்ணிற்றாருணாதந்தாய்அறம்எல்லாம்
வேரோடும்கேடாகமுடித்தென்விளைவித்தாய். (௮௨)

கொன்றேன்நான்என்தந்தையைமற்றுன்கொலைவாயால்
ஒன்றோகானத்தண்ணலைஉய்த்தேன்உலகாள்வான்
நின்றேன்என்றால்நின்பிழைஉண்டோபழிஉண்டோ
என்றேனும்தான்என்புகழ்மாயும்இடம்உண்டோ. (௮௩)

கன்றாலேஎன்செய்வினைஇன்னும்சிலகாண்பார்
மன்றோர்பாராதென்றுவர்வாளாபழிபூண்டாய்
உண்ணாநஞ்சம்கொல்கிலதென்னும்உரைஉண்டென்
றெண்ணாநின்றேன்அன்றிஇரேன்என்உயிரோடே. (௮௪)

என்றன்பாவிக்கும்பிவயிற்றின்இடைவைகி
தோன்றும்தீராப்பாதகம்அற்றென்துயர்தீர
சான்றும்தானேநல்அறம்ஆத்தகைஞாலம்
மூன்றும்காணமாதவம்யானேமுயல்கின்றேன். (௮௫)

சிறந்தார்சொல்லும்நல்உரைசொன்னேன்செயல்எல்லாம்.
மறந்தாய்செய்தாய்ஆருதிமாயாஉயிர்தன்னை
துறந்தாய்ஆவல்துணையும்ஆகிஉலகத்தே
பிறந்தாய்ஆகிஈதலதில்லைபிறிதென்றான். (௮௬)

(வேறு.) இன்னணம்இனையனஇயம்பியானும்இப்
பன்னருங்கொடுமனப்பாவிபாடிரேன்
துன்னருந்துயர்கெடத்தூயகோசலை
பொன்னடிதொழுவென்என்றெழுந்துபோயினான். (௮௭)

ஆண்டகைகோசலைஅருகர்எய்தினன்
மீண்டும்மண்கிழிதரவீழ்ந்துகேழ்கிளர்
காண்டகுதடக்கையிற்கமலச்சீறடி
பூண்டனன்கிடந்தனன்புலம்பினான்அரோ. (௮௮)

எந்தைஎவ்வுலகுளான்எம்முன்யாண்டையான்
வந்ததுதமியென்இம்மறுக்கம்காணவோ
சிந்தையின்உறுதுயர்தீர்த்திர்ஆல்எனும்
அந்தரத்தமரரும்அழுதுசோரவே. (௮௯)

அடித்தலம்கண்டிலென்யான்என்ஐயனை
படித்தலம்காவலன்பெயரற்பாலனே
பிடித்திலிர்போலும்நீர்பிழைத்திராஎனும்
பொடித்தலம்தோள்உறப்புரண்டுசோர்கின்றான். (௯0)

கொடியவர்யாவருங்குலங்கள்வேர்அற
கொடிகுவென்யான்அதுநுவல்வதெங்கனம்
கடியவள்வயிற்றினில்பிறந்தகள்வனேன்
முடிகுவென்அருந்துயர்முடியஎன்னும்ஆல் (௬௧)

இரதம்ஒன்றூர்ந்துபார்இருளைநீக்கும்அவ்
வரதனில்ஒளிபெறவளர்ந்ததொல்குலம்
பரதன்என்றொருபழிபடைத்ததென்னும்ஆல்
மரதகமலைஎனவளர்ந்ததோளினன். (௬௨)

வாடொடுதானையான்வானில்வைகிட
காடொருதலைமகன்எய்தக்கண்ணிலா
நாடொருதுயரிடைநைவதேஎனும்
தாடொடுதடக்கைஅத்தருமமேஅனான். (௬௩)

புலம்புறுகுரிசில்தன்புலர்வுநோக்கினள்
குலம்பொறைகற்பினைசுமந்தகோசலை
நிலம்பொறைஆற்றலன்நெஞ்சம்தூய்தெனா
சலம்பிறிதுறமனம்தளர்ந்துகூறுவாள். (௬௪)

மையறுமனத்தொருமாசுளான்அலன்
செய்யனேஎன்பதுதேரும்சிந்தையாள்
கய்கயர்கோமகள்இழைத்தகைதவம்
ஐயநீஅறிந்திலைபோலும்ஆல்என்றாள். (௬௫)

தாள்உறுகுரிசில்அத்தாய்சொல்கேட்டலும்
கோள்உறுமடங்கலிற்குமுறிவிம்முவான்
நாள்உறுநல்அறம்நடுங்காவினைல்
சூள்உறுகட்டுரைசொல்லல்மேயினன். (௬௬)

அறம்கெடமுயன்றவன்அருளில்நெஞ்சினன்
பிறன்கடைநின்றவன்பிறனைச்சீறினேன்
மறம்கொடுமன்உயிர்கொன்றுவாழ்ந்தவன்
துறந்தமாதவர்க்கருந்துயரம்சூழ்ந்துளோன். (௬௭)

குரவனைமகளிரைவாளிற்கொன்றுளோன்
புரவலன்உறுபொருள்புனைவில்வாரினேன்
விரவலர்வெரிநிடைவிழிக்கமீண்டுளோன்
இரவலர்அருநிதிஎறிந்துவெளவினேன். (௬௮)

தழைத்ததண்துளவினோன்தலைவன்அல்லன்என்
றழைத்தவன்அறநெறிஅந்தணாளரில்
பிழைத்தவன்பிழைப்பிலாமறையைப்பேணலா
திழைத்தவன்பொய்எனும்இழுதைநெஞ்சினோன். (௯௯)

தாய்பசிஉழந்துயிர்தளரத்தான்தனி
பாய்பெரும்பாழ்வயிறளிக்கும்பாவியும்
நாயகன்படநடந்தவனும்நண்ணும்அத்
தீயெரிநரகத்துக்கடிதுசெல்கயான். (௧00)

தாளினில்அடைந்தவர்தம்மைத்தற்கொரு
கோள்உறஅஞ்சினன்கொடுத்தபேதையும்
நாளினும்அறம்மறந்தவனும்நண்ணுறும்
மீள்அருநரகிடைக்கடிதுவீழ்கயான். (௧0௧)

பொய்க்கரிகூறினோன்போருக்கஞ்சினோன்
கைக்கொளும்அடைக்கலம்கரந்துவவ்வினோன்
எய்த்திடத்திடர்செய்தோன்என்றின்னோர்புகும்
மெய்க்கொடுநரகிடைவிரைவின்வீழ்கயான். (௧0௨)

அந்தணர்உறையுளைஅனலிலூட்டினோன்
மைந்தரைக்கொன்றுளோன்வழக்கிற்பொய்த்துளோன்
மிந்தனைதேவரையிகழ்ந்தினோன்புகும்
வெந்துயர்நரகத்துவீழ்கயானுமே. (௧0௩)

கன்றுயிர்ஓய்ந்துகக்கறந்துபால்உண்டோன்
மன்றிடைப்பிறர்பொருள்மறைத்துவவ்வினோன்
நன்றியைமறந்திடும்நயம்இல்நாவினோன்
என்றிவர்உறுநரகென்னதாகவே. (௧0௪)

ஆறுதன்உடன்வரும்அஞ்சொல்மாதரை
ஊறுகொண்டலைக்கத்தன்உயிர்கொண்டேகினோன்
சோறுதன்அயலுளோர்பசிக்கத்துய்த்துளோன்
ஏறும்அக்கதியிடையானும்ஏறவே. (௧0௫)

எஃகெறிசெருமுகத்தேற்றதெவ்வருக்
கொஃகினன்உயிர்வளர்த்துண்ணும்ஆசையான்
அஃகலில்அறநெறிஆக்கியோன்பொருள்
வெஃகியமன்னன்வீழ்நரகின்வீழ்கயான். (௧0௬)

அழிவருஅரசியல்எய்தி.ஆகும்என்
யிழிவருசிறுதொழில்இயற்றிஆண்டதின்
வழிவருதருமத்தைமறந்துமற்றொரு
பழிவருநெறிபடர்பதகன்ஆகயான். (௧௦௭)

தஞ்செனஒதுங்கினர்தனதுபாருளோர்
எஞ்சலில்மறுக்கினேடிரியல்போயுற
வஞ்சிசென்றிறுத்தவன்வாகைமீக்கொள
அஞ்சினமன்னவன்ஆகயானுமே. (௧௦௮)

கன்னியைஅழிசெயக்கருதினேன்குருப்
பன்னியைநோக்கினேன்பருகினேன்நறை
பொன்இகழ்களவினில்பொருந்தினேன்என
இன்னவர்உறுகதிஎன்னதாகவே. (௧௦௯)

ஊண்நலஉண்வழிநாயின்உண்டவன்
ஆண்அலன்பெண்அலன்ஆர்கொல்ஆம்என
நாணலன்நரகம்உண்டென்னும்நல்உணா
பேணலன்பிறர்பழிபிதற்றிஆகயான். (௧௧௦)

மறுவில்தொல்குலங்களைமாசிட்டேற்றினேன்
சிறுவிலைஎளியவர்உணவுசிந்தினேன்
நறியனஅயலவர்நாவில்நீர்வர
உறுபதம்நுங்கியஒருவன்ஆகயான். (௧௧௧)

வில்லினும்வாளினும்விரிந்தஆண்தொழில்
புல்லிடைஉகுத்தனென்பொய்மையாக்கையைச்
சில்பகல்ஓம்புவான்செறுநர்சீறிய
இல்லிடைஇடுபதம்ஏற்கஎன்கையால். (௧௧௨)

ஏற்றவர்க்கொருபொருள்உள்ளதின்றென்று
மாற்றலன்உதவலன்வரம்பில்பல்பகல்
ஆற்றினன்உழற்றும்ஓர்ஆதன்எய்தும்அக்
கூற்றுறுநரகின்ஓர்கூறுகொள்கயான். (௧௧௩)

பிணிக்குறுமுடைஉடல்பேணிப்பேணலார்த்
துணிக்குறுவயிரவாள்தடக்கைதூக்கிப்போய்
மணிக்குறுநகைஇளமங்கைமார்கள்முன்
தணிக்குறுபகைஞராத்தாழ்கஎன்தலை. (௧௧௪)

கரும்பலர்செந்நெல்அம்கழனிக்கானநா
டரும்பகைகவர்ந்தணஆவிபேணினேன்
இரும்பலர்நெடுந்தனிஈர்த்தகாலொடும்
விரும்பலர்முகத்தெதிர்விழித்துநிற்கயான். (௧௧௫)

(வேறு.) தூயவாசகம்சொன்னதோன்றலை
நேயகானகம்திருவின்நீங்கிமுன்
போயினான்வரக்கண்டபொம்மலாள்
ஆயகாதலால்அழுதுபுல்லினாள். (௧௧௬)

செம்மைநன்மனத்தண்ணல்செய்கையும்
அம்மைநிமையும்அறிதல்தேற்றினாள்
கொம்மைவெம்முலைகுழறுபால்உக
விம்மல்விம்மநின்றழுதுவிங்கினாள். (௧௧௭)

முன்னைநுங்குலமுதல்உளோர்கள்தாம்
பின்னையாவரோநிகர்க்கும்நீர்மையார்
மன்னர்மன்னவாஎன்றுவாழ்த்தினாள்
உன்னஉன்னநைந்துருகிவிம்முவாள். (௧௧௮)

உன்னஉன்னநைந்துருகிஅன்புகூர்
அன்னைதாளில்வீழ்ந்திளையஅண்ணலும்
சொன்னநீர்மையால்தொழுதுமாழ்கினான்
இன்னவேலைவாய்முனிவன்எய்தினான். (௧௧௯)

வந்தமாதவன்தாளில்வள்ளல்வீழ்ந்
தெந்தையாண்டையான்இயம்புவீர்எனு
நொந்துமாழ்கினான்நுவல்வதோர்கிலா
அந்தமாதவன்அழுதுபுல்லினான். (௧௨0)

மறுவில்மைந்தனேவள்ளல்உந்தையார்
இறுதிஎய்தினாள்எழ்இரண்டின
சிறுவர்செய்கடன்செய்துதீர்த்தினன்
அறுவல்மேயினான்உணாயின்மேயினான். (௧௨௧)

அன்னவினைள்அடிஇறைஞ்சினான்
பொன்னின்வார்சடைப்புனிதனேடும்போய்
தன்னைநல்கிஅத்தருமம்நல்கினான்
பன்னுதொல்அறப்படிவம்நோக்கினான். (௧௨௨)

மண்ணின்மேல்விழுந்தலறிமாழ்குவான்
அண்ணல்ஆழியான் அவனிகாவலான்
என்னெய்உண்டபொன்எழில்கொள்மேனியை
கண்ணநீரினுற்கழுவிஆட்டினுன். (௧௨௩)

பற்றிஅவ்வையின்பரிவின்வாங்கினர்
சுற்றும்நான்மறைத்துறைசெய்கேள்வியார்
கொற்றமன்கணைகுமுறமன்னனை
மற்ருேர்பொன்னின்மாமானம்ஏற்றினர். (௧௨௪)

கணைசெய்வேலைபோல்நகரிகைஎடுத்
துணைசெய்பூசலிட்டுயிர்துளக்குற
அணைசவேலைசூழ்ந்தழுதுகைதொழ
புணைசைஆனையிற்கொண்டுபோயினர். (௧௨௫)

சங்குபேரியும்தழுவுசின்னமும்
எங்கும்எங்கும்நின்றிரங்கிஏங்குவ
மங்குல்தோய்நகர்மகளிர்ஆம்என
பொங்குகண்புடைத்தழுவபோன்றவே. (௧௨௬)

மாவும்யானையும்வயங்குதேர்களும்
கோவும்நான்மறைக்குழுவும்முன்செல
தேவிமாரொடும்கொண்டுதெண்டிரை
தாவுவார்புனற்சரயுஎய்தினர். (௧௨௭)

எய்தினுலுளோர்மொழிந்தயாவையும்
செய்துதீக்கலம்திருத்திச்செல்வனை
வெய்தின்ஏற்றினர்வீரநுந்தைபால்
பொய்இல்மாக்கடன்கழித்திபோந்தென்ருர். (௧௨௮)

என்னும்வேலையில்எழுந்தவீரனை
அன்னதீமையால்அரசன்பின்னையும்
துன்னுதுன்பத்தால்துறந்துபோயினுன்
முன்னரேஎனமுனிவன்கூறினுன். (௧௨௯)

துறந்துபோயினுன்எனவேதோன்றல்நீ
பிறந்துபேர்அறம்பிழைத்ததென்றல்போல்
இறந்துபோயினுன்இருந்ததாண்டது
மறந்துவேறுருமைந்தன்ஆம்கொல்ஆம். (௧௩௦)

இடிக்கண்வாள்அராஇடைவதாம்என
படிக்கண்வீழ்ந்தகம்பதைக்கும்நெஞ்சினன்
தடுக்கல்ஆகலாத்துயரம்தன்உளே
துடிக்கவிம்மிநின்றழுதுசொல்லுவான். (௧௩௧)

உரைசெய்மன்னன்மற்றுன்னில்என்னில்யார்
இரவிதன்குலத்தெந்தைமுந்தையோர்
பிரதபூசனைக்குரியபேறிலேன்
அரைசுசெய்யவோஆவதாயினேன். (௧௩௨)

பூவில்நான்முகன்புதல்வன்ஆகிஆம்
தாவில்மன்னர்தம்தருமநீதியால்
தேவர்ஆயினோர்சிறுவன்ஆகியே
ஆவநான்பிறந்தவத்தன்ஆனவா. (௧௩௩)

துன்றுதாள்வளம்சுமந்ததாழையில்
பன்னுவான்குலப்பதடிஆயினேன்
என்னைஎன்னையேஈன்றுகாத்தஎன்
அன்னையார்எனக்கழகுசெய்தவா. (௧௩௪)

என்றுகூறிநொந்திடரின்மூழ்கும்அத்
துன்றுதாரவற்கிளையதோன்றலால்
அன்றுநேர்கடன்அமைவதாக்கினன்
நின்றுநான்மறைநெறிசெய்நீர்மையான். (௧௩௫)

இழையும்ஆரமும்இடையும்மின்னிட
குழையும்மாமலர்க்கொம்பனார்கள்தாம்
தழைஇல்முண்டகம்தழுவகானிடை
முழையில்மஞ்ஞைபோல்எரியில்மூழ்கினர். (௧௩௬)

அங்கிநீரினும்குளிரஅம்புய
திங்கள்வாண்முகம்திருவிளங்குற
சங்கைதீர்ந்துதம்கணவர்பின்செலும்
நங்கைமார்புகும்உலகம்நண்ணினர். (௧௩௭)

அனையசெய்கையால்அரசர்கோமகற்
கினையதன்மையால்இயைவசெய்துபின்
மனையின்எய்தினன்மரபின்வாழ்வினை
வினையின்எய்தும்ஓர்பிணியித்வேலையான். (௧௩௮)

ஐந்தும்ஐந்தும்நாள்ஊழிஆம்என
மைந்தன்வெந்துயர்க்கடலின்வைகினன்
தந்தைதன்வயிற்றருமம்யாவையும்
முந்துநாலுளோர்முறையின்முற்றினன். (௧௩௯)

முற்றும்முற்றுவித்துதவிமும்மைநூல்
சுற்றம்யாவையும்தொடரத்தோன்றினன்
வெற்றிமாதவன்வினைமுடித்தவன்
கொற்றவேல்நெடுங்குமரற்கூடினன். (௧௪௦)

மன்னர்இன்றியேவையம்வைகல்தான்
தொன்மைஅன்றெனத்துணியும்நெஞ்சினர்
அன்னமாநிலத்தறிஞர்தம்மொடும்
முன்னைமந்திரக்கிழவர்முந்தினர். (௧௪௧)

௬-வது. பள்ளிஅடைப்படலம் முற்றும். ஆ திருவிருத்தம்- ௧௩௫.

கம்பநாட்டாழ்வார்திருவடிகளேசரணம்.

## ௭-வது. ஆற்றுப்படலம்.

வரன்முறைதெரிந்துணர்மறையின்மாதவத்
தருமறைமுனிவனும்ஆண்டையான்என
விரைவின்வந்தீண்டினர்விரகின்எய்தினர்
பாதனைவணங்கினர்பரியும்நெஞ்சினர். (௧)

மந்திரக்கிழவரும்நகரமாந்தரும்
தந்திரத்தலைவரும்தரணிபாலரும்
அந்தரமுனிவரோட்டிஞர்யாவரும்
சுந்தரக்குரிசிலைமரபிற்சுற்றினர். (௨)

சுற்றினர்இருந்துழிசுமந்திரப்பெயர்
பொற்றடந்தேர்வலான்புலமைஉள்ளத்தான்
கொற்றவற்குறுபொருள்குறித்தகொள்கையான்
முற்றுணர்முனிவனைமுகத்துநோக்கினன். (௩)

நோக்கினல்சுமந்திரன்நுவலல்உற்றதை
வாக்கினல்அன்றியேஉணர்ந்தமாதவன்
காக்குதிஉலகுநின்கடனதாம்என
கோக்குமரனுக்கதுதெரியக்கூறுவான். (௪)

வேதியர்அருந்தவர்விருந்தர்வேந்தர்கள்
ஆதியர்நின்வயின்அடைந்தகாரியம்
நீதியும்தருமமும்நிறுவநீஇது
கோதறுகுணத்தினாய்மனத்துட்கோடிஆல். (௫)

தருமம்என்றொருபொருள்தந்துநாட்டுதல்
அருமைஎன்பதுபெரிதரிதுஐயநீ
இருமையும்தருவதற்கையமின்றிது
தெருள்மனத்தார்செயும்செயலிதாகும்ஆல். (௬)

வள்உறுவயிரவாள்அரசில்வையகம்
நள்உறுகதிர்இலாப்பகலும்நாளொடும்
தெள்உறுமதிஇலாஇரவும்தேவுடன்
உள்உறைஉயிர்இலாஉடலும்ஒக்குமே. (௭)

தேவர்தம்உலகினும்தீமைசெய்துழல்
மாவலிஅவுணர்கள்வைகும்நாட்டினும்
ஏவெவைஉலகம்என்றிசைக்கும்அன்னவை
காவல்செய்தலைவனைஇன்மைகண்டிலம். (௮)

முறைதெரிந்தொருவகைமுடியநோக்குறின்
மறையவன்வகுத்தனமண்ணில்வானிடை
நிறைபெருந்தன்மையின்நிற்பசெல்வன
இறைகளைஇல்லனயாவைகாண்கிலம். (௯)

பூத்தநாள்மலர்அயன்ஆதிப்புண்ணியர்
ஏத்துவான்புகழினர்இன்றுகாறும்கூ
காத்தனர்பின்ஒருகளைகண்இன்மையால்
நீத்தநீர்உடைகலநீரதாகும்ஆல். (௰)

உந்தையோஇறந்தனன்உம்முன்நீத்தனன்
வந்தநும்அன்னைதன்வரத்தில்மைந்தநீ
அந்தம்இல்பேர்அரசளித்திஅன்னது
சிந்தனைஎமக்கெனத்தெரிந்துகூறினன். (௧௧)

தஞ்சம்இவ்உலகம்நீதாங்குவாய்என
செஞ்செவேமுனிவரன்செப்பக்கேட்டலும்
நஞ்சினைநுகர்எனநடுங்குவாரினும்
அஞ்சினன்அயர்ந்தனன்அருவிக்கண்ணினன். (௧௨)

நடுங்கினன்நாத்தடுமாறிநாட்டமும்
இடுங்கினன்மகளிரின்இரங்கும்நெஞ்சினன்
ஒடுங்கியஉயிரினன்உணர்வுரைதர
தொடங்கினன்அரசவைக்குள்ளம்சொல்லுவான். (௧௩)

மூன்றுலகினுக்கும்ஓர்முதல்வன்ஆய்முதல்
தோன்றினன்இருக்கயான்மகுடம்சூடுதல்
சான்றவர்உரைசெயத்தருமம்ஆதலால்
ஈன்றவள்செய்கையின்இழுக்குண்டாகுமோ. (௧௪)

அடைவருங்கொடுமைஎன்அன்னைசெய்கையை
நடைவருந்தன்மைநீர்நன்றிதென்றிரேல்
இடைவரும்காலம்ஈண்டிரண்டும்நீத்தது
கடைவரும்நெறிக்கலியின்ஆட்சியோ. (௧௫)

வேத்தவைஇருந்தநீர்விமலன்உந்தியில்
பூத்தவன்முதலியபுவியுள்தோன்றினர்
மூத்தவர்இருக்கவேமுறைமைபால்நிலம்
காத்தவர்உளர்எனிற்காட்டிக்காண்டிர்ஆல். (௧௬)

நன்னெறிஎன்னினும்நான்இந்நானில
இன்உயிர்ப்பொறைசுமந்திருந்துவாழ்கிலேன்
அன்னவன்தனைக்கொணர்ந்தலங்கல்மாமுடி
தொன்னெறிமுறைமையிற்சூட்டிக்காண்டிர்ஆல். (௧௭)

அன்றெனில்அவனொடும்அரியகானிடை
நின்றினிதிருந்தவம்நெறியின்ஆற்றுவென்
ஒன்றினிஉரைக்கில்என்உயிரைநீக்குவென்
என்றனன்என்றபோதிருந்தபேர்அவை. (௧௮)

ஆன்றபேர்அரசனும்இருப்பஐயனும்
ஏன்றனன்மணிமுடிஏந்தல்வேந்தநீ
வான்றொடர்திருவினைமறுத்திமன்இளந்
தோன்றல்கள்யாருளர்நின்னிற்றோன்றினர். (௧௯)

ஆழியைஉருட்டியும்அறங்கள்போற்றியும்
வேள்வியைஇயற்றியும்வளர்க்கவேண்டுமோ
எழினோடேழ்எனும்உலகும்எஞ்சினும்
வாழியநின்புகழ்என்றுவாழ்த்தினர். (௨0)

குரிசிலும்தம்பியைக்கூவிக்கொண்டபின்
முரசறைந்திந்நகர்முறைமைவேந்தனை
தருதும்ஈண்டென்பதுசாற்றித்தானையை
விரைவினில்எழுகெனவிளம்புவாய்என்றான். (உக)

நல்லவன்உரைசெயநம்பிகூறலும்
அல்லலின்அழுங்கியஅன்பின்மாநகர்
ஒல்லெனஇரைத்ததால்உயிர்இல்யாக்கையை
சொல்எனும்அமிர்தினால்துளித்ததென்னவே. (உஉ)

அவித்தஐம்புலத்தவர்ஆதிஆய்உள
புவித்தலைஉயிர்எலாம்இராமன்பொன்முடி.
கவிக்கும்என்றுரைக்கவேகளித்ததால்அது
செவிப்புலம்நுகர்வதோர்தெய்வத்தேன்கொல்ஆம். (உங)

படிமுரசறைந்தனர்பரதன்தம்முனைக்
கொடிநகர்தரும்அவற்கொணரச்சேனையை
முடுகுகஎன்றசொல்மூரிமாநகர்
உடுபதிவேலையின்உதயம்போன்றதே. (உச)

எழுந்ததுபெரும்படைஎழுவேலையின்
மொழிந்தபேர்வழியின்முழங்கிமுந்தெழ
அழிந்ததுகேகயன்மடந்தைஆசைபோய்க்
கழிந்ததுதுயர்நெடுங்காதல்தூண்டவே. (உரு)

பண்ணினபகடுதேர்புரவிபண்டியும்
மண்ணினைமறைத்தனவளர்ந்தமாக்கொடி
விண்ணினைமறைத்தனவிரிந்தமாத்துகள்
கண்ணினைமறைத்தனகமலத்தோனையே. (உசா)

ஈசன்இவ்வுலகினைஅழிக்கும்நாள்எழும்
ஓசையில்நிமிர்த்துளதொல்லென்பேர்ஒலி
காசைஇல்கரியவர்காணமூண்டெழும்
ஆசையில்நிமிர்ந்ததவ்அனிகராசியே. (உஎ)

மடியொடுதிருநகர்துறந்துபல்மரம்
செடியொடுகொடுவனம்நோக்கிச்சீதைஆம்
கொடியொடுநடந்தஅக்கொண்டல்ஆம்என
பிடியொடுநடந்தனபெருங்கைவேழமே. (உஅ)

சேற்றிளமரைமலர்சிறந்தஆம்என
காற்றளம்பொலிதருகன்னிமாரொடும்
ஏற்றிளம்பிடிக்குலம்இகலில்இன்நடை
தோற்றிளமகளிரைச்சுமப்பபோன்றவே. (௨௯)

வேதனைவெயிற்கதிர்தணிக்கமென்மழைச்
சீதநீர்கொடுநெடுங்கொடியும்சென்றன
கோதைவெஞ்சிலையவன்கோலம்காண்கிலா
மாதரின்நுடங்குவவரம்பில்கோடியே. (௩0)

வெண்மதிமீச்செலமேகம்ஊர்ந்தென
அண்ணல்வெங்கதிரவன்அளவில்மூர்த்தி.ஆய்
மண்ணிடைஇழிந்தொருவழிக்கொண்டால்என
எண்அருமன்னவர்களிற்றின்ஏகினார். (௩௧)

தேர்மிசைசென்றதோர்சிந்துசெம்முகக்
கார்மிசைக்கழிந்ததார்கலிஞர்கார்க்கடல்
ஏர்மிசைஇவுளிமேல்ஏகிற்றெங்கணும்
பார்மிசைப்படர்ந்ததுபதாதிப்பௌவமே. (௩௨)

தாரையும்சங்கமும்தாளம்கொம்பொடு
வார்மிசைப்பம்பையும்துடியும்மற்றவும்
பேரியும்இயம்பலசென்றபேதமைப்
பூரியர்குழாத்திடைஅறிஞர்போலவே. (௩௩)

தாவருநாள்முதல்அணியலால்தகை
மேவரும்கலங்களைவெறுத்தமேனியர்
தேவரும்மருள்கொளத்தெரியும்காட்சியர்
பூவுதிர்கொம்பெனமகளிர்போயினார். (௩௪)

அதிர்கடல்வையகம்அனைத்தும்காத்தவன்
விதிவரும்தனிக்குடைமீதிலாப்படை
பொதிபலகவிகைமீன்பூத்ததாகிலும்
கதிர்மதிநீங்கியகங்குல்போன்றதே. (௩௫)

செல்லியசெலவினாற்சிறியதிக்கென
சொல்லியசேனையைச்சுமந்ததேஎனில்
ஒல்லியல்வேலைநீர்உடுத்தபாரைஓர்
மெல்லியல்என்றவர்மெலியரோகொல்.ஆம். (௩௬)

தங்குசெஞ்சாந்தில்கலவைசார்கில
குங்குமம்கொட்டிலகோவைமுத்தில
பொங்கிளங்கொங்கைகள்புதுமைவேறில
தெங்கிளநீரெனத்தெரிந்தகாட்சியே. (௩௭)

இன்துணையவர்முலைஎழுதுசாந்தினும்
மன்றல்அம்தாரினும்மறைந்திலாமையால்
துன்றிளங்கொடிமுதல்தூசுநீங்கிய
குன்றெனப்பொலிந்தனகுவவுத்தோள்களே. (௩௮)

நறையறுகோதையர்நாட்செய்கோலத்தின்
துறைஅறஅஞ்சனம்துறந்தநாட்டங்கள்
குறைஅறநிகர்த்தனகொற்றம்முற்றுவான்
கறைஅறக்கழுவியகாலவேலையே. (௩௯)

விரிமணிமேகலைவிரவிஆர்க்கில
தெரிவையர்அல்குல்தார்ஒலிஇல்தேர்என
பரிபுரம்ஆர்க்கிலாப்பவளச்சீறடி
அரிஇனம்ஆர்க்கிலாக்கமலம்அன்னவே. (௪0)

நல்கியகேகயன்மடந்தைவாசகம்
கல்லியதரிவையர்நடுவிற்கேகொல்ஆம்
புல்லியமலர்வடம்பூண்கிலாமையால்
ஒல்கியஒருவகைபொறைஉயிர்க்கவே. (௪௧)

கோமகன்பிரிதலில்கோலம்நீத்துள
தாமரைச்செல்வியும்தவத்தைமேவினள்
காமனும்அருந்துயர்க்கடலின்மூழ்கினன்
ஆமெனநிகழ்ந்ததவ்அளவில்சேனையே. (௪௨)

மண்ணையும்வானையும்வயங்குதிக்கையும்
உண்ணியநிமிர்கடல்ஒக்கும்என்பதென்
கண்ணினும்மனத்தினும்கமலத்தண்ணல்தன்
எண்ணினும்நெடிதவண்எழுந்தசேனையே. (௪௩)

அலைநெடும்புனல்அறக்குடித்தலால்அகம்
நிலைபெறநிலைநெறிநிறுத்தலால்நெடு
மலைகளைமண்உறஅழுத்தலால்தமிழ்த்
தலைவனைஒத்ததத்தயங்குதானையே. (௪௪)

அயிரும்சிறிரும்ஆதி அந்தமா
செயிபெருந்தானையும்திருவும்நீங்கலால்
குயவன்புனல்எலாம்வயிற்றிற்கொண்டநாள்
மறிகடல்ஒத்ததவ் அயோத்திமாநகர். (௪௫)

பெருந்திரைநதிகளும்வயலும்பெட்புறு
மரங்களும்மலைகளும்மண்ணும்கண்ணுறத்
திருந்தல்இல் அயோத்திஆம்தெய்வமாநகர்
அருந்தெருஒத்ததப்படைசெல்ஆறரோ. (௪௬)

தார்கடாம்கோதைதாம்தாமந்தாம்தகை
ஏர்கடாம்கலவைதாம்கமழ்ந்தின்றென்பரால்
கார்கடாம்எனமிகக்கடுத்தகைம்மலை
வார்கடாம் அல்லதம்மன்னன்சேனையே. (௪௭)

ஆள்உலாம்கடலினும் அகன்ற அக்கடல்
தோள்உலாம்குண்டலம்முதலதொல் அணி
கேள்உலாம்மின் ஒளிகிளர்ந்ததில்லைஆல்
வாள்உலாம்நுதலியர்மருங்குல்போலவே. (௪௮)

மத்தளம்முதலியவயங்குபல்இயம்
ஒத்தனசேறலில்உரை இலாமையில்
சித்திரச்சுவர்நெடுஞ்சேனைதீட்டிய
பத்தியைநிகர்த்ததப்படையின்ஈட்டமே. (௪௯)

ஏடறுகோதையர்விழியின்எய்தகோல்
ஊடுறஉரம்தொளைத்துயிர்உணுவகை
ஆடவர்க்கரும்பெருங்கவசம் ஆயது
காடுறைவாழ்க்கை அக்கண்ணன்நண்ணவே. (௫0)

கனங்குழைக்கைகயன்மகளிற்கண்ணிய
சினங்கிடந்தெரிதலில்தீய்ந்தவேகொல்ஆம்
அனங்கன்ஐங்கொடுங்கணைகடந்த ஆடவர்
மனங்கிடந்துண்கிலமகளிர்கொங்கையே. (௫௧)

இன்னணம்நெடும்படைஏகஏந்தலும்
தன்னுடைநெடு அனைச்சினைசாத்தினன்
பின்னிளையவனொடும்பிறந்ததுன்பொடும்
நன்னெடுந்தேர்மிசைநடத்தல்மேயினன். (௫௨)

தாயரும்அருந்தவத்தவருந்தந்தையின்
ஆயமந்திரியரும்அளவில்சுற்றமும்
தூயஅந்தணர்களும்தொடர்ந்துசூழ்வர
போயினன்திருநகர்ப்புரிசைவாயிலே. (ருடு)

மந்தரைக்கூற்றமும்வழிச்செல்வாரொடும்
உந்தியேபோதல்கண்டிளவல்ஓடிஆர்த்
தந்தரத்தெற்றுவான் அழன்றுபற்றலும்
சுந்தரத்தோளவன்விலக்கிச்சொல்லுவான். (ருசு)

முன்னையர்முறைகெடமுடித்தபாவியை
சின்னபின்னஞ்செய்தென்சினத்தைத்தீர்வெனேல்
என்னைஇன்றென்ஐயன்துறக்கும்என்றலால்
அன்னைஎன்றுணர்ந்திலென்அய்யநான்என்றான். (ருரு)

ஆகலால்முனியும்என்றய்யன்அந்தமில்
வேதனைக்கூனியைவெகுண்டும்என்னினும்
கோதிலாஅருமறைகுலவும்நூல்வலாய்
போதும்நாம்என்றுகொண்டரிதிற்போயினன். (ருசு)

மொய்பெருஞ்சேனையும்முரிமாக்களும்
கய்பரந்தயல்ஒருகடலிற்சுற்றிட
அய்யனும்தேவியும்இளையஆளியும்
வய்கியசோலையில்தானும்வைகினன். (ருஎ)

அல்லணைநெடுங்கண்நீர்அருவிஆடினன்
கல்லணைகிழங்கொடுகனியும்உண்டிலன்
வில்லணைத்துயர்ந்ததோள்வீரன்வைகிய
புல்லணைமருங்கில்தான்பொடியின்வைகினன். (ருஅ)

ஆண்டுநின்றுண்டகைஅடியின்ஏகினன்
ஈண்டியநெறிஎனத்தானும்ஏகினன்
தூண்டுதேர்களும்துரகராசியும்
காண்டகுகரிகளும்தொடரக்காலினே. (ருகூ)

௰௨௲. ஆற்றுப்படலம் முற்றும். ஆ திருவிருத்தம்- ௬௬௪.

---

கம்பநாட்டாழ்வார்திருவடிகளேசரணம்.

பூவிரிபொலன்கழல்புனைவில்தானையான்
காவிரிநாடன்னகழனிநாடொரீஇ
தாவரசங்கமம்என்னும்தன்மைய
யாவையும்இரங்கிடக்கங்கைஎய்தினன். (௧)

எண்ணருஞ்சுரும்புதம்இனத்துக்கல்லது
கண்ணகன்பெரும்புனற்கங்கைஎங்கணும்
அண்ணல்வெங்கரிமதத்தருவிபாய்தலால்
உண்ணவுங்குடையவும்உரித்தன்றாயதே. (௨)

அடிமிசைத்தூளிபுக்கடைந்ததேவர்தம்
முடிஉறப்புலர்ந்ததோர்முறைமைதேர்ந்திலென்
நெடிதுயிர்த்துண்டவும்நீந்தநின்றவும்
பொடிமிசைப்புரண்டவும்புரவிஈட்டமே. (௩)

பாலையேய்நிறத்தொபெண்டுதான்படர்
ஓலையேய்நெடுங்கடல்ஓடிற்றில்லைஆல்
மாலையேய்நெடுமுடிமன்னன்சேனைஆம்
வேலையேமடுத்ததக்கங்கைவெள்ளமே. (௪)

கான்றலைநண்ணியகாளைபின்படர்
தோன்றலைஅவ்வழிதொடர்ந்துசென்றன
ஆன்றவர்உணர்த்தியஅக்குரோணிகள்
மூன்றுபத்தாயிரத்திரட்டிமுற்றுமே. (௫)

அப்படைகங்கையைஅடைந்தஆயிடை
துப்புடைக்கடலின்நீர்சுமந்தமேகத்தை
ஒப்புடைஅண்ணலோடெற்றவேகொல்ஆம்
இப்படைஎடுத்ததென்றெடுத்தசீற்றத்தான். (௬)

குகன்எனப்பெயரியகூற்றின்ஆற்றலான்
தொகைமுரட்சேனையைத்துகளின்நோக்குவான்
நகைமிகக்கண்கள்தீநாறநாசியில்
புகைஉறக்குனிப்புறும்புருவப்போர்விலான். (௭)

மைஉறஉயிர்எலாம்இறுதிவாங்குவான்
கைஉறுகவர்அயில்பிடித்தகாலன்தான்
ஐஐநூறாயிரம்உருவம்ஆயின
மெய்உறுதானையான்வில்லின்கல்வியான். (௮)

கட்டியஅரிகையன்கடித்தவாயினன்
வெட்டியமொழியினன்விழிக்குந்தீயினன்
கொட்டியதுடியினன்குறிக்கும்கொம்பினன்
கிட்டியதமர்எனக்கிளர்ந்ததோளினான். (௯)

எலிஎலாம்இப்படைஅரவம்யான்என
ஒலிஉலாம்சேனையைஉவந்துகூயினான்
வலிஉலாம்உலகினில்வாழும்வள்உயிர்ப்
புலிஎலாம்ஒருவழிபுகுந்தபோலவே. (௧௦)

மருங்கடைதென்கரைவந்துதோன்றினான்
ஒருங்கடைநெடும்படைஒல்என்ஆர்ப்பினோ
டருங்கடையுகந்தனில்அசனிமாமழை
கருங்கடல்கிளர்ந்தெனக்கலந்துசூழவே. (௧௧)

தோன்றினபுளினைநோக்கிச்சூழ்ச்சியின்
ஊன்றியசேனையைஉம்பர்எற்றுதற்
கேன்றனென்என்உயிர்த்துணைவற்கிகுவான்
ஆன்றபேர்அரசுளீர்அமைதிர்ஆம்என்றான். (௧௨)

துடிஎறிநெறிகளும்துறையும்சுற்றுற
ஒடியெறிஅம்பிகள்யாதும்ஓட்டலிர்
கடிஎறிகங்கையின்கரைவந்தோர்களைப்
பிடிஎறிபடஎனப்பெயர்த்தும்கூறுவான். (௧௩)

(வேறு.) அஞ்சனவண்ணன்என்ஆர்உயிர்நாயகன்ஆளாமே
வஞ்சனையால்அரசெய்தியமன்னரும்வந்தாரோ
செஞ்சரம்என்பனதீஉமிழ்கின்றனசெல்லாவோ
உஞ்சிவர்போய்விடில்நாய்குகன்என்றெனைஓதாரோ. (௧௪)

ஆழநெடும்புனல்கங்கைகடந்திவர்போவாரோ
வேழநெடும்படைகண்டுவிலங்கிடும்வில்லாளோ
தோழமைஎன்றவர்சொல்லியசொல்ஒருசொல்அன்றோ
ஏழமைவேடன்இறந்திலன்என்றெனைஏசாரோ. (௧௫)

முன்னவன்என்றுநினைந்திலன்மொய்புலிஅன்னான்ஓர்
பின்னவன்நின்றனன்என்றிலன்அன்னவைபேசானேல்
என்இவன்என்னைஇகழ்ந்ததிவ்எல்லைகடந்தன்றோ
மன்னவர்நெஞ்சினில்வேடர்விடும்சரம்வாயாவோ. (௧௬)

பாவமும்நின்றபெரும்பழியும்பகைஞும்போகும்
ஏவமும்என்பவைமன்னுலகாள்பவர்என்னரோ
ஆவதுபோகஎன் ஆர்உயிர்த்தோழமைதந்தான்மேல்
போவதுசேனையும்ஆர்உயிரும்கொடுபோய்அன்றோ. (௧௭)

அருந்தவம்என் துணைஆளஇவன்புவிஆள்வானே
மருந்தெனின் அன்றுயிர்வண்புகழ்கொண்டுபின்மாயேனே
பொருந்தியகேண்மைஉகந்தவர்தம்மொடுபோகாதே
இருந்ததுநன்றுகழிக்குவென்என்கடன்இன்றேயே. (௧௮)

தும்பியும்மாவும்மிடைந்தபெரும்படைசூழ்வாரும்
வம்பியல்தார்இவர்வாள்வலிகங்கைகடந்தன்றோ
வெம்பியவேடர்உளிர்துறைஓடம்விலக்கீரோ
நம்பிமுன்னேஇனிநம்உயிர்மாய்வதுநன்றன்றோ. (௧௯)

போனபடைத்தலைவீரர்தமக்கிரைபோதாஇச்
சேனைகிடக்கிடுதேவர்வரிற்சிலைமாமேகம்
சோனைபடக்குடர்சூறைபடச்சுடர்வாளோடும்
தானைபடத்தனியானைபடத்திரள்சாயேனே. (௨0)

நின்றகொடைக்கைஎன் அன்பன் உடுக்கநெடுஞ்சீரை
அன்றுகொடுத்தவள்மைந்தர்பலத்தைஎன் அம்பாலே
கொன்றுகுவித்தநிணம்கொள்பிணக்குவைகொண்டோடி.
துன்றுதிரைக்கடல்கங்கைமடுத்திடைதூராதோ. (௨௧)

ஆடுகொடிப்படைசாடிஅறத்தவரேஆள
வேடுகொடுத்ததுபார்எனும்இப்புகழ்மேவீரோ
நாடுகொடுத்தஎன்நாயகனுக்கிவர்நாம்ஆளும்
காடுகொடுக்கிலர்ஆகிஎடுத்ததுகாணீரோ. (௨௨)

மாமுனிவர்க்குறவாகிவனத்திடையேவாழும்
கோமுனியத்தகும்என்றுமனத்திறைகொள்ளாதே
ஏழுனைஉற்றிடில்ஏழுகடற்படைஎன்றாலும்
ஆமுனையிற்சிறுகூழ்எனஇப்பொழுதாகாதோ. (௨௩)

என்பனசொல்லிஇரும்பனமேனியர்ஏனோர்முன்
வன்பணைவில்லினன்மல்உயர்தோளினன்வாள்வீரற்
கன்பனும்நின்றனன்நின்றதுகண்டரிஏறன்ன
முன்பனில்வந்துமொழிந்தனன்மூரியதேர்வல்லான். (௨௪)

(வேறு.) கங்கைஇருகரைஉடையான்கணக்கிறந்தநாவாயான்
உங்கள்குலத்தனிநாதற்குயிர்த்துணைவன்உயர்தோளான்
வெங்கரியினேறனையான்விற்பிடித்தவேலையினான்
கொங்கலரும்நறுந்தண்டார்க்குகன்என்னும்குறிஉடையான். (௨௫)

கற்காணும்திண்மையான்கரைகாணாக்காதலான்
அற்காணிற்கண்டனையஅழகமைந்தமேனியான்
மற்காணும்திருநெடுந்தோள்மழைகாணும்மணிநிறத்தாய்
நிற்காணும்உள்ளத்தான்நெறிஎதிர்நின்றனன்என்றான். (௨௬)

தன்முன்னேஅவன்தன்மைதன்துணைவன்முந்துரைத்த
சொன்முன்னேஉவக்கின்றதுருசிலாத்திருமனத்தான்
மன்முன்னேதழீக்கொண்டமனக்கினியதுணைவனேல்
என்முன்னேஅவற்காண்பென்யானேசென்றெனஎழுந்தான். (௨௭)

என்றெழுந்ததம்பியொடும்எழுகின்றகாதலொடும்
குன்றெழுந்துசென்றதெனக்குளிர்கங்கைகரைகுறுகி
நின்றவனைநோக்கினன்திருமேனிநிலைஉணர்ந்தான்
துன்றுகருநறுங்குஞ்சிஎயினர்கோன்துண்ணென்றான். (௨௮)

வற்கலையின்உடையானைமாசடைந்தமெய்யானை
நற்கலைஇல்மதிஎன்னநகைஇழந்தமுகத்தானை
கற்கனியக்கனிகின்றதுயரானைக்கண்ணுற்றான்
விற்கையினின்றிடைவீழவிம்முற்றுநின்றொழிந்தான். (௨௯)

தம்பியும்என்நாயகனைஒக்கின்றான்அயல்நின்றான்
தம்பியையும்ஓர்கின்றான்தவவேடம்தலைநின்றான்
துன்பம்ஒருமுடிவில்லைதிசைநோக்கித்தொழுகின்றான்
எம்பெருமான்பின்பிறந்தார்இழைப்பரோபிழைப்பென்றான். (௩௰)

உண்டிடுக்கண்ஒன்றுடையான்உலையாதஅன்புடையான்
கொண்டதவவேடமேகொண்டிருந்தான்குறிப்பெல்லாம்
கண்டுணர்ந்துபெயர்கின்றேன்காமின்கள்நெறிஎன்று
தண்டுறைஓர்நாவாயில்ஒருதனியேதான்வந்தான். (௩௧)

வந்தெதிரேதொழுதானைவணங்கினன்மலர்இருந்த
அந்தணனும்தனைவணங்கும்அவனும்அவன்அடிவீழ்ந்தான்
தந்தையினும்களிகூரத்தழுவினன்தகவுடையோர்
சிந்தையினும்சென்னியினும்வீற்றிருக்கும்சீர்த்தியான். (௩௨)

(வேறு.) தழுவினபுளினர்வேந்தன்தாமரைச்செங்கணானை
எழுவினும்உயர்ந்ததோளாய்எய்தியதென்னைஎன்ன
முழுதுலகளித்ததந்தைமுந்தையோர்முறையின்நின்றும்
வழுவினன்அதனைநீக்கமன்னனைக்கொணர்வான்என்றான். (௩௩)

கேட்டனன்கிராதர்வேந்தன்கிளர்ந்தெழும்உயிரன்ஆகி
மீட்டும்மண்ணதனில்வீழ்ந்தான்விம்மினன்உவகைவீங்க
நீட்டருமேனிமைந்தன்சேவடிக்கமலப்பூவில்
பூட்டியகையன்பொய்இல்உள்ளத்தன்புகலல்உற்றான். (௩௪)

தாய்உரைகொண்டுதாதைஉதவியதரணிதன்னை
தீய்வினைஎன்னநீத்துச்சிந்தனைமுகத்திற்றேக்கி
போயினைஎன்றபோழ்துபுகழினோய்தன்மைகண்டால்
ஆயிரம்இராமர்நின்கேள்ஆவரோதெரியில்அம்மா. (௩௫)

என்புகழ்கின்றதேழைஎயினனேன்இரவிஎன்பான்
தன்புகழ்க்கற்றைமற்றைஒளிகளைத்தவிர்க்குமாபோல்
மன்புகழ்பெருமைநுங்கள்மரபினோர்புகழ்கள்எல்லாம்
உன்புகழ்ஆக்கிக்கொண்டாய்உயர்குணத்துரவுத்தோளாய். (௩௬)

எனைஇவைஅன்னமாற்றம்இயைவனபலவும்கூறி
புனைகழற்புலவுவேற்கைப்புளிஞர்கோன்பொருவில்காதல்
அனையவற்கமைவிற்செய்தான்ஆர்அவற்கன்பிலாதார்
நினைவருங்குணம்கொடன்றோஇராமன்மேல்நிமிர்ந்தகாதல். (௩௭)

அவ்வழிஅவனைநோக்கிஅருள்தருவாரிஅன்ன
செவ்வழிஉள்ளத்தண்ணல்தென்றிசைசெங்கைகூப்பி
எவ்வழிஉறைந்தான்நம்முன்என்றலும்எயினர்வேந்தன்
இவ்வழிவீரயானேகாட்டுவல்எழுகஎன்றான. (௩௮)

கார்எனக்கடிதுசென்றான்கல்லிடைப்படுத்தபுல்லின்
வார்சிலைத்தடக்கைவள்ளல்வைகியபள்ளிகண்டான்
பார்மிசைப்பதைத்துவீழ்ந்தான்பருவரற்பரவைபுக்கான்
வார்மணிப்புனலால்மண்ணைமண்ணுநீராட்டும்கண்ணான். (௩௯)

இயன்றதென்பொருட்டினால்இவ்இடர்உனக்கென்றபோழ்தும்
அயின்றனைகிழங்கும்காயும்அமிர்தெனஅரியபுல்லில்
துயின்றனைஎனவும்ஆவிதுறந்திலென்சுடரும்காசு
குயின்றுயர்மகுடம்சூடும்செல்வமும்கொள்வெனயானே. (௪0)

தூண்டாவிவர்ந்ததோளான்பின்னரும்சொல்லுவான்அந்
நீண்டவன்துயின்றசூழல்இதுஎனில்நிமிர்ந்தநேயம்
பூண்டவன்தொடர்ந்துபின்னேபோந்தவன்பொழுதுநீத்த
தியாண்டெனஇனிதுகேட்டான்எயினர்கோன்இதனைச்சொன்னான்.

அல்லைஆண்டமைந்தமேனிஅழகனும்அவளும்துஞ்ச
வில்லைஊன்றியகையோடும்வெய்துயிர்ப்போடும்வீரன்
கல்லைஆண்டுயர்ந்ததோளாய்கண்கள்நீர்சொரியக்கங்குல்
எல்லைகாண்பளவும்நின்றான்இமைப்பிலன்நயனம்என்றான். (௪௨)

என்பத்தைக்கேட்டமைந்தன்இராமனுக்கிளையார்என்று
முன்பொத்ததோற்றத்தேயில்யான்என்றும்முடிவிலாத
துன்பத்துக்கேதுவானேன்அவன்அதுதுடைக்கின்றான்
அன்பத்துக்கெல்லைஉண்டோஅழகிதென்அடிமைஎன்றான். (௪௩)

அவ்விடைஅண்ணல்தானும்அன்றரும்பொடியின்வைகி
தெவ்விடைதரநின்றார்க்கும்செறிகழற்புளிஞர்கோமான்
இவ்விடைக்கங்கைஆற்றின்எற்றினைஆயின்எம்மை
வெவ்விடர்க்கடல்நின்றேற்றிவேந்தன்பால்விடுத்ததென்றான். (௪௪)

நன்றெனப்புளிஞர்வேந்தன்நண்ணினன்தமரைநாவாய்
சென்றுநீர்தருதிர்என்னவந்தனசிவன்சேர்வெள்ளிக்
குன்றெனக்குனிக்கும்அம்பொற்குவடெனக்குபேரன்மானம்
ஒன்றெனநாவிப்பல்வேறுருவுகொண்டனையஆன. (௪௫)

நங்கையர்நடையின்அன்னம்நாணுறுசெலவின்நாவாய்
கங்கையும்இடம்இலாமைமிடைந்தனகலந்தஎங்கும்
அங்கொடிங்கிழித்திஏற்றும்அமைதியின்அமரர்வையத்
திங்கொடங்கிழித்திஏற்றும்இருவினைஎன்னல்ஆன. (௪௬)

வந்தனவரம்பில்நாவாய்வரிசிலைக்குரிசில்மைந்த
சிந்தனையாவதென்றுசிருங்கிபேரியர்கோன்செப்ப
அந்தரவரிவிலானும்சுமந்திரன்தன்னைநோக்கி
எந்தைஇத்தானைதன்னைஏற்றுதிவிரைவின்என்றான். (௪௭)

குரிசிலதேவலால்அக்குரகதத்தேர்வலானும்
வரிசையின்வழாமைநோக்கிமரபுளிவங்கையின்ஏற்ற
கரிபரிஇரதம்காலாள்எனைத்துசனையில்வேலை
எரிமணிநிரையின்விசும்கங்கையாறேறிற்றன்றே. (௪௮)

இடிபடுமுழக்கம்பொங்கஇனமழைமாரினோ
முடிவுறமுகப்பவழிஇறுதியின்மொய்ப்பபோல
கொடியொடுவங்கம்வேலைகூம்பொடுபடர்வபோல
நெடியகைஎடுத்துநீட்டிநீந்தினநெடுங்கைவேழம். (௪௯)

சங்கமும்மகரமீனும்தரளமும்மணியும்தள்ளி
வங்கநீர்க்கடலும்வந்துதன்வழிப்படாமானப்
பொங்குவெங்களிறுநாக்கக்களாஞரிஇப்போயிற்றம்மா
கங்கையும்இராமற்காளும்காதலதென்னமாதோ. (௫0)

கொடிஞ்சொடுதட்டும்அச்சும்ஆழியும்கோத்தமொட்டும்
நெடுஞ்சுவர்கொடியும்யாவும்நெறிவருமுறையின்நீக்கி
விடுஞ்சுவற்புரவியோடும்வேறுவேறேற்றிச்சென்ற
மடிஞ்சபின்உடம்புகூட்டும்வினைஎனவயிரத்தேர்கள். (௫௧)

நால்இரண்டாயகோடிநவைஇல்நாவாய்கள்மீதா
சேல்திரண்டனையஆயகதியொடும்நதியிற்சென்ற
பால்திரண்டனையமெய்யபயம்திரண்டனையநெஞ்ச
கால்திரண்டனையகாலகடுநடைக்கலினப்பாய்மா. (௫௨)

ஊடுறநெருக்கிஓடத்தொருவர்முன்ஒருவர்கிட்டி
சூடகத்தளிர்க்கைமாதர்குழுமினர்துவன்றித்தோன்ற
பாடியல்களிநல்யானைப்பந்திஅம்கடையிற்குத்த
கோடுகள்மிடைந்தஎன்னமிடைந்தனகுவவுக்கொங்கை. (௫௩)

பாங்கின்உத்தரியம்மானப்படர்திரைதவழப்பாரின்
வீங்குநீர்அழுவம்தன்னுள்விழுமதக்கலுழிவெள்ளத்
தோங்கல்கள்தலைகள்தோன்றஒளித்தவண்உயர்ந்தகும்பம்
பூங்குழற்கங்கைநங்கைமுலைஎனப்பொலிந்தமாதோ. (௫௪)

பொலன்குழைமகளிர்நாவாய்போக்கின்ஒன்றொன்றுதாக்க
மலங்கினர்இரண்டுபாலும்மறுகினர்வெருவிநோக்க
அலங்குநீர்வெள்ளம்தள்ளிஅழிதரஅங்கும்இங்கும்
கலங்கலின்வெருவிப்பாயும்கயற்குலம்நிகர்த்தகண்கள். (௫௫)

இயல்வுறுசெலவின்நாவாய்இருகையும்எயினர்தூண்ட
துயல்வனதுடுப்புவீசும்துவலைகள்மகளிர்மென்தூ
சுயல்வுறுபரவைஅல்குல்ஒளிப்புறத்தளிர்ப்பஉள்ளத்
தயர்வுறுமதுகைமைந்தர்க்கயர்வுயிர்ப்பளித்ததம்மா. (௫௬)

இக்கரைஇரைத்தசேனைஎறிகடல்முகந்துஎஃகி
அக்கரைஅடையவீசிவறியனஅறுகும்நாவாய்
புக்கலைஆழிநன்னீர்பொருத்தனபோக்கிப்போக்கி
அக்கணத்துவரிமீளும்அகன்மழைநிகர்த்தஅம்மா. (௫௭)

அகிலிடுதூபம்அன்னஆய்மயிற்பீலிஆர்த்த
முருளிடுமுரண்மாத்தண்டுகூம்பெனமுகிலின்வண்ணத்
துகிலொடுகொடுத்தசெம்பொற்றகட்டிடைதொடுத்தமுத்தம்
நகுகொடிநெடியபாயின்நவ்வெனச்சென்றநாவாய். (௫௮)

ஆனனம்கமலத்தன்னமின்அன்னஅமிர்தச்செவ்வாய்த்
தேனனைகுழலார்ஏறும்அம்பிகள்சிந்துமுத்தம்
மீனெனவிரிந்தகங்கைவிண்எனபண்ணைமுற்றி
வானவர்மகளிர்ஊருமானமேநிகர்த்தமாதோ. (௫௯)

துளிபடத்துழாவுதின்கோல்த்துடுப்பிருகாலில்த்தோன்ற
களிர்புனல்கங்கைஆற்றின்நடந்தெனச்செல்லும்நாவாய்
களிஉடைமஞ்ஞைஅன்னகனங்குழைகயற்கண்மாதர்
ஒளிர்அடிக்கமலம்நீண்டஉயிர்படைத்தனவேஒத்த. (௬0)

மய்யறுவிசும்பில்மண்ணில்மற்றும்ஓர்உலகில்முற்றும்
மெய்வினைதவமேஅன்றிமேலும்ஒன்றுளதோகிழோர்
செய்வினைநாவாய்ஏறித்தீண்டலர்மனத்திற்செல்லும்
மொய்விசும்போடம்ஆகத்தேவரின்முனிவர்போனார். (௬௧)

(வேறு.) அறுபதினாயிரம்அக்குரோணிஎன்
றிறுதிசெய்சேனையும்எல்லைநீர்நகர்
மறுவறுமாக்களும்மகளிர்வெள்ளமும்
செறிதிரைக்கங்கைபின்கிடக்கச்சென்றவே. (௬௨)

சுழித்துநீர்வருதுறைஆற்றைச்சூழ்படை
கழித்துநீங்கியதெனக்கள்ளஆசையை
அழித்துவேறவனிபண்டாண்டவேந்தனை
இழித்துமேல்ஏறினான்தானும்ஏறினான். (௬௩)

தன்னனதம்பியும்தாயர்மூவரும்
சொன்னதேர்வலவனும்தூயதோழனும்
துன்னினர்ஏறலும்துழாதுடுப்பெனும்
நன்னயக்காலினல்நடத்தல்மேயினான். (௬௪)

(வேறு.) சுற்றத்தார்தேவரொடும்தொழநின்றகோசலையைத்தொழுதுநோக்கி
வெற்றித்தார்க்குரிசில்இவர்ஆர்என்றுகுகன்வினவவேந்தர்வைகும்
முற்றத்தான்முதற்றேவிமூன்றுலகும்ஈன்றானைமுன்ஈன்றானை
பெற்றத்தால்பெறும்செல்வம்யான்பிறத்தலால்துறந்தபெரியாள்என்றான்.

என்றலுமேஅடியின்மிசைநெடிதுவீழ்ந்தழுவானைஇவன்யார்என்று
கன்றுபிரிகாராவின்துயர்உடையகொடிவினவகழற்கால்மைந்தன்
இன்துணைவன்இராகவனுக்கிலக்குவற்கும் இளையவற்கும்எனக்கும்மூத்தான்
குன்றனையதிருநெடுந்தோட்குகன்என்பான்இந்நின்றகுரிசில்என்றான்.

நைவீர்அலிர்மைந்தீர்இனித்துயரால்நாடிறந்துகாடுநோக்கி
மெய்வீரர்பெயர்ந்ததுவும்நலம் ஆயிற்றாம்அன்றேவிலங்கல்திண்தோள்
கைவீரக்களிறனையகாளைஇவன்தன்னோடும்கலந்துநீர்கள்
ஐவீரும்ஒருவீர்ஆய்அகலிடத்தைநெடுங்காலம்அளித்திர்என்றாள்.

அறந்தானேஎன்கின்றஅயல்நின்றாள்தனைநோக்கிஐயஅன்பின்
சிறந்தாளைஉரைஎன்னநெறிதிறம்பாத்தன்மெய்யைநிற்பதாக்கி
இறந்தான்தன்இளந்தேவியாவர்க்கும்தொழுகுலம்ஆம்இராமன்பின்பு
பிறந்தானும்உளன்என்னப்பிரியாதான்தனைப்பயந்த பெரியாள்என்றான்.

சுடுமயானத்திடைதன்துணைஏகத்தோன்றல்துயர்க்கடலின்ஏக
கடுமைஆர்கானகத்துக்கருணைஆர்கலிஏகக்கழற்கால்மாயன்
நெடுமையால்அன்றளந்தஉலகெல்லாம் தன்மனத்தேநினைந்துசெய்யும்
கொடுமையால்அளந்தாளைஆர் இவர்என்றுரைஎன்னக்குரிசில்கூறும்.

படர்எலாம்படைத்தாளைப்பழிவளர்க்கும்செவிலியைத்தன்பாழ்த்தபாவிக்
குடரிலேநெடுங்காலம்கிடந்தேற்கும்உயிர்ப்பாரம்குறைந்துதேய
உடர்எலாம்உயிர்இலாஎனத்தோன்றும்உலகத்தேஒருத்திஅன்றே
இடர்இலாமுகத்தாளைஅறிந்திலையேல்இந்நின்றாள்என்னைஈன்றாள்.

(வேறு.) என்னக்கேட்டவ்இரக்கம்இலாளையும்
தன்னற்கையின்வணங்கினன்தாய்என
அன்னப்பேடைசிறைஇலதாய்க்கரை
துன்னிற்றென்னவும்வந்ததுதோணியே. (௭௧)

இழிந்ததாயர்சிவிகையின்ஏறத்தான்
பொழிந்தகண்ணில்புதுப்புனல்போயினான்
ஒழிந்திலனகுகனும்உடன்ஏகினான்
கழிந்தனன்பலகாவதம்காலினே. (௭௨)

பரத்தினீங்கும்பரத்துவன்என்னும்பேர்
வரத்தில்மிக்குயர்மாதவன்வைகிடம்
அருத்திகூரஅணுகினன்ஆண்டவன்
விருத்திவேதியரோடெதிர்மேவினான். (௭௩)

௰௧-வது. குகப்படலம்முற்றும். ஆ திருவிருத்தம் - ௧௦௩௭.

கம்பநாட்டாழ்வார்திருவடிகளேசரணம்.

---

## ௰௨-வது. கிளைகண்டுநீங்குபடலம்.

வந்தமாதவத்தோனைஅம்மைந்தனும்
தந்தைஆமெனத்தாழ்ந்துவணங்கினான்
இந்துமௌலிஅன்னானும்இரங்கினான்
அந்தம்இல்குணத்தாசிகள்கூறினான். (௧)

எடுத்தமாமுடிசூடிநின்பால்இயைந்
தடுத்தபேர்அரசாண்டிலேஐயநீ
முடித்தவார்சடைக்கற்றையைமுசுதா
சுடுத்துநன்றுதற்குற்றுளதியாதென்றான். (௨)

சினக்கொடுந்திறற்சிற்றவெந்தியினான்
மனக்கடுப்பினன்மாதவத்தோங்கலே
எனக்கடுத்தியம்பினைநீஎன்றான்
உனக்கடுத்ததும்அன்றாவோய்என்றான். (௩)

மறையின்கேள்வற்குமன்இளந்தோன்றல்பின்
முறையின்நீங்கிமுழுநிலம்கொள்கிலேன்
இறைவன்காக்கிலன்ஆமெனில்யாண்டெலாம்
உறைவென்கானத்தொருங்குடனேஎன்றான். (௪)

உரைத்தவாசகம்கேட்டலும்உள்எழுந்
திரைத்தகாதல்இருந்தவத்தோர்க்கெலாம்
குரைத்தமேனியொடுள்ளம்குளிர்ந்ததால்
அரைத்தசாந்துகொடப்பியதென்னவே. (௫)

ஆயகாதலோடையனைக்கொண்டுதன்
தூயசாலைஉறைவிடம்துன்னினான்
மேயசேனைக்கமைப்பென்விருந்தென
தீயின்ஆவுதிசெங்கையின்நீக்கினான். (௬)

துறந்தசெல்வன்சிலையத்துறக்கம்தான்
பறந்துவந்துபடிந்ததுபல்சனர்
பிறந்துவேறெருலகுபெற்றார்என
மறந்துவைகினர்முன்னைத்தம்வாழ்வெலாம். (௭)

நந்தல்இல்அறம்நந்தினர்ஆம்என
அந்தரத்தின்அரம்பையர்அன்பினர்
வந்துவந்தெதிர்ஏத்தினர்மைந்தரை
இந்துவிற்சுடர்கோயில்கொண்டேகினர். (௮)

கானம்நன்குழைத்தார்நளிர்வானிடை
ஆனகங்கைஅரும்புனல்ஆட்டினர்
தானமாமணிகற்பகம்தாங்கிய
ஊனம்இல்மலர்ஆடைஉடுத்தினர். (௯)

கொம்பின்நின்றுநுடங்குறுகொள்கையார்
செம்பொனின்கலராசிதிருத்தினர்
அம்பரத்தின்அரம்பையர்அன்பொடும்
உம்பர்கோன்நுகர்இன்அமிர்தூட்டினர். (௧௦)

அஞ்சடுத்தஅமளிஅலத்தகப்
பஞ்சடுத்தபரிபுரப்பல்லவ
நஞ்சடுத்தநயனியர்நவ்வியில்
துஞ்சஅத்தனைமைந்தரும்துஞ்சினர். (௧௧)

ஏந்துசெல்வத்திமையவர்ஆம்எனக்
கூந்தல்தெய்வமகளிர்கொண்டாடினர்
வேந்தர்ஆகிசிவிகையின்வீங்குதோள்
மாந்தர்காறும்வரிசைவழாமலே. (௧௨)

மாதர்யாவரும்வானவர்தேவியர்
கோதில்செல்வத்துவைகினர்கொவ்வைவாய்
தீதில்செல்வமடந்தையர்சேடியர்
தாதிமார்எனத்தம்பணிகேட்பவே. (௧௩)

நந்தநந்தவனங்களில்நாண்மலர்
கந்தம்உந்தியகற்பகக்காவில்நின்
றந்தர்வந்தெனஅந்திதன்கைதர
மந்தமந்தமணந்ததுவாடையே. (௧௪)

மான்றனிக்குலம்நன்மதம்வர்துணை
தேன்றளிர்த்தகவளமும்செங்கதிர்
கான்றநெற்றழைக்கற்றையும்கற்பகம்
ஈன்றளிக்கநுகர்ந்தனயானையே. (௧௫)

நாகதர்க்கறம்நல்குநலத்தநீர்
காகதக்கரிகால்நிமிர்த்துண்டன
மாகதத்தின்கொழுந்தெனவார்ந்தபுல்
ஞாகதத்தின்குழாங்களும்கொண்டவே. (௧௬)

இன்னர்இன்னணம்யாவரும்இந்திரன்
துன்னுபோகங்கள்துய்த்தனர்தோன்றல்தான்
அன்னகாயும்கிழங்கும்உண்டப்பகல்
பொன்னின்மேனிபொடிஉறப்போக்கினான். (௧௭)

நிலஅல்இருள்நீங்கலும்நீங்கும்அம்
மூலம்இல்கனவில்திருமுற்றுற
ஏலும்நல்வினைதுய்ப்பவர்க்கிறுசெல்
காலம்என்னக்கதிரவன்தோன்றினான். (௧௮)

ஆழியின்றறம்ஆற்றலர்வாழ்வென
பாழிவீய்ந்ததுசெல்வம்பரிந்திலர்
தேழிமூங்கைத்தம்சிந்தையர்ஆயினார்
மாழிவந்துபிறந்தன்னமாட்சியார். (௧௯)

(வேறு.) காலைஅன்றெழுந்ததுகண்டுவானவர்
வேலைஅன்றனிகமேஎன்றுவிம்அற
சோலையும்கிரிகளும்சுண்ணம்ஆய்எழ
மாலைசென்றடைந்ததுபரதன்சேனையே. (௨௦)

எழுந்ததுதுகள்அதின்எரியும்வெய்யவன்
அழுந்தினன்அவிப்பருவெம்மைஆயினான்
பொழிந்தனகரிமதம்பொடிவெங்கானகம்
இழிந்தனஅடிநடந்தேறுணாமையே. (௨௧)

வடிஉடைஅயிற்படைமன்னர்வெண்குடை
செடிஉடைநெடுநிழல்செய்ததிப்பொதி
படிஉடைப்பரல்உறைப்பாலைமேல்உயர்
கொடிஉடைப்பந்தரிற்குளிர்ந்ததெங்குமே. (௨௨)

பெருகியசெல்வம்பிடிஎன்றுள்வயின்
திருகியசிற்றத்தால்செம்மைஆய்திறம்
கருகியஅண்ணலைக்கண்டுகாதலின்
உருகியதளிர்த்தனஉலவைசாட்டமே. (உ௩)

வன்றெறுபாலையைமருதம்ஆம்எனச்
சென்றதுசித்திரகூடம்சேர்ந்ததால்
ஒன்றுனைத்துயிரினும்ஒழுக்கம்நன்றெனப்
பொன்றியபுரவலன்பொருவில்சேனையே. (உ௪)

தூளியின்படலையும்துரகம்தேரொடு
மூளிருஞ்சினக்கரிமுழங்கும்ஓதையும்
ஆளிருங்குழுவினர்ஆரவாரமும்
கோளிரும்படைஇதென்றுணரக்கூறவே. (உரு)

எழுந்தனன்இளையவன்ஏறினன்நிலம்
கொழுந்துயர்ந்தனையதோர்நெடியகுன்றின்மேல்
செழுந்திரைப்பரவையைச்சிறுமைபேசிய
கழுந்துடைவரிசிலைக்கடலைநோக்கினன். (உ௬)

பரதன்இப்படைகொடுபோர்கொண்டாள்மறம்
கருதிஉள்கிடந்ததோர்கறுவுகாதலால்
விரதம்உற்றிருந்தவன்மேல்வந்தான்இது
சரதம்மற்றிலதெனத்தழங்குசீற்றத்தான். (உ௭)

குதித்தனன்பாரிடைகுவடுநீறெழ
மிதித்தனன்இராமனைவிரைவின்எய்தினன்
மதித்திலன்பரதன்நின்மேல்வந்தான்மதிள்
பதிப்பெருஞ்சேனையின்பரப்பினன்என்றான். (உ௮)

கட்டினன்சுரிகையும்கழலும்பல்கணைப்
புட்டிலும்பொறுத்தனன்கவசம்பூட்டமைத்
திட்டனன்எடுத்தனன்வரிவில்ஏந்தலை
தொட்டடிவணங்கிநின்றினையசொல்லினன். (உ௯)

இருமையும்இழந்தஅப்பரதன்ஏந்துதோள்
பருமையும்அன்னவன்படைத்தசேனையின்
பெருமையும்நின்ஒருபின்புவந்தஎன்
ஒருமையும்கண்டினிஉவத்திஉள்ளம்நீ. (௩0)

படர்எலாம்படப்படும்பருமயானையின்
திடர்எலாம்உருட்டினதேருமீர்த்தன
குடர்எலாம்நிரைத்தனகுருதிஆறுகள்
கடர்எலாம்மடிப்பனபலவும்காண்டிஆல். (௩௧)

கருவியும்கைகளும்கவசமார்பமும்
உருவினஉயிரினோடுநிரம்தோய்வில
திரிவனகடர்க்கணைதிசைக்கையானைகள்
வெருவரச்செய்வனகாண்டிவீரநீ. (௩௨)

கோடகத்தேர்படுகுதிரைதாவிய
ஆடகத்தட்டிடைஅலகைஅற்றுரு
கேடகத்தடக்கைகள்கவ்விக்கீதத்தின்
நாடகம்நடிப்பனகாண்டிநாதநீ. (௩௩)

பன்முகிர்களிற்றொடுபரதன்சேனையின்
எண்முதல்அறுத்துநான்இமைப்பில்நீக்கலால்
விண்முதுகுளுக்கவும்வேலைஆடையின்
மண்முதுகாற்றவும்காண்டிவள்ளல்நீ. (௩௪)

சிவந்தவான்குருதியின்நீத்தம்நீந்திமெய்
செவந்தசாதகரொடுசிறுகட்கூளியும்
கவந்தமும்உலகம்நின்கையதாயதென்
றுவந்தனகுனிப்பனகாண்டிஉம்பர்போல். (௩௫)

சூழிவெங்கடகரிதுரகராசிகள்
பாழிவன்புயத்திகல்வயவர்பட்டற
வீழிவெங்குருதியால்அலைந்தவேலைகள்
ஏழும்ஒன்றுமின்றிரைப்பக்காண்டிஆல். (௩௬)

ஆள்அறஅலங்குதேர்அழியஆடவர்
வாள்அறவரிசிலைதுணியமாக்கரி
தாள்அறத்தலைஅறப்புரவிதாளொடும்
தோள்அறவடிக்கணைதொடுப்பக்காண்டிஆல். (௩௭)

தழைத்தவான்சிறையனதசையும்கவ்வின
அழைத்தவான்பறவைகள்அலங்குபொன்வடிம்
பிழைத்தவான்பகழிபுக்கிருவர்மார்பிடை
புழைத்தவான்பெருவழிபோவக்காண்டிஆல். (௩௮)

ஒருமகள்காதலின் உலகைநோய்செய்த
பெருமகன்ஏவலில்பரதன்தாள்பெறும்
இருநிலம்ஆள்கைவிட்டின்றென்ஏவலால்
அருநரகாள்வதுகாண்டிஆழியாய். (௩௯)

வையகம்துறந்துவந்தடவிவைகுதல்
எய்தியதுனக்கெனஇன்னைஈன்றவள்
நைதல்கண்டுவந்தவள்நவையின்ஓங்கிய
கைகயன்மகள்விழுந்தாற்றக்காண்டிஆல். (௪0)

ஆறாஞ்சுடஅழல்உமிர்அலங்கல்வேலினாய்
விராஞ்சொருநொடியில்இவ்அனிகவேலையை
உராஞ்சுடுவடிக்கணைஒன்றில்வென்றுமுப்
புராஞ்சுடும்ஒருவனிற்பொலிவென்யான்என்றான். (௪௧)

இலக்குவஉலகம்ஓர்ஏழும்ஏழும்நீ
கலக்குவன்என்பதுகருதினால்அது
விலக்குவதரிதுவிளம்பல்வேண்டுமோ
புலக்குரித்தொருபொருள்புகலக்கேட்டிஆல். (௪௨)

நங்குலத்துதித்தவர்நவையுள்நீங்கினர்
எங்குலப்புறுவர்கள்எண்ணில்யாவரோ
தங்குலத்தொருவரும்தருமம்நீங்கினர்
பொங்குலத்திரளொடும்பொருததோளினாய். (௪௩)

எனைத்துளமறைஅவைஇயம்பற்பாலன
பனைத்திரள்கரக்கரிப்பரதன்செய்கையே
அனைத்திறம்அல்லனஅல்லஅன்னது
நினைத்திலைஎன்வயின்நேயநெஞ்சினால். (௪௪)

பெருமகன்என்வயிற்பிறந்தகாதலின்
வரும்எனநினைகையும்மண்ணைஎன்வயின்
தரும்எனநினைகையும்தவிரத்தானையால்
பொரும்எனநினைகையும்புலமைப்பாலதோ. (௪௫)

பொன்னெடும்பொருகழற்பரதன்போந்தனன்
நன்னெடும்பெரும்படைநல்கல்அன்றியே
என்னெடும்பொரும்எனஇயம்பற்பாலதோ
மின்னெடும்பொருவுறவிளங்கும்வேலினாய். (௪௬)

சேணுயர்தருமத்தின்தேவைசெம்மையின்
ஆணியைஅன்னதுநினைக்கல்ஆகுமே
பூணியல்மொய்ம்பினாய்போந்ததின்றெனைக்
காணியன்றுஇதுபின்னும்காண்டியால். (௪௭)

என்றனன்இளவலைநோக்கிஎந்தையும்
நின்றனன்பரதனும்நிமிர்ந்தசேனையை
பின்றருகென்றுதன்புரிவில்காதலில்
தன்றுணைத்தம்பியும்தானும்முந்தினான். (௪௮)

தொழுதுயர்கையினன்துவண்டமேனியன்
அழுதழிகண்ணினன்அவலம்ஈதென
எழுதியபடிவம்ஒத்தெய்துவான்றனை
முழுதுணர்சிந்தையான்முடியநோக்கினான். (௪௯)

கார்ப்பொருமேனிஅக்கண்ணன்காட்டினான்
ஆர்ப்புறுவரிசிலைஇளையஐயநீ
தேர்ப்பெருந்தானையால்பரதன்சீறிய
போர்ப்பெருங்கோலத்தைப்பொருந்தநோக்கெனா. (௫௦)

எல்லொடுங்கியமுகத்திளவல்நின்றனன்
மல்லொடுங்கியபுயத்தவனைவைதெழும்
சொல்லொடும்சினத்தொடும்உணர்வுசோர்தர
வில்லொடும்கண்ணநீர்நிலத்துவீழவே. (௫௧)

கோதறத்தவம்செய்துகுறிப்பின்எய்திய
நாதனைப்பிரிந்தனள்நலத்துநீங்கினாள்
வேதனைத்திருமகள்மெலிகின்றாள்விடு
தூதெனப்பரதனும்தொழுதுதோன்றினான். (௫௨)

அறந்தனைநினைந்திலைஅருளைநீத்தனை
துறந்தனைமுறைமையைஎன்னும்சொல்லினான்
மறந்தனன்மலர்அடிவந்துவீழ்ந்தனன்
இறந்தனன்தாதையைஎதிர்கண்டென்னவே. (௫௩)

உண்டுகொல்உயிர்எனஒடுங்கினான்உரு
கண்டனன்நின்றனன்கண்ணன்கண்எனும்
புண்டரீகம்பொழிபுனல்அவன்சடா
மண்டலம்நிறைந்துபோய்வழிந்துசோரவே. (௫௪)

அயாஉயிர்த்தழுகணீர்அருவிமார்பிடை
உயாஉறத்திருஉளம்உருகப்புல்லினான்
நியாயம்அத்தனைக்கும்ஓர்நிலயம்ஆகினான்
தயாமுதல்அறத்தினைத்தழுவிஎன்னவே. (௫௫)

புல்லினன்நின்றவன்புனைந்தவேடத்தை
பன்முறைநோக்கினான்பலவும்உன்னினான்
அல்லலின்அழுங்கினைஐயவாளுடை
மல்உயர்தோளினாய்வலியனோஎன்றான். (௫௬)

அரியவன்உரைசெயப்பரதன்ஐயநின்
பிரிவெனும்பிணியினால்என்னைப்பெற்றஅக்
கரியவள்வரம்எனும்காலனால்தனக்
குரியமெய்நிறுவிபோய்உம்பரான்என்றான். (௫௭)

விண்ணிடைஅடைந்தனன்என்றவெய்யசொல்
புண்ணிடைஅயில்எனச்செவிபுகாமுனம்
கண்ணொடுமனம்சுழல்கறங்குபோலஆய்
மண்ணிடைவிழுந்தனன்வானின்உம்பரான். (௫௮)

இருநிலம்சேர்ந்தனன்இறைஉயிர்த்திலன்
உருமின்நைஅரஎனஉணர்வின்நீங்கினான்
அருமையின்உயிர்வரஅயர்உயிர்த்தகம்
பொருமினன்பன்முறைபுலம்பினான்அரோ. (௫௯)

(வேறு.) நந்தாவிளக்கனையநாயகனேநானிலத்தோர்
தந்தாய்தனிஅறத்தின்தாயேதயாநிலையே
எந்தாய்இகல்வேந்தர்ஏறேஇறந்தனையே
அந்தோஇனிவாய்மைக்கார்உளரோமற்றென்றான். (௬0)

சொற்பெற்றநோன்பின்துறையோன்அருள்வேண்டி
நற்பெற்றவேள்விநவைநீங்கநீஇயற்றி
எற்பெற்றுநீபெற்றநின்உயிர்போய்நீங்கலோ
கொற்பெற்றவெற்றிக்கொலைபெற்றகூர்வேலோய். (௬௧)

மன்உயிர்க்குநல்குரிமைமண்பாரம்நான்சுமக்க
பொன்உயிர்க்கும்தாரோய்பொறைஉயிர்த்தஆறிதுவோ
உன்உயிர்க்கும்கூற்றாய்உலகாளஉற்றேனே
மின்உயிர்க்கும்தீவாய்வெயில்உயிர்க்கும்வெள்வேலோய். (௬௨)

என்பரத்ததாக்கி அரசுரிமைநீத்தியங்கள்
வெம்பவத்தின்வியத்தவம்விளைத்தஆழிதுவோ
சம்பரப்பேர்த்தானவனைத்தள்ளிச்சதமகன்தன்
அம்பரத்தின்நீங்கா அரசளித்தஆழியாய். (௬௩.)

வேண்டுதிறத்தாரும்வேண்டா அரசாட்சி
பூண்டிவ்வுலகுக்கிடர்கொடுத்தபுல்லனேன்
மாண்டுமுடிவதல்லால்மாயாஉடம்பிதுகொண்
டாண்டுவருவதினிஆர்முகத்தேநோக்கவோ. (௬௪)

தேன்அடைந்தசோலைத்திருநாடுகைவிட்டு
கான்அடைந்தேன்என்னத்தரியாதுகாவலநீ
வான்அடைந்தாய்இன்னம்இருந்தேன்நான்வாழ்வுகந்தே
ஊன்அடைந்ததெவ்வர்உயிர்அடைந்தஒள்வேலோய். (௬௫)

வண்மையும்மானமும்மேல்வானவர்க்கும்பேர்க்கிலாத்
திண்மையும்செங்கோல்நெறியும்திறம்பாத
உண்மையும்எல்லாம்உடனேகொண்டேகினையே
தண்மைதிகைமதிக்கும்ஈய்ந்ததனிக்குடையோய். (௬௬)

என்றெடுத்துப்பற்பலவும்பன்னிஇட்டுழக்கும்
குன்றெடுத்தஒக்கும்குவவுத்தோள்கோள்அரியை
வன்றடக்கைத்தம்பியரும்மற்றுள்ளமன்னவரும்
சென்றெடுத்துத்தாங்கினார்மாவசிட்டன்தேற்றினான். (௬௭)

பன்னரியகோன்பின்பரத்துவனேஆதிஆம்
பின்னுசடையோரும்பேர்உலகம்ஓர்ஏழின்
மன்னவரும்மந்திரியர்எல்லாரும்வந்தடைந்தார்
தன்னுரிமைச்சேனைத்தலைவோரும்தாம்அடைந்தார். (௬௮)

மற்றும்வரம்பாலர்எல்லாரும்வந்தடைந்தார்
சுற்றும்இருந்தஅமைதியினில்துன்புழக்கும்
கொற்றக்குரிசில்முகநோக்கிக்கோமலரோன்
பெற்றபெருமைத்தவமுனிவன்பேசுவான். (௬௯)

(வேறு.) துறத்தலும்நல்லறத்துறையும்அல்லது
பறத்தொருதுணையிலைபொருந்தும்மன்உயிர்க்
கிறத்தலும்பிறத்தலும்இயற்கைஎன்பதை
மறத்தியோமறைகளின்வரம்புகண்டநீ. (௭0)

உண்மையில்பிறவிகள்உலப்பில்கோடிகள்
தன்மையில்வெம்மையில்தழுவினவ்வெனும்
வன்மையைநோக்கியவரியகூற்றின்பால்
கண்மையும்உளதெனக்கருதல்ஆகுமோ. (௭௧)

பெறுவதன்முன்உயிர்பிரிதல்காண்டிஆல்
மறுவறுகற்பினில்வையம்யாவையும்
அறுவதினாயிரம்ஆண்டும்ஆண்டவன்
இறுவதுகண்டவற்கிரங்கல்வேண்டுமோ. (௭௨)

சீலமும்தருமமும்சிதைவில்செய்கையும்
ஞாலமும்திகிரியும்சொல்லும்தாங்கிய
மூலம்வந்துதவியமூவர்க்காயினும்
காலம்என்றொருவலைகடக்கல்ஆகுமோ. (௭௩)

கண்முதற்காட்சியகணாஇல்நீளத்த
உண்முதற்பொருட்கெலாம்ஊற்றம்ஆவன
மண்முதற்பூதங்கள்மாயும்என்றபோ
தெண்முதல்உயிர்க்குநீஇரங்கல்வேண்டுமோ. (௭௪)

புண்ணியநறுநெயில்பொருவில்காலம்ஆம்
திண்ணியதிரியினில்விதிஎன்தீயினில்
எண்ணியவிளக்கவைஇரண்டும்எஞ்சினால்
அண்ணலேஅவிவதற்கையம்ஆவதோ. (௭௫)

இவ்வுலகத்தினும்இடரினேகிடந்
தவ்வுலகத்தினும்நரகின்ஆழ்ந்துபின்
வெவ்வினைதுய்ப்பனவிரிந்தயோனிகள்
எவ்வளவிற்செலஎண்ணல்ஆகுமே. (௭௬)

உண்டுகொல்இதுவலதுதவிநீசெய்வ
தெண்டகுகுணத்தினாய்தாதைஎன்றலால்
புண்டரீகத்தனிமுதற்கும்போக்கரு
விண்டுவின்உலகிடைவிளங்கினான்அரோ. (௭௭)

ஐயநீஆதொன்றும்அவலிப்பாய்அலை
உய்திறம்அவற்கினிஇதனின்ஊங்குண்டோ
செய்வனவரன்முறைதிருத்திச்சேந்தனின்
கையினால்ஒழுக்குதிகடன்எலாம்என்றான். (௭௮)

விண்ணுநீர்மொக்குளின்விளியும்யாக்கையை
எண்ணிநீஅழுங்குதல்இழுதைப்பாலதால்
கண்ணில்நீர்உகுத்தலில்கண்டதில்லைபோய்
மண்ணுநீர்உகுத்திதாமரைக்கையால்என்றான். (௭௯)

என்றபின்எந்தலைஎந்திவேந்தரும்
பொன்றிணிந்தனசடைப்புனிதனோடும்போய்ச்
சென்றனர்செறிதிரைப்புனலில்செய்கென
நின்றனர்இராமனும்நெறியைநோக்கினான். (௮௦)

புக்கனன்புனலினில்முழுகிப்போந்தனன்
தக்கான்மறையவன்சடங்குகாட்டத்தான்
முக்கையின்நீர்விதிமுறையின்ஈய்ந்தனன்
ஒக்கநின்றுயிர்தொறும்உணர்வுநல்குவான். (௮௧)

ஆனவன்பிறஉளஆவும்ஆற்றிப்பின்
மானமந்திரத்தவர்மன்னர்மாதவர்
ஏனையர்பிறர்களும்சுற்றஏகினன்
சானகிஇருந்தஅச்சாலைஎய்தினான். (௮௨)

எய்தியவேலையில்தமியள்எய்திய
தையலைநோக்கினன்சாலைநோக்கினான்
கய்களில்கண்மலர்புடைத்துக்கால்மிசை
அய்யன்அங்பாதன்வீழ்ந்தாற்றினான்அரோ. (௮௩)

வெந்துயர்தொடர்தரவிம்மல்விம்மநீர்
உந்தியநிரந்தரம்ஊற்றுமாற்றில
சிந்தியகுரிசில்அச்செம்மல்சேந்தகண்
இந்தியங்களில்எறிகடல்உண்டென்னவே. (௮௪)

அந்நெடுந்துயர்உறும்அரியவீரனை
தன்நெடுந்தடக்கையால்இராமன்தாங்கினான்
நன்நெடுங்கூந்தலைநோக்கிநாயகன்
என்நெடும்பிரிவினில்இறந்திட்டான்என்றான். (௮௫)

துன்எனும்நெஞ்சினாள்துளங்கினாள்துணைக்
கண்எனும்கடல்நெடுங்கலுழிகான்றிட
மண்எனும்செவிமேல்வைத்தகையினாள்
பண்எனும்கிளவியால்பன்னிஏங்கினாள். (௮௬)

கன்னருதிரள்புயக்கணவன்பின்செல
நன்னகர்ஒத்தது நடந்தகானமும்
மன்னவன் துஞ்சினன்என்றமாற்றத்தால்
அன்னமும்துயர்க்கடல்அடிவைத்தாள்அரோ. (அ௭)

ஆயவள்தன்னைநேர்த்தங்கைஎந்தினர்
தாயரின்முனிவர்தம்தருமபன்னியர்
தூயநீர்ஆட்டினர் துயரம்நீக்கினர்
நாயகற்சேர்த்தினர்நவையுள்நீங்கினர். (அஅ)

தேன்றரும்தெரியல்அச்செம்மல்நால்வரை
ஈன்றவர்மூவரோடீருமைநேர்க்குறும்
சான்றவர்குழாத்தொடும்தருமம்நோகுறும்
தோன்றல்பால்சுமந்திரன்தொழுதுதோன்றினான். (அகூ)

(வேறு.) எந்தையாண்டையான்இயம்புவீர்எனு
வந்ததாயர்தம்வயங்குசேவடி
சிந்தினின்றனன்சேந்தகண்ணிநீர்
முந்தைநான்முகத்தவற்கும்முந்தையான். (கூ0)

தாயரும்தலைப்பெய்துதாம்தழீஇ
ஓய்வில்அன்பினால்உரறல்ஒங்கினர்
ஆயசேனையும்அணங்கனார்களும்
தீயில்வீழ்ந்துதீமெழுகில்தேம்பினர். (கூக)

பின்னவ்வீரனைப்பெற்றபெற்றிஅப்
பொன்னனார்களும்சனகன்பூவையை
துன்னிமார்புறத்தொடர்ந்துபுல்லினர்
இன்னல்வேலைபுக்கிழிந்தழுந்துவார். (கூஉ)

சேனைவீரரும்திருநன்மாநகர்
மானமாந்தரும்மற்றுளோர்களும்
ஏனைவேந்தரும்பிறரும்யாவரும்
கோனைஎய்தினர்குறையும்சிந்தையார். (கூ௩)

படமசெய்நாகணைப்பள்ளிநீங்கினான்
இடம்செய்தொல்குலத்திறைவன்ஆதலால்
தடம்செய்தேரினான்தானும்நீரினால்
கடம்செய்வான்எனக்கடலில்மூழ்கினான். (கூ௪)

அன்றுநீர்த்தபின்அரசவேலையும்
நின்றுசெஞ்சடைத்தவரும்சுற்றமும்
துன்றுஇளத்திருத்தம்பிமார்களும்
சென்றுசூழஆண்டிருந்தசெம்மல்தான். (௯௫)

வரதன்துஞ்சினன்வையம்ஆணையால்
சரதம்இன்னதேமகுடம்தாங்கலாய்
விரதவேடம்நீஎன்கொல்வேண்டுவான்
பரதகூறெனப்பரிந்துகூறினான். (௯௬)

என்றலும்பதைத்தெழுந்துகைதொழா
நின்றுதோன்றலைநெடிதுநோக்கிநீ
அன்றியாவரோஅறத்துளோர்அதர்
பின்றுவாய்கொல்ஆம்என்னப்பேசுவான். (௯௭)

மனக்கொன்றுதனவரத்தில்நின்னையும்
இனக்கொன்றுநிலைநிறுவிநேமியான்
தனக்கொன்றுள்தரும்தனையன்ஆதலால்
எனக்கொன்றுதவம்அடுப்பதெண்ணினால். (௯௮)

கோவதாகஇவ்உலகைநோய்செய்த
பாவகாரியிற்பிறந்தபாவியேன்
சாவதோர்கிலேன்தவம்செய்வேன்அலேன்
யாவன்ஆகிஇப்பழிநின்றேறுவேன். (௯௯)

நிறையின்நீங்கியமகளிர்நீர்மையும்
பொறையின்நீங்கியதவமும்பொங்கருள்
துறையின்நீங்கியஅறமும்தொல்லையோர்
முறையின்நீங்கியஅரசின்முந்துமோ. (௧00)

பிறந்துநீஉடைப்பிரிவில்தொல்பதம்
துறந்துமாதவம்தொடங்குவாய்என்றால்
மறந்துநீதியில்திறம்பிவாளிற்கொன்
றறந்தின்றால்எனஅரசதாள்வெனோ. (௧0௧)

தொகையில்அன்பினால்இறைவன்துஞ்சநீ
புகையும்வெஞ்சுரம்புகுதப்புந்தியால்
வகையில்வஞ்சனாய்அரசுவவ்வயான்
பகைவனேகொல்ஆம்இறவுபார்க்கின்றேன். (௧0௨)

உந்தைநிமையும்உலகுறுதநோய்
தந்தநிவினைந்தாய்செய்நிமையும்
எந்தைநீங்கமீண்டரசுசெய்கென
சிந்தைஆவதும்தெரியக்கூறினன். (௧0௪)

சொற்றவாசகத்துணிவுணர்ந்தபின்
இற்றதோஇவன்மனம்என்றெண்ணுவான்
வெற்றிவிரயான்விளம்பக்கேள்என
முற்றநோக்கினன்மொழிதன்மேயினன். (௧0௫)

முறையும்வாய்மையும்முயலும்நீதியும்
அறையும்மேன்மையோடறனும்ஆகிஆம்
துறையுள்யாவைபும்சுருதிநூல்விடா
இறைவர்ஏவலால்இயைவகாண்அய்யா. (௧0௬)

பரவுகேள்வியும்பழுதில்ஞானமும்
விரவுசிலமும்வினையின்மேன்மையும்
உரவிலோய்தொழற்குரியதேவரும்
குரவரோஎனப்பெரிதுகோடிஆல். (௧0௬)

அந்தநற்பெருங்குரவர்ஆர்எனச்
சிந்தைதேர்வுறத்தெரியநோக்கினல்
தந்தைதாயர்என்றிவர்கள்தாம்அலால்
எந்தைகூறவேறெவரும்இல்லைஆல். (௧0௭)

தாய்வரம்கொளத்தந்தைஏவலால்
மேயநம்குலத்தருமம்மேவினேன்
நீய்வரங்கொளத்தவிர்தல்நீர்மையோ
ஆய்வரும்புலத்தறிவுமேவினய். (௧0௮)

தனையர்ஆயினர்தந்தைதாயரை
வினையின்நல்லதோர்இசையைவேய்தலோ
நினையல்ஓவிடாநெடியவன்பழி
புனைதலோஅய்யபுதல்வர்ஆதல்தான். (௧0௯)

இம்மைபொய்உரைத்திவறிஎந்தையார்
அம்மைவெம்மைசேர்நரகம்ஆளயான்
கொம்மைவெம்முலைக்குவையின்வைகிவாழ்
செம்மைசேர்நிலத்தரசுசெய்வெனோ. (௧௧0)

வானில்உந்தைசொல்மாறினல்லடை
தாணின்னதென்றியைந்ததன்மைமையால்
ஊனில்நீபிறந்துரிமைஆதலால்
அரசுஇன்னதேஆள்கஎன்னவே. (௧௧௧)

முன்னர்வந்துதித்துலகம்மூன்றினும்
நின்னைஒப்பிலாநீபிறந்தபார்
என்னதாகில்யான்இன்றுதந்தனென்
மன்னபோந்துநீமகுடம்சூடென்று. (௧௧௨)

மலங்கிவையகம்வருந்துவைகல்நீ
உலங்கொள்தோள்உனக்குறுவசெய்தியோ
கலங்குறுவணம்காத்திபோந்தென்று
[illegible]லாவுதாள்பூண்டுவேண்டினன். (௧௧௩)

[illegible]நின்வையம்என்
வசம்செய்தால்[illegible]முறைமையோவசைக்
[illegible]ந்தையாஅருள்அன்றுநான்
இசைந்தஆண்டெலாம்இன்றேடேறுமோ. (௧௧௪)

[illegible]மைஎன்னும்மாதன்றிவையகம்
[illegible]ன்றன்மைசொல்லுமோ.
மெய்மைதான்அகிலஇர்தல்அன்றியே
ஆய்மெய்ஆகவேறறையல்ஆவதே (௧௧௫)

எந்தைஏவஆண்டேழொடேழறு
வந்தகாலம்நான்வனத்துள்வைகநீ
தந்தபாரகம்தன்னைமெய்மையால்
அந்தநாள்எலாம்ஆள்என்ஆணையால். (௧௧௬)

(வேறு.) மன்னவன்இருக்கவேயும்மணிஅணிமகுடம்சூடி
கென்னயான்இயைந்ததன்றன்ஏயதுமறுக்கஅஞ்சி
அன்னதுநினைந்தும்நீஎன்ஆணையைமறுக்கல்ஆமோ
சொன்னதுசெய்திஐயதுயர்உழந்தயரல்என்றான். (௧௧௭)

ஒள்ளியோன்இனையஎல்லாம்உரைத்தலும்உரைக்கல்உற்ற
பள்ளநீர்வெள்ளம்அன்னபரதனைவிலக்கிப்பண்டு
தெள்ளியகுலத்தோர்செய்கைசிக்கறச்சிந்தைநோக்கி
வள்ளியோய்கேட்டிஎன்றுவசிட்டமாமுனிவன்சொன்னான். (௧௧௮)

(வேறு.) மிளர் அகன்புனலுள் மின்றிரி ஓர்சேழல்.ஆய்
இளை எனும்திருவினை ஏந்தினன் அரோ
உளைவரும்பெருமைஓர் எயிற்றின் உட்புனை
வளர் இளம்பிறையிடை மறுவில்தோன்றவே. (௧௧௯)

ஆகிய அமைதியின் இறுதிஇலம்பெரும்
பூதமும்வெளிஒழித்தெவையும்புக்கபின்
நாதன் அவ் அகன்புனல்கல்கிநண் அருஞ்
சோதிஆம்தன்மையில்துயில்தல்மேயினன். (௧௨௦)

ஏற்றஇத்தன்மையின் அமரர்க்கின்னமு
தூற்றுடைக்கடல்வணன்உந்திஉந்திய
நாற்றிதழ்க்கமலத்தின்நொய்தின்யாவையும்
தோற்றுவித்துதவிட முதல்வன்தோன்றினன். (௧௨௧)

அன்றவன்உலகினை அளிக்க ஆகிய
துன்றனிக்குலம்முதல்உள்ளவேந்தர்கள்
இன்றளவினும்முறைஇகந்துளார்இலை
ஒன்றுளதுணாஇனம்உணரக்கேட்டி ஆல். (௧௨௨)

இதவியல்இயற்றியகுரவர்யாரினும்
மதவியல்களிற்றினாய்மறுவில்விஞ்சைகள்
பதவியஇருமையும்பயக்கப்பண்பினால்
உதவியஒருவனேஉயரும்என்பர் ஆல். (௧௨௩)

என்றலால்யான்உனைஎடுத்துவிஞ்சைகள்
ஒன்றலாதனபலஉதவிற்றுண்மையால்
அன்றெனுகின்றெனதாணை அய்யநீ
நன்றுபோந்தளிஉனக்குரியநாடென்றான். (௧௨௪)

கூறியமுனிவனைக்குவிந்ததாமரை
சீறியகைகளாற்றொழுதுசெங்கணான்
ஆறியசிந்தனை அறிஞ ஒன்றுளா
கூறுவதுளதெனக்கூறல்மேயினான். (௧௨௫)

சான்றவர்ஆகதன்குரவர்ஆகதாய்
போன்றவர்ஆகமெய்ப்புதல்வர்ஆகதான்
தேன்றருமலர்உளான்சிறுவசெய்வென்என்
றேன்றபின்அவ்உரைமறுக்கும்ஈட்டதோ. (௧௨௬)

தாய்பணித்துவந்தனதந்தைசெய்கென
ஏயனப்பொருள்களும்இறைஞ்சிமேற்கொளா
நீயஅப்புலையனில்செய்கைதேர்கிலா
நாய்எனத்திரிவதுநல்லதல்லதோ. (௧௨௭)

முன்னுறப்பணித்தவர்மொழியையான்என
சென்னியிற்கொண்டதுசெய்வென்என்றநின்
பின்னுறப்பணித்தனைபெருமையோய்எனக்
கென்னினிச்செய்வதைஉரைசெய்ஈங்கென்றான். (௧௨௮)

முனிவனும்உரைப்பதோர்முறைமைகண்டிலெம்
இனிஎனஇருந்தனன்இளையமைந்தனும்
அனையதேல்ஆள்பவர்ஆள்கநாடுநான்
பனிபடர்காடுடன்படர்தல்மெய்என்றான். (௧௨௯)

அவ்வழிஇமையவர்அறிந்துகூடினார்
இவ்வழிஇராமனைஇவன்கொண்டேகுமேல்
செவ்வழித்தன்றுநம்செயல்என்றெண்ணினார்
கவ்வையர்விசும்பிடைக்கழறல்மேயினார். (௧௩௦)

எத்தரும்பெருங்குணத்திராமன்இவ்வழி
போத்தரும்தாதைசொல்புரக்கும்பூட்சியான்
ஆத்தஆண்டேழிரேடேழும்அந்நிலம்
காத்தல்உன்கடன்இவைகடமைஎன்றனர். (௧௩௧)

வானவர்உரைத்தலும்மறுக்கற்பாலதன்
றியான்உனைஇரந்தனன்இனிஎன்ஆணையால்
ஆனதோர்அமைதியின்அளித்திபார்எனு
றானவன்துணைமலர்த்தடக்கைபற்றினன். (௧௩௨)

# புத்தகவிளம்பரம்.

## பதிப்பித்தபுத்தகங்கள்.

| | |
|---|---|
| பெரியபுராணம் - ௧ - க்கு-புத்தகம்-௨-இரயம் | ரூபா - ௩. |
| திருக்கழுக்குன்றப்புராணமூலமுமுரையும் புத்தகம் - ௧ - க்கு | ரூபா - ௧ |
| திருவிரிஞ்சைப்புராணமூலமுமுரையும் புத்தகம் - ௧ - க்கு | அணா - ௮ |
| மேற்படிபிள்ளைத்தமிழ்புத்தகம் - ௧ - க்கு | அணா - ௨. |
| இராமாயணத்தில் அயோத்தியாகாண்டமூலம் புத்தகம்-௧-க்கு | அணா- ௧௨ |
| மேற்படி-ஆரணியகாண்டமூலம் புத்தகம் - ௧ - க்கு | அணா- ௧௨. |

## பதிப்பித்துக்கொண்டுவரும்புத்தகங்கள்.

திருவிளையாடற்புராணமூலமும்உரையும் *

கம்பராமாயணத்தில்உயுத்தகாண்டமூலம் *

பழனித்தலபுராணமூலமுமுரையும் *

திருவாய்மொழிக்கு பிரதிபதம் *

மேற்கண்டபுத்தகங்கள் - ம - ா - ா - ஸ்ரீ-வித்துவான் - கா - சபாபதி முதலியாரவர்களாலும் - திரிசிரபுரம் - கோவிந்தப்பிள்ளையவர்களாலும் பார்வையிடப்பட்டது. வேண்டியவர்கள் சென்னை பெத்துநாயக்கன்பேட்டை சிரங்கப்பட்டணம் சுப்பராயமுதலியார்வீதியில் (௨௬) வது கதவிலக்கமுள்ள வீட்டில் - புங்கத்தூர் - கந்தசாமிமுதலியாரிடத்தில் பெற்றுக்கொள்ளலாம். வெளிதேசத்தார் தபால்செலவுஅனுப்புவதுடன் தபால் முத்திரைக்கு - ரூபா-௧-க்கு - ௧ - அணாஅதிகமாய் மாற்றுவட்டம் அனுப்பவேண்டியது.

௨

# படலஅகராதி.



அட்டவணைமுற்றிற்று.

# பிழைதிருத்தம்.

| பக்கம். | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௨ | ௭ | ௧ | உற்றறு | உற்றது |
| ௧௧ | ௮௰ | ௧ | வுரை | யுரை |
| ௧௫ | ௧௨ | ௨ | கிணைக்கி | கிணக்கி |
| ,, | ௧௪ | ௩ | ஆளும்ம | ஆளும |
| ,, | ௧௯ | ௪ | டாகுமே | டாகுமோ |
| ௧௯ | ௨௨ | ௨ | கொளீஈ | கோளீஈ |
| ௨௰ | ௫௮ | ௪ | பிறலகி | பிறங்கில |
| ௩௧ | ௫௪ | ௨ | ராவியள் | ராவிய |
| ௩௪ | ௭௭ | ௧ | சங்கை | கங்கை |
| ,, | ௮௧ | ௩ | செப்பிறுள் | செப்பினுள் |
| ௩௯ | ௯ | ௪ | தாளரொ | தாளரோ |
| ௪௪ | ௪௩ | ௪ | பொய்மாறு | பொய்ம்மாறு |
| ,, | ௪௯ | ௪ | றியோ | றியோய் |
| ௪௯ | ௯௩ | ௧ | சூழுலத்து | சூழுலகத்து |
| ௪௮ | ௭௯ | ௨ | றெழிய | றெரிய |
| ௫௯ | ௧௪௨ | ௪ | மாணபு | மாண்பு |
| ௯௧ | ௩௮௰ | ௪ | மன்னுயிா | மன்னுயிர் |
| ௯௯ | ௮ | ௩ | பட்டகு | புட்டகு |
| ௭௯ | ௯௯ | ௩ | கற்கடகம் | கற்கடம் |
| ௮௧ | ௧௯ | ௨ | துள்பற | துன்பற |
| ௮௨ | ௨௯ | ௨ | வுணர் | உணர் |
| ,, | ௮௮ | ௨ | பொர் | போர் |
| ௮௯ | ௭ | ௩ | நாற்ற | நாற |
| ௯௮ | ௩௨ | ௩ | [illegible] | தெரிந்த |
| ௧௰௮ | [illegible] | ௧ | [illegible] | பாய் |
| ௧௧௧ | ௰ | ௰ | [illegible] | வேறு. |
| ௧௧௮ | ௧௩ | [illegible] | பிணியிக் | பிணியின் |
| ௧௨௨ | ௨௩ | ௪ | என்றுறை | என்றுரை |
| ,, | ௨௯ | ௨ | மண்ளினை | மண்ணினை |
| ,, | ௨௭ | ௨ | நிமிர்த்துள | நிமிர்ந்துள |
| ௧௨௪ | ௩௮ | ௩ | நீங்சிய | நீங்கிய |
| ௧௩௪ | ௪௰ | ௪ | வென | வென் |
| ௧௩௯ | ௫ | ௨ | தோர்க | தோர்க் |
| ௧௪௪ | ௭௰ | ௨ | பற | புற |
| ௧௪௭ | ௮௯ | ௩ | நோககு | நோக்கு |



பிழைதிருத்தல்முற்றிற்று.